தமிழ்ப் புத்தகாலயம்

# முள்வேலிகள்



நா. பார்த்தசாரதி

# முள் வேலிகள்

நா. பார்த்தசாரதி





தமிழ்ப் புத்தகாலயம்
58, டி.பி.கோயில் தெரு, திருவல்லிக்கேணி
சென்னை-600005

தொலைபேசி : 843226

முள் வேலிகள் (இரு நாவல்கள்)
முதற்பதிப்பு : ஆகஸ்டு, 1986

விலை ரூ. 16-00

MUL VELIGAL
novellets
by NAA. PARTHASARATHY

first edition : august, 1986
232 pages
10pt. letters
10.7 kg. white printing
18X12.5 Cms
box board binding
cover design: Sri Devi
poorcholai achagam, madras-5
TAMIL PUTHAKALAYAM
58, t. p. koil street
triplicane: ice house
madras - 600 005
phone : 843226
price : Rs. 16-00

அச்சிட்டோர் :
பூஞ்சோலை அச்சகம்
சென்னை - 5

# முன்னுரை

இத் தொகுதியில் என்னுடைய இரண்டு நாவல்கள் (குறு நாவல்கள் என்ற பெயர்தான் உங்களுக்குப் பிடிக்குமானால் எனக்கும் ஆட்சேபணையில்லை) உள்ளன. 'விரோத வெள்ளம் வடிந்தபின்' ஒரு பகைமை முற்றிய மனம் நல்ல படி மாறுவதைச் சித்திரிக்கும் 'முள் வேலிகள்' என்ற நாவலும், அழகுள்ள ஆண்மகனைவிடச் சமூக உணர்வுள்ள ஓர் ஆண்பிள்ளையைத்தான் பெண் நேசிக்க முடியும் என்று கூறுகிற சுலட்சணாவை அறிமுகப்படுத்தும்—'சுலட்சணா காதலிக்கிறாள்' என்ற நாவலும் சேர்ந்தது இப்புத்தகம். அதாவது இரண்டு முழு நாவல்கள் அடங்கிய ஒரே புத்தகம்.

இவ்விரண்டு நாவல்களும் சில சில பக்கங்கள் வீதம் பல வாரங்கள் தொடராக வெளிவந்து பின்பு ஒன்றாக நூலாக்கியவை அல்ல. முழுமையாக எழுதப்பட்டு வெளிவந்து முழுமையாகவே இன்று புத்தக வடிவிலும் வருபவை.

அக்கம் பக்கத்திலுள்ள பிறர் தனக்கு விரோதிகளோ என்கிற வீண்கற்பனையில் ஒவ்வொரு மனிதனும் தன்னைச் சுற்றித் தானே அநாவசியமாக ஒரு முள்வேலி போட்டுக் கொள்கிறான். அந்த வேலி தகரும்போதுதான் உண்மை அவனுக்குப் புரிகிறது. விரோதம் என்கிற வெள்ளம் வடிந்தபின்பே கண்ணனுக்கும் உண்மை புரிகிறது. சுற்றி இருந்த முள்வேலிகள் தகர்கின்றன. மனிதனோடு மனிதனைப் பற்றிய முக்கால்வாசி விரோதங்கள் கற்பிதமானவை. அவை தவிர்க்க வேண்டியவை-தவிர்க்க முடிந்தவை-தவிர்க்கக் கூடியவை என்பது முதல் நாவலில் விவரிக்கப்படுகிறது.

இரண்டாவது நாவல் 'சுலட்சணா காதலிக்கிறாள்'— என்பது. பணமும் படிப்பும் முகவசீகரமுமுள்ள ஒரு பயந்தாங் கொள்ளியைவிட வறுமையும், அழகின்மையும் உள்ள ஒரு தைரியசாலியைத் தன் பிரியத்துக்குரியவனாகத் தேர்ந்தெடுக்கும் புதுமைப் பெண்ணாகிய சுலட்சணாவின் கதை இது. வசதியும், அறிவும் வசீகரமும், உள்ள ஒரு பரம்பரைப் பணக்கார இளைஞனைவிடப் பொதுவாழ்வில் 'சிவிக் கரேஜ்' என்கிற சமூகத் துணிச்சலோடு 'ரிஸ்க்' எடுத்துக் கொள்ளத்

துணிந்து முன்வருகிற ஒரு சாதாரண இளைஞனையே சுலட்சணுவால் காதலிக்க முடிகிறது. இது ஒரு நுணுக்கமான மனோதத்துவக் கதை. ஒரு ரெஸிடென்ஷியல் பல்கலைக் கழகச் சூழ்நிலையில் எழுதப்பட்டிருக்கிறது. துணைவேந்தர், ஆக்டிங் வி. சி. எல்லாரும் வருகிருர்கள். போராட்டம் வருகிறது. அரசியல் பின்னணி, சூழ்நிலை எல்லாம் கூட வருகின்றன. ஆனல் கதைக்கு மையமானவள் சுலட்சணு தான். அவளைச் சுற்றியே கதை நடக்கிறது. கதையைச் சுற்றி அவள் நடக்கவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும்.

இந்த இரு நாவல்களும் இப்போது என் நூல்களைத் தொடர்ந்து வழக்கமாக வெளியிடும் தமிழ்ப்புத்தகாலயத்தார் மூலம் உங்கள் கைக்கு வருகின்றன. படியுங்கள். சிந்தியுங்கள். கருத்துக்களைக் கலந்து பரிமாறவும் வாசகர்களாகிய உங்களுக்குத் தாராளமான உரிமை இருக்கிறது. கருத்துப் பரிமாற்றம் மூலமே விமரிசனமும் வளர முடியும். இலக்கியப் படைப்பும் வளர முடியும் என்ற நம்பிக்கை உடையவர்களில் யானும் ஒருவன். முன் கூட்டியே தீர்மானித்துக் கொள்ளப் பட்டு விடுகிற நிர்ப்பந்தமான விருப்பு வெறுப்புக்களோடு எந்த ஒரு நூலையும் அணுகும் பழக்கம் இலக்கிய உலகில் தவிர்க்கப்பட வேண்டும். திறந்த மனத்தோடு ஒரு நூலை அணுகிப் படித்து அதன்பின் முடிவு செய்வதே இயல்பான விமர்சன நிலை. ஆனல் இன்று விமர்சகர்களில் பலருக்கும் வாசகர்களில் சிலருக்கும் அத்தகைய இயல்பான விமர்சன மனப்பான்மை இல்லை என்பதால்தான் இதை இந்த முன்னுரையில் சற்றே அழுத்திச் சொல்ல வேண்டியிருக்கிறது.

இனி நீங்கள் புத்தகத்தைப் படிக்கலாம்.

தீபம்
சென்னை-600002
27—8—1986

நா. பார்த்தசாரதி

# முள்வேலிகள்

## 1

இரண்டு வீடுகளுக்கும் நடுவில் வெறுப்பும் பகையும் எப்போது, எதனால் முளைத்து வளர்ந்தன என்று சரியாகச் சொல்லமுடியவில்லை. என்றோ எப்படியோ தொடங்கிப் படிப்படியாய் வளர்ந்து முற்றிவிட்டது. இருவரில் ஒருவர் அங்கிருந்து போகவும் வழி இல்லை. இருவருக்குமே அவை சொந்த வீடுகள். கண்ணனுக்கு அந்த எக்ஸ்டென்ஷனில் அந்த வீடு ஒதுக்கப்பட்டபோது பக்கத்து வீடு யாருக்கு அலாட் ஆகியிருக்கிறது என்று அவன் கவனிக்கவோ அக்கறை எடுத்துக்கொண்டு விசாரிக்கவோ செய்யவில்லை. அடையாற்றில் போய்க் கலக்கும் ஒரு கால்வாய் பின்புறம் வீடுகளை ஒட்டியிருப்பதும் ஒரு தடையாக அன்று படவில்லை. எங்காவது எப்படியாவது சொந்தம் என்று சொல்லிக் கொள்ளும்படி ஒரு கையகல இடம் கிடைத்தால் போதும் என்று தேடித் தேடித் தவித்த அவன் அது கிடைத்து விட்டது என்பதிலேயே திருப்தியடைந்து விட்டான்.

பக்கத்து வீடு 'அலாட்' ஆகி ஆட்கள் குடிவந்ததும் கூட அது அவன் கவனத்தைக் கவரவில்லை. தற்செயலாகத் தேடிவந்த நண்பன் ஒருவன்—அவன் திரை உலகில் தொடர்புள்ளவன்—தான் முதலில் பக்கத்து வீட்டைப் பற்றிக் கண்ணனின் காதில் மெல்லக் கிசுகிசுத்துவிட்டுப் போனான்.

''உன்னோட நெய்பர் யாரு தெரியுமா?''

''தெரியாது. அந்த வீட்டிலே ஆண்கள் யாரையுமே காணலே. ஒரே அல்லி ராஜ்யமா இருக்குதுங்கிறது மட்டும் தெரியும்.''

''அல்லி ராஜ்யம் மட்டுமில்லே. நான் சொல்லக் கூடாது. நீயே போகப் போக எல்லாம் தெரிஞ்சுக்குவே. ஒரு வயசான கிழவியும் நாலைந்து இளசுகளும்தான். சிவப்பு விளக்குப் பகுதியா இந்த இடத்தையே மாற்றிடப் போறாங்க. கிழவி பலே ஆள்.''

''உனக்கு எப்படித் தெரியும் இதெல்லாம்?''

''நல்லாவே தெரியும்,'' என்று குறுஞ்சிரிப்போடு கண்களைச் சிமிட்டினான் நண்பன்.

''மாலா—பாலா நாட்டியக் கலைஞர்கள்னு வாசல்லே போர்டு இருக்கா, இல்லியா?''

''இருக்கு.''

''நாட்டியம் மட்டுமில்லே. வேற இரண்டு குட்டிங்க 'எக்ஸ்ட்ரா,' லயன்லியும் வந்து போவுது.''

''எக்ஸ்ட்ரா லயன்னா?''

''எங்க சினி பிஸினஸ்லே ஆரம்ப முயற்சிகளில் தட்டுத் தடுமாறி நுழையறவங்களுக்கு நாங்க வச்சிருக்கிற தோதான பெயர்.'' சொல்லிவிட்டு மறுபடியும் நமட்டுச் சிரிப்புச் சிரித்தான் நண்பன.

கண்ணனின் மனத்தில் பக்கத்துவீட்டைப்பற்றிய முதல் சந்தேகமும் அருவருப்பும் வெறுப்பும் படரத் தொடங்கியது அப்போதுதான். வீட்டில் ஆண்களே இல்லாததும் வெளியிலிருந்து நிறைய ஆண்கள் தேடிவந்து விட்டுப் போவதும் இந்தச்சந்தேகத்தை மேலும் உறுதிப்படுத்தின.

நண்பனோ மேலும் கிண்டலாக மனத்தில் தைக்கிற மாதிரிச் சொன்னான்:

“நாளைக்கு உன் வீட்டை அடையாளம் சொல்றவங்களே, அந்த ‘ரெகார்ட் டான்ஸ்’ பொண்ணுங்க வீட்டுக்குப் பக்கத்து வீடுன்னோ, ‘ஒருமாதிரி நாலைஞ்சு பொண்ணுங்க இருக்குதே அதுக்குப் பக்கத்து வீடுன்னோ’தான் சொல்லப் போறாங்க.”

“முன்னாடி நீயே நாட்டியம்னு சொன்னியே, இப்போ திடீர்னு ‘ரெக்கார்ட் டான்ஸ்’னு சொல்றே?”

“நாட்டியம்னு சும்மா ஒரு கௌரவத்துக்காக அவங்க போர்டு மாட்டியிருக்காங்க. ஆனா சாஸ்திரிய நாட்டியம்னா வீசை என்ன விலைன்னுகேட்பாங்க.பாலசரஸ்வதியா பாழ் போகுது? சினிமாவிலே வர்ற சீப் சாங்ஸுக்கு ‘எலந்தப் பயம்—எலந்தப் பயம்’னு வருமே அதுமாதிரிப் பாட்டை ரெக்கார்டுலே சுத்த விட்டுக் கையைக் காலை ஆட்டிக் கவர்ச்சியா ஆடினாக் கூட்டம் விசிலடிச்சிக்கிட்டு வாயைப் பொளந்து பார்க்கும். ரூவா நோட்டு, காசு எல்லாம் கூட வீசி எறிவாங்களே.”

“அதுலே சம்பாதிச்சே வீடு வாங்கிட்டாங்களா?”

“அதுன்னா அதுமட்டுமா? இன்னும் பலதும் பண்றாங்க. பணம் குமியுது.”

“வீட்டு வசதி போர்டு யாருக்கு வேணும்னாலும் வீடு அலாட் பண்ணலாம். அதை நாம எப்படியப்பா தடுக்க முடியும்? கௌரவமான குடும்பங்களுக்கு நடுவிலே இப்படிக் கண்ட கண்ட ஆட்களும் கூட வந்து குடியேறிடுவாங்க. நடுவிலே நாம தான் கிடந்து அவஸ்தைப்படணும்.”

"வேளை கெட்ட வேளையிலே தடுமாறிப் போய்க் குடிச்சிட்டுக் கிடிச்சிட்டு வந்து கதவைத் தட்டினா வீடு தெரியாம உன் வீட்டுக் கதவைக்கூட வந்து தட்டுவாங்க. ஜாக்கிரதை."

பக்கத்து வீட்டு ஆட்கள் பற்றி இப்படியொரு விவரம் தெரியவந்ததும் கண்ணன் அதிர்ந்து போனான். அவர்களை இனி அங்கிருந்து கிளப்புவது என்பது அவ்வளவு சுலபமான காரியம் இல்லை என்றாலும் அப்படிக் கிளப்ப முயன்று பார்க்க வேண்டுமென்ற வெறுப்பும் விரோதமும் அவனுள் மூண்டன. நெருங்கிப் பழகி அறிந்துகொள்ள நேரும் முன்பே பல காலம் கலந்து பழகி அதன் கசப்பான விளைவுகளால் மூண்டது போன்றதொரு குரோதம் எப்படியோ மூண்டு விட்டது. அல்லது மூட்டப்பட்டு விட்டது.

முதலிலேயே விழுந்துவிட்ட இந்த அபிப்பிராயம் பக்கத்து வீட்டு அம்மிணி அம்மாவுடனோ அவள் வளர்த்த ஐந்து பெண்ணழகிகளோடோ அவன் பேசவும், பழகவும் செய்யாமலே தடுத்து அவர்களைக் கண்ணை மூடிக் கொண்டு வெறுக்கும்படி செய்துவிட்டது.

கண்ணன் இந்த விவரத்தை முதலில் வேறு யாருக்கும் சொல்ல வேண்டாமென்றுதான் நினைத்தான். நாமாகப் போய் மற்றவர்களிடம், 'எங்க பக்கத்து வீடு இப்படி...' என்று டமாரம் அடிக்கக் கூடாது என்பதுதான் முதலில் அவன் எண்ணமாயிருந்தது.

அந்த எக்ஸ்டென்ஷனில் முதலில் குடிவந்த பத்துப் பதினைந்து வீடுகளில் இருந்தவர்களை ஒன்று சேர்த்துக்

'காலனி வெல்ஃபேர் அசோசி'யேஷன் என்று ஒரு சங்கம், ஆரம்பிக்க வேண்டிய அவசியம் நேர்ந்தது. இன்னும் பல வீடுகள் வீட்டு வசதி வாரியத்தால் கட்டி முடிக்கப்பட வில்லை. கட்டி முடித்த வீடுகள் சிலவற்றில் அதன் உரிமையாளர்கள் குடியேறவில்லை. அதில் கண்ணனின் மற்றொரு பக்கத்து வீட்டுக்காரரும் ஒருவர். வலது பக்கத்து வீடுதான் அம்மிணி அம்மாளினுடையது என்றால் இடது பக்கத்து வீடு இன்னும் ஆள் குடியேறாமல் காலியாயிருந் தது. அதிலாவது நல்ல மனிதர் ஒருவர் வந்து குடியேற வேண்டுமே என்ற கவலை அவனுக்கு இருந்தது. தேடிப் பிடித்து விசாரித்ததில் அது ஒரு கதாகாலட்சேபக்காரருக்கு 'அலாட்' ஆகியிருந்தது. 'ஹித பாஷாப்ரவீண இஞ்சிக்குடி நாகசாமி பாகவதர்'—என்ற பேரும் பிரபலமாகக் கேள்விப் பட்ட பெயராயிருந்தது.

அவர் இன்னும் காலனிக்குள் குடியேறவில்லை என்றாலும் ராமநாதன் தெருவில் அவர் வாடகைக்குக் குடியிருந்த வீட்டைத் தேடிப் போய்ப் பேசி அவரையும் காலனி நலம் நாடுவோர் சங்கத்தில் உறுப்பினராக்கிய கண்ணன், பக்கத்து வீட்டு அம்மிணி அம்மாவை மட்டும் கடைசிவரை யில் கண்டு கொள்ளவே இல்லை.

அந்தப் பேட்டைவாசி என்ற முறையில் சங்கத்தில் உறுப்பினராக அந்த அம்மாளுக்கு எல்லா உரிமையும் இருந் தாலும் கண்ணனால் அம்மிணி அம்மாவைச் சேர்க்க முடிய வில்லை. சேர்க்க விரும்பவில்லை என்பதுதான் உண்மை.

கண்ணன் வெறுப்பும் சந்தேகமுமாக ஒரு போலீஸ் காரனின் சி. ஐ. டிக் கண்களோடு அந்த வீட்டைக்

கவனித்து வந்தான். கண்ணனின் வீடு—வீட்டு வசதி வாரியம் அவனிடம் எப்படி ஒப்படைத்ததோ—அப்படியே இருக்க அம்மிணி அம்மாவின் வீடு மட்டும் ஒரு மினி பங்களாவைப் போல் புதிதாக மாறி வளர்ந்து மின்னியது. பூந்தொட்டிகள். சிறு தோட்டம். நடுவாகப் பசும்புல்வெளி. கேரளாவில் அவளுடைய பூர்வீக ஊரின் பெயரையே வீட்டின் பெயராக்கிப் 'பொன்குன்னம்' என்று ஒரு பக்கத்துத் தூணில் ஆங்கிலத்திலும் மறுபக்கத்துத் தூணில் மலையாளத்திலுமாகச் சலவைக் கல்லில் செதுக்கிப் பதித்திருந்தாள். வீடு பளிச்சென்று ஸ்நோசெம் பூசிக் கொண்டு கம்பீரமாக நின்றது. தோட்டத்தின் எந்த மூலையிலும் அழுக்கோ குப்பையோ இல்லை.

அதிகாலையில் பளிச்சென்று நீராடி ஈரக் கூந்தல் முதுகில் புரள நெற்றியில் சந்தனக்கீற்றுடன் திண்ணை முகப்பில் குத்து விளக்கு ஏற்றிவைத்து ஸ்ரீகிருஷ்ண ஸ்தோத்திரம் சொல்லும் அம்மிணி அம்மாவைப் பார்த்தால் 'இந்தப் பூனையும் இந்தப் பாலைக்குடிக்குமா?' என்று தான் கேள்விப்பட்டதை நினைத்துக்கொள்வான் கண்ணன். அந்த வீட்டின் மினுமினுப்பு, அழகு, சுத்தம் இவை எல்லாம் வேறு அவனுடைய எரிச்சலை அதிகமாகிவிட்டன. "ஒழுங்கா முறையா உழைச்சுச் சம்பாதிச்ச பணமாயிருந்தா இப்பிடி ஸ்நோஸெம்மும் டிஸ்டெம்பரும் அடிச்சு மினுக்க முடியாது. தாறுமாறாகச் சம்பாதிச்ச காசு எப்படி எப்படியோ செலவழியிது"—என்று தனக்குத்தானே பொருமினான் அவன்.

வீட்டுவசதி வாரியம் அவர்களுக்குரிய நிலப் பரப்பையும் அந்த நிலப் பரப்பில் கட்டிய வீட்டையும் ஒதுக்கீடு செய்யும்

போது வீடுகளுக்கிடையே முள்வேலியோ காம்பவுண்டுச் சுவரோ எடுத்துக்கொடுக்கவில்லை. எல்லைக் கல் மட்டும் நட்டு அப்படி அப்படியே விட்டிருந்தார்கள். உரியவர்கள் அவரவர்களுடைய வசதிக்கேற்ப காம்பவுண்டுச் சுவரோ முள்வேலியோ எடுத்துக் கொள்ளத் தடையில்லை.

கண்ணனுடைய இருபக்கத்து வீடுகளுக்கும் காம்பவுண்டுச் சுவர் கிடையாது. வலது பக்கம் முழங்கால் உயரம் வளரும்படி சவுக்கு வளர்த்துக் கத்திரித்து விட்டிருந் தார்கள். இடதுபுறம் எதுவுமே இல்லை.

ஒருநாள் மாலை அலுவலகம் முடிந்து வீடு திரும்பும் போது தன் மனைவி சுகன்யா சவுக்கு வேலி ஓரமாக நின்று பக்கத்து வீட்டு அம்மிணி அம்மாவோடு சிரித்துச் சிரித்துப் பேசிக்கொண்டிருப்பதைக் கண்ணனே பார்த்துவிட்டான், அவனுள் எரிச்சல் மூண்டது.

அவன் வீட்டுக்குள் நுழைந்து சட்டையைக் கழற்றி உடுப்பு மாற்றி முகம் கழுவிக்கொண்டு வருகிறவரை கூட அவன் மனைவி அம்மிணி அம்மாவிடம் பேசுவதை முறித்துக் கொண்டு உள்ளே திரும்பி வந்தபாடில்லை. மேலும் எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது அவனுக்கு.

''சுகன்யா! சுகன்யா!''— வீடே பிளக்கிற மாதிரிக் குரலில்கூப்பாடு போட்டு அவளை அழைத்தான் அவன்.

காப்பியும் கையுமாக,'' எதுக்கு இப்படிக் கூப்பாடு?''— என்ற கேள்வியோடு வந்த சுகன்யாவைக் கோபமாக முறைத்தான் அவன்.

''எத்தனை நாளாக இப்படிப் பக்கத்து வீட்டோடு இழைந்தாகிறது?''

''ஏன்? அதுக்கென்ன?''

"அத்தனை நல்ல சகவாசமில்லை. இன்னிக்கோட விட்டுத் தொலை! அவ்வளவுதான் சொல்லுவேன்."

"நீங்க நினைக்கிற மாதிரி எல்லாம் இல்லே! அந்தம்மா ரொம்ப நல்ல மாதிரியாக்கும்."

"சீ! வாயை மூடு! உனக்கு எல்லாம் தெரிஞ்சமாதிரிப் பேசாதே...வேண்டாம்னா வேண்டாம்."

"உடனே முடியாது! படிப்படியாக் குறைச்சுக்கிறேன்."

## 2

காலனி நலம் நாடுவோர் சங்கத்தின் உறுப்பினர்கள் சந்தித்து நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தனர். ஆரம்பமுதல் அந்தச் சங்கத்தை அமைக்கப் பாடுபட்டவன் என்ற முறையில் கண்ணனையே அதன் செயலாளராயிருக்கும்படி மற்ற எல்லோரும் வற்புறுத்தினார்கள், அவனாலும் அதைத் தட்ட முடியவில்லை.

ஓய்வு பெற்ற போஸ்ட்மாஸ்டர் ஒருவர்—அந்தக் காலனி வாசியாயிருந்தார்—அவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்து விட்டார்கள்.

செயற்குழு உறுப்பினர்கள் என்று சங்க வளர்ச்சிக்குப் பாடுபட வேண்டிய சிலரையும் தேர்ந்தெடுத்து விட்டார்கள். புதிதாக வீடுகள் ஒதுக்கப்பட்டுக் காலனிக்குள் குடியேறுகிற ஒவ்வொருவரையும் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்க்க வேண்டும் என்றும் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

அந்தச் சமயத்தில் கூட, 'அவர்களாகவே சேர முன் வந்தாலும் கூட நாம் சிலரை உறுப்பினராகச் சேர்க்கக் கூடாது. சிலரால் இந்தப் பேட்டையின் நற்பெயருக்கே

களங்கம் உண்டாகிவிடும். அவர்களை நாம் நமது சங்கத்திலிருந்து ஒதுக்கியே வைத்தாக வேண்டும், என்று கண்ணன் வெளிப்படையாகப் பிரகடனம் எதுவும் செய்யவில்லை. தன்னைமீறி யாரும் உள்ளே நுழைந்து விட முடியாது என்ற நம்பிக்கையில் பேசாமல் இருந்துவிட்டான். எப்படியானாலும் ஒருவருடைய உறுப்பினர் விண்ணப்பம் கமிட்டியின் பரிசீலனைக்கு வந்த பின்பே ஏற்கப்படும் என்ற பாதுகாப்பான விதியிருந்தது.

கண்ணன் முற்றிலும் எதிர்பாராதவிதமாக அடுத்த கமிட்டிக் கூட்டத்திலேயே அவனுக்கு ஒரு சிறு அதிர்ச்சி காத்திருந்தது.

கமிட்டியின் வழக்கமான அஜெண்டாவிலிருந்த மின்சார விளக்குகள், சாலை வசதி, குடிநீர்ப் பிரச்சினை எல்லாம் விவாதிக்கப்பட்டு முடிந்தபின் நிரந்தர இறுதி அயிட்டமான புதிய 'உறுப்பினர் சேர்த்தல்' என்பதை யார் புதிதாகச் சேர்ந்திருக்கப் போகிறார்கள் என்ற அசட்டையோடும், அசிரத்தையோடும் தலைவர் படித்தபோது ஒரு கமிட்டி உறுப்பினர், "பி. கே. அம்மிணி அம்மா, பதினொன்று மேற்கு கிராஸ் முதல் தெரு, ரூ. 10—" என்று பேரையும் பத்துரூபாய் நோட்டையும் பூர்த்தி செய்த உறுப்பினர் விண்ணப்பத்தையும் செயலாளரான கண்ணனிடம் எடுத்து நீட்டினார்.

தனக்குப் பிடிக்காத தன் பக்கத்து வீட்டுப் பெண்மணி தன் கவனமின்றியே நலன் நாடுவோர் சங்கத்துக்குள் நுழைய முயல்வதைக் கண்ணன் உணர்ந்து கொண்டான். உடனே உஷார் ஆனான்.

"இந்த விண்ணப்பத்தை உடனே ஏற்கக்கூடாது. இதைப் பற்றிக் கொஞ்சம் யோசிக்க வேண்டியிருக்கிறது."

கண்ணனின் இந்த ஆட்சேபணை அம்மிணி அம்மாவைத் தேடிப் போய் உறுப்பினராகச் சேர்த்துக் கொண்டு

வந்திருந்த அச்சுதன் என்ற கமிட்டி மெம்பருக்கு ஒரு தன் மானப் பிரச்னையாகி விட்டது. உடனே அவர் கிளம்பினார்:

“உழக்குலே கிழக்கு மேற்குப் பார்க்கிறது சரிப்படாது, இதிலே யோசிக்க என்ன இருக்கு?”

“அதுக்கில்லே! குடும்பத் தலைவரோ ஆண் பிள்ளை களோ இல்லாத வீடுகளை மெம்பராக்கறதுலே சில சிக்கல் கள் வரும்னு நினைக்கிறேன்.”

“இப்பிடி ஆண் உறுப்பினர், பெண் உறுப்பினர்னு பேதப்படுத்தறது நல்லா இல்லே.”...

காலனியின் ஒரே தமிழ்ப்புலவரான மகிழ்மாறன் உடனே குறுக்கிட்டு, “தயவுசெய்து ஆண் பெண், என்று மட்டும் கூறுங்கள்! ஆண் உறுப்பினர் பெண் உறுப்பினர்ங் கிறது கேட்க நல்லா இல்லே”—என்றவுடன்ஒரே சிரிப்பலை கள் கிளம்பி ஓய்ந்தன.

சிறிது நேரம் விவாதம் வேறு திசையில் போய்விட்டுத் தட்டுத் தடுமாறி மறுபடி பழைய இடத்துக்கே திரும்பி வந்தது.

“மிஸ்டர் கண்ணன் தன் பக்கத்து வீட்டுக்காரர் உறுப் பினராவதை ஏன் தடுக்கிறார் என்பதைத்தான் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை?” இது சங்கத்தின் தலைவர்.

“நம்ம சங்கத்துக்குக் ‘காலனி நலம் நாடுவோர் சங்கம்னு’ பேர் வச்சிருக்கோம். அதனாலே நலம் நாடாத வர்களையோ, நலத்துக்குக் கேடு உண்டாக்குபவர் களையோ இதில் சேர்க்காமல் இருப்பது நல்லது’என்பதுஎன் கருத்து.”—இது கண்ணன்.

"இந்த வம்புக்குப் பதிலாகக் 'காலனி நிலம் நாடுவோர் சங்கம்'னு பேரையே மாத்திட்டா என்ன?"—இது புலவர்.

மறுபடி சிரிப்பலைகள். கூட்டத்தில் தம்மால் மட்டுமே ஹ்யூமர் ஜெனரேட் ஆகிறது என்பதில் புலவருக்குப் பிடிபடாத மகிழ்ச்சி.

தலைவர் மீண்டும் விவாதம் நினைவுக்கு வந்தவராக, "மேற்கு கிராஸ் முதல் தெரு பதினொன்றாம் நம்பர் வீட்டுப் பெண் உறுப்பினராகிய அம்மிணி அம்மா..."

"சார்! தயவு செய்து 'பெண்மணியாகிய' என்று மட்டும் சொல்லுங்க...உறுப்பினர் வேண்டாம்..."

"அம்மிணி அம்மா நம் காலனி நலனுக்கு எந்த வகையில் கேடு விளைவிப்பவராக இருக்கிறார் என்பதைக் கண்ணன் இப்போது சொல்லியாக வேண்டும்."

"மன்னிக்கணும்! இந்த மாதிரி ரசாபாசமான விஷயங்களைக் கூட்டத்திலே வச்சுச் சொல்றது சிரமம்."

கண்ணன் இப்படிக் கூறியதைக் கேட்டவுடன் எல்லாருடைய ஆவலும் தூண்டப்பட்டு மனத்தின் விளிம்பு வரை ததும்பி வந்து நின்றது.

"அப்படியானால் கண்ணன் அந்த விவரத்தைத் தலைவரிடம் மட்டும் தனியாகக் கூறி விளக்க முடியுமா?"

"கூடாது! முடியாது! இதை நான் வன்மையாக ஆட்சேபிக்கிறேன். காலனி நலனுக்குக் கேடு உண்டாக்கும் ஒரு விஷயம் எல்லாச் செயற்குழு உறுப்பினர்களுக்கும் தெரிய வேண்டுமே ஒழியத் தனியே தலைவருக்கு மட்டும்தெரிவிக்கப் படவேண்டும் என்பது எந்த வகையிலும் நியாயமாகாது."

"ஆமாம். அது நியாயமில்லைதான். அம்மிணி அம்மா விஷயம் எல்லாருக்கும் தெரிந்தாக வேண்டும்."

தலைவரின் தனியுரிமைக்குப் பலத்த எதிர்ப்புக் கிளம்பவே அவர் அதை எல்லாருடனும் சேர்ந்தே தெரிந்து கொள்வதென்ற முடிவுக்கு வந்தார்.

கண்ணன் அம்மிணி அம்மாவைப் பற்றிய தன் ஆட்சேபத்தைக் கமிட்டியில் எல்லாருமே கேட்கும்படி சொல்லியாக வேண்டும் என்று நிர்ப்பந்திக்கப்பட்டான். எப்படித் தொடங்கி எவ்வாறு சொல்லி முடிப்பது என்று கோவையாகத் திட்டமிட்டுச் சொல்ல முடியாவிட்டாலும் எப்படியோ மென்று விழுங்கிப் பூசி மெழுகினான் கண்ணன். ஒருவிதமாக அதை சொல்லி முடித்தாயிற்று.

"அந்தப் பொம்பளை ஒரு மாதிரின்னு கேள்விப்பட்டேன். அவங்க காலனியோட நல்லபேரையே கெடுத்துப்பிடு வாங்க போலிருக்கு."

"இந்தக் காலனியிலே வீடு அலாட் ஆகி இதிலே குடியிருக்கிற யாரும் நம்ம அஸோஸியேஷன்ல மெம்பராகலாம். அவங்க யாரு, என்ன செய்யருங்க, ஆணா, பொண்ணாங்கிறதெல்லாம் நமக்கு அநாவசியம்"—என்று அம்மிணி அம்மாவை உறுப்பினராகச் சேர்த்துக் கொண்டு வந்திருந்த அச்சுதன் மீண்டும் எழுந்து தம் கருத்தை உறுதியாக வற்புறுத்தினார்.

"எனக்கும் அச்சுதன் சொல்றதுதான் நியாயம்னு படறது"—என்று தலைவர் கூட அந்தப் பக்கமாகச் சாய்ந்தார்.

கண்ணனுக்குத் தர்மசங்கடமாகப் போய்விட்டது. அம்மிணி அம்மாவைப் பற்றித் தான் கேள்விப்பட்டிருந்த எல்வற்றையுமே பச்சை பச்சையாகக் கூட்டத்தில் போட்டு

உடைத்துவிடலாமா என்று நாக்குத் துறுதுறுத்தது. அதற்கெல்லாம் என்ன ஆதாரம் என்று செயற்குழு உறுப்பினர்கள் தன்னைக் குடைந்தால் என்ன செய்வது என்ற ஒரே ஒரு தயக்கம் மட்டுமே சிறிது தடுத்தது.

அச்சுதன் மறுபடி ஆரம்பித்தார்:

"ஒருத்தரை நமக்குப் பிடிக்கலேன்னு அது தனிப்பட்ட விஷயம். அதனாலே இந்த அஸோஸியேஷனுக்கும் அவங்களைப் பிடிக்கலேன்னு ஆயிடாது. அஸோஸியேஷன் விஷயத்திலே நம்ம சொந்த விருப்பு வெறுப்புக்களைக் கொண்டு வரக்கூடாது."

தன் பக்கத்து வீட்டுப் பெண்மணியான அம்மிணி அம்மா மீது கண்ணனுக்கு ஏதோ தனிப்பட்ட விரோதம். அதனால் தான் அவன் அந்த அம்மாள் காலனி நலம் நாடுவோர் சங்கத்தில சேரவிடாமல் தடுக்கப் பார்க்கிறான் என்பதுபோல் ஒரு தவறான கருத்து அந்தச் செயற்குழுவில் எல்லாருக்கும் ஏற்பட்டுவிட்டது. அப்படி ஒரு கருத்து ஏற்படாமல் தடுக்கவோ தவிர்க்கவோ கண்ணனாலும் முடியவில்லை.

"எனக்குத் தனிப்பட்ட முறையிலே அவங்களோட ஒரு விரோதமும் இல்லை. அஸோஸியேஷன் பேர் கெட்டுடப்படாதுன்னுதான் தயங்கினேன். நீங்கள்ளாம் சேர்ந்து அவங்களை மெம்பராக்கணும்னு ஆசைப்பட்டீங்கன்னாச் சேர்த்துக்க வேண்டியது தானே?" என்று முடிவில் ஒருவிதமாய்ப் பட்டும் படாமலும் சொன்னான் அவன்.

"ஆல்ரைட்! நீங்க ஏன் சேர்க்கக் கூடாதுங்கறத்துக்கு இன்னும் வலுவான காரணமா எதையுமே சொல்ல மாட்டேங்கறீங்களே? ஏதோ அப்பிடிக் கேள்விப்பட்டேன். இப்பிடிக் கேள்விப் பட்டேன்னு சொல்றது சரியான காரணமில்லை. ஒவ்வொருத்தரைப் பத்தியும் ஒண்ணொண்ணு கேள்விப் படறது உலகத்திலே சகஜம். அதை வச்சு எதையும் முடிவெடுக்க முடியாது மிஸ்டர் கண்ணன்!"

சரி! நான் ஒண்ணும் தடுக்கலே...அவங்க 'மெம்ப ஷிப்'பை அப்ருவ் பண்ணிக்கலாம்''—என்று அவனே கடை சியில் வழிக்கு வரும்படி ஆகிவிட்டது.

உள்ளூரக் கடுப்போடும் ஆத்திரத்தோடும்தான் கண்ணன் இதைச் செய்ய வேண்டியதாயிற்று. ஆனால் தான் சொன்னதை நிருபித்துக் காட்டி அம்மிணி அம்மாவைச் சங்கத்தில் சேர்த்துக் கொண்டதற்காக முழுச் செயற்குழு வுமே வெட்கித் தலை குனிய நேரிடும்படி செய்ய ஒரு சந் தர்ப்பம் பின்னால் எப்போதாவது வாய்க்கத்தான் வாய்க்கும் என்று அவன் உறுதியாக நம்பினான்.

# 3

காரணமில்லாமல் ஒரு பெரிய வெறுப்பு உருவாக ஆரம்பித்து விட்டால் அதன்பின் சகஜமாக நடக்கும் ஒவ் வொரு சாதாரண நிகழ்ச்சியும்கூட அந்த வெறுப்பை வளர்க்கவே பயன்படும் என்பது அம்மிணி அம்மா விஷயத் தில் மெய்யாகிக் கொண்டு வந்தது.

ஒரு நிலைமைக்குமேல் இந்த வெறுப்புப் பொறாமை யாக மாறியது. பெரும்பாலும் அந்தக் காலனியிலிருந்தவர்கள் மத்தியதர வர்க்கத்தைச், சேர்ந்தவர்கள். அதிகப் பொரு ளாதார வசதி இல்லாதவர்கள். வீட்டுவசதி வாரியம் ஒதுக்கிக் கொடுத்த வீட்டுக்கு மறுபடி வெள்ளையடித்துத் துப்புரவாக வைத்துக் கொள்ளக் கூட வழியில்லாதவர்கள்.

ஆனால் அம்மிணி அம்மாவோ அங்கு குடியேறிய ஓராண்டுக்குள்ளேயே வீட்டுக்கு மாடி எடுத்துவிட்டாள். அந்த வரிசையிலே மாடியோடு கூடிய எடுப்பான ஒரே வீடாக அம்மிணி அம்மாவினுடையதுதான் விளங்கியது.

வீட்டில் சம்பாதிக்கிற ஆண்பிள்ளை என்று யாருமே இல்லாமல் நாலைந்து பெண்களைக் கட்டிக் காத்து வளர்க்கும் ஒரு முதிய பெண்மணியின் வருமானம், வளர்ச்சி, செழிப்பு எல்லாமே கண்ணனுடைய பொறாமையைக் கிளறச் செய்திருந்தன. சினிமா, நாட்டியக் கச்சேரி, பெரிய பெரிய கம்பெனிகளின் 'லையஸான்' பி. ஆர். ஓ. ஆட்களின் போக்கு வரவு எல்லாமாக அம்மிணி அம்மாவுக்கு ஒரு டெலிபோனின் அவசியத்தை வலியுறுத்தின. அந்தக் காலனிக்குள் நுழைந்த முதல் டெலிபோனே அம்மிணி அம்மாவுடையதுதான். இரவிலும், பகலிலும், சிறிதும் பெரிதுமாகக் கார்கள் வருவதும் போவதுமாக அந்த வீடு—வீட்டு முகப்பு எல்லாமே கலகலப்பாக இருந்தன. அந்தக் காலனியில் அந்த வீட்டுக்கு மட்டும் ஒரு மினி பங்களாவின் ஆடம்பரத் தோற்றம் வந்திருந்தது. மற்ற எல்லா வீடுகளுமே கோழிக் கூண்டுபோல் வீட்டுவசதி வாரியத்தின் சாதாரண 'டி' டைப் வீடுகளாகத்தான் இருந்தன. மாறுதலோ வளர்ச்சியோ மெருகோ பெறவில்லை.

கண்ணன் அம்மிணி அம்மாவை அந்தக் காலனியே சமூக பகிஷ்காரம் செய்து ஒதுக்கித் தள்ளும்படி ஆக்கிவிட ஆசைப்பட்டான். ஆனால் அதற்கு நேர்மாறாக ஏங்கல் தாங்கல்—அவசர ஆத்திரத்திற்கு டெலிபோன் செய்ய அக்கம் பக்கத்தார் அம்மிணி அம்மாவின் தயவை நாட வேண்டியிருந்தது. அந்த வீட்டின் மேலும் அந்தக் குடும்பத்தின் மேலும் தனக்கு இருக்கும் அதே வெறுப்பை மற்றவர்கள்பால் திணிக்க முயன்றும் கண்ணனால் முடியவில்லை. அக்கம்பக்கத்தாருக்கும் மற்றவர்களுக்கும் அந்த அம்மாளின் தாட்சண்யம் தேவைப்பட்டது. கண்ணன் அந்த அம்மாள் என்ன செய்கிறாள் என்பதாகத் தான் கேள்விப் பட்டிருந்தானோ அதை வைத்தே வெறுப்பை வளர்த்துக் கொண்டிருந்தான். மற்றவர்களோ அந்த அம்மாளின் உபசார குணம், இங்கிதம், பழகும் பண்பு இவற்றைக் கவனித்துப் பழகினார்கள்.

இப்போது காலனியில் முன்பிருந்ததை விட வீடுகள் அதிகமாகி விட்டன. பக்கத்து வீட்டுப் பாகவதர்கூடவந்து குடியேறி விட்டார். காலனி நலன் நாடுவோர் சங்கத்தில் உறுப்பினர்களும் அதிகமாகி இருந்தனர். மறுபடியும் ஒரு நாள் பழைய திரையுலக நண்பன் கண்ணனைத் தேடி வந்தான். பக்கத்து வீட்டு அம்மிணி அம்மாவைப் பற்றி மேலும் ஒரு கூடை வம்புகளையும், வதந்திகளையும் புதிதாகத் தெரிவித்துவிட்டுச் சென்றான்.

“ஹை சர்க்கிள்லே வழுக்கைத் தலைகளுக்கு நடுவே நடக்கிற கிளப் பார்ட்டிகளிலே எண்டர்டெயின் பண்ணப் போறாளுவ. அதுலே வருமானம் பயங்கரமா இருக்கும்.”

“வீட்டைப் பார்த்தாலே தெரியுதேப்பா! ஒரே வருஷத்திலே மாடி... தோட்டம், கார் டெலிபோன்... இதெல்லாம் சும்மா வந்துட முடியுமா?”

“தொழிலதிபர்கள், வியாபாரிகளோட இரகசிய கிளப் பார்ட்டியிலே நிர்வாணமா டிரிங்ஸ் ஸெர்வ் பண்ணினா வருமானம் வராதா பின்னே?”

“வருமானம் இருந்தா எங்கேயும் எதுவும் நடக்குதுப்பா! இந்த மாதிரி ஒரு வீடு எங்க காலனி வெல்ஃபேர் அஸோஸியேஷன்ல மெம்பராகப் பிடாதுன்னு என்னாலே ஆனமட்டும் தடுத்துப் பார்த்தேன். முடியலே. பணத்தை வாங்கிட்டு யாரோ அம்மிணி அம்மாவையும் மெம்பராக்கி விட்டாச்சு! நான் எத்தனை தடுத்தும் யாரும் கேட்க மாட்டேன்னுட்டாங்க. போ!”

“அம்மிணி அம்மாவோட வண்டவாளம் தெரிஞ்சா அப்புறம் தயங்குவாங்க. வேற ஆட்களை வெச்சு இவமூலமா ரெண்டு மாஸாஜ் பார்லர் கூட நடக்குது. அத்தனையும் காசு. நாய் வித்தகாசு குரைக்கவா போகுது? அம்மிணி படு கெட்டிக்காரி.”

"என்னமோ நீ சொல்றே... எத்தனை பேர் நாம சொல்றதெல்லாம் நம்பப் போறாங்க? எங்க வீட்டிலே இவளே, 'பக்கத்து வீட்டு அம்மிணி அம்மா ரொம்ப நல்ல மாதிரி. தங்கமான மனசு'—ன்னு எனக்குச் சொல்றப்ப நான் மலைச்சுப் போய் நின்னேன். 'அந்தப் பொம்பளை ஒருமாதிரி! ஜாக்கிரதை. பழக்கம் வச்சுக்காதே'ன்னு நாம சொல்லி எச்சரிக்க வேண்டியிருக்கு. இந்தப் பக்கத்து வீட்டிலே வேதங்களையும் உபநிஷதங்களையும் கரைச்சுக் குடிச்ச ஒரு பாகவதர் குடி வந்திருக்கிறார். நான் ஜாடைமாடையாகச் சொல்லியும் கேளாமே அவர் வெள்ளிக்கிழமை தவறாமே இந்த அம்மிணி அம்மா வீட்டிலே போய் நாராயணீயம் சொல்றாரு."—

"அது யாரப்பா அந்தப் புண்ணியாத்மா? பேரைச் சொல்லேன்?"—

"ஊரெல்லாம் தெரிஞ்ச ஆள் தான்! இஞ்சிக்குடி நாகசாமி பாகவதர்ம்பாங்க."—

"அடேடே! அடிக்கடிக் கேள்விப்பட்ட பேரா இருக்கே? வயசானாலும் செதுக்கி வச்ச சிலை மாதிரி இருக்கா அம்மிணி. போதாக் குறைக்கு வீடு நிறைய வாளிப்பான இளம் பெண்கள். பாகவதர் சுவாமிகள் விசுவாமித்திரர் மேனகை கிட்ட மயங்கினாப்பல மயங்கிட்டார் போல இருக்கு..."

"சே! சே! பாகவதரை எனக்கு நல்லாத் தெரியும்! நீ சொல்ற மாதிரியெல்லாம் ஒண்ணும் இருக்காது! பணத்துக்கு ஆசைப்பட்டு வேணாப் போயிருப்பாரு. வேற ஒண்ணும் இருக்காது..."

"அப்படியா? இதோ இந்தப் படத்தைப் பாரு முதல்லே! இதைப் பார்த்தப்புறமாவது நான் சொல்றது சரியா யிருக்கும்னு ஒத்துப்பே"—என்று கூறியபடியே பையிலிருந்து

ஒரு சினிமாக் கவர்ச்சிப் பத்திரிகையை எடுத்துக் காட்டினுன் நண்பன். கண்ணனுக்கு அதைப் பார்க்கக் கூச்சமாயிருந்தது.

அதில் 'திரையுலகைக் கலக்க வந்திருக்கும் புது செக்ஸ் அணுகுண்டு' என்ற தலைப்புடன் முக்கால் நிர்வாண நீச்சல் உடையில் ஒரு கட்டிளம் பெண்ணின் படம் பிரசுரமாகியிருந்தது. அந்தப் பெண்ணைப் பக்கத்து வீட்டில் பார்த்திருப்பது நினைவு வந்தது கண்ணனுக்கு. அம்மிணி அம்மாவின் இரண்டாவது மகள்தான் அந்த செக்ஸ் ராணி. வீட்டில் புடைவையும் தாவணியுமாகத் தென்படும் அந்தப் பெண் வெளியே இப்படி ஒரு கோலமும் கொள்ளமுடியும் என்பதை நம்பக் கூடமுடியாமல் இருந்தது. தான் எவ்வளவு சொல்லியும் அந்த வீட்டைப் பற்றித் தவருக நினைக்காத தன் மனைவிக்குச் சாட்சியம் காட்ட இதுதான் சரியான தடயம் என்று தீர்மானித்த கண்ணன் நண்பன் காட்டிய அந்தக் கவர்ச்சிப் பத்திரிகையை எடுத்துக்கொண்டு அப்படியே மனைவியைக் காண உள்ளே சென்ருன். அவளுக்குச் சரியான பாடம் புகட்ட இந்தப் படமே போதும் என்பது அப்போது அவன் எண்ணமாயிருந்தது.

ஆனுல் அவன் நினைத்தபடி நடக்கவில்லை. கண்ணனின் மனைவி அந்தப் படத்தைப் பார்க்கவே முன் வரவில்லை. கோபத்தோடு பொரிந்து தள்ளினுள்:

"எல்லாம் நீங்களே பார்த்துக்குங்க! இந்தக் கண்ருவி எல்லாம் நான் ஒண்ணும் பார்க்கவேண்டாம்"—என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"நம்ம மேலே உள்ள அக்கறையாலே என் சிநேகிதன் இதை எல்லாம் சொல்லி எச்சரிக்கிருன். அவனுக்கு நான் ரொம்பக் கடமைப் பட்டிருக்கேன்."

"ஆமாம் பெரிய அக்கறை. தன்னந்தனியாச் சிரமப் பட்டுத் தவிச்சுக் கெட்டிக்காரத்தனமாக் குடும்பம் நடத்தற பொம்பளையைப் பத்தித் தேடி வந்து கோள் சொல்லிட்டுப் போறத்துக்கு முடியும். ஆம்பிளைகளுக்கு இதைவிட வேற வேலையே இல்லியோ?"

"உங்க அம்மிணி அம்மா பெரிய பதிவிரதையா என்ன? இப்பிடிப்பட்ட பொம்பளையைப் பத்திக் கோள் சொல்லாமப் புகழாரமா சூட்டுவாங்க?"

"அம்மிணி அம்மா பதிவிரதையோ இல்லையோ, உங்க சிநேகிதர் ஒண்ணும் யோக்கியமானவரில்லை. வேலை மெனக் கெட்டு இங்கே தேடி வந்து கோள் சொல்றதே உங்க சிநேகிதருக்குப் பொழைப்பாப் போச்சு! இதைத் தவிர அவருக்கு வேற வேலை கீலை எதுவுமே கிடையாதா?"

நண்பன் அடிக்கடி வருவதும் பக்கத்து வீட்டைப் பற்றிச் சொல்லி எச்சரிப்பதும் தன் மனைவிக்கு அறவே பிடிக்க வில்லை என்பது கண்ணனுக்குப் புரிந்தது. என்ன இருந் தாலும், எப்படிப்பட்டவளாக இருந்தாலும் ஒரு பெண் இன்னொரு பெண்ணுக்காகக் கொஞ்சம்கூட விட்டுக் கொடுக் காமல் பேசியதைக் கண்டு ஆச்சரியமடைந்தான் அவன்.

அம்மிணி அம்மாவைப் பற்றிய வெறுப்புப் பிரசாரம் சொந்த வீட்டிலேயே எடுபடாமல் போய் முறியடிக்கப் பட்டதில் அவனுக்கு மிகவும் வருத்தம்தான்.

பக்கத்து வீட்டுப் பாகவதரிடம் நண்பனை அழைத்துச் சென்று அறிமுகப் படுத்தினான். நண்பன் அந்தப் பத்திரிகைப் படத்தையும் அவரிடம் காண்பித்துக் குறை சொன்னபோது பாகவதர் காதைப் பொத்திக் கொண்டார்.

"சிவசிவா! உங்களுக்குச் சம்ஸ்கிருதம் தெரியாட்டாலும் குறள் படிச்சிருப்பேள்னு நினைக்கிறேன். புறம் கூறிப்

பொய்த்து உயிர் வாழ்தலின் சாதல் அறம் கூறும் ஆக்கம் தரும்னுர் வள்ளுவர் பெருமான். அதாகப் பட்டது அர்த்தம் என்னன்னு, 'மத்தவாளைப் பத்தி வம்பு பேசிக் கோள் சொல்லிண்டு அலையறதைக் காட்டிலும் தற்கொலை பண்ணிக் கிறது கூடச் சிரேஷ்டமான காரியமாயிருக்கும்' கிருர்''— என்று மிகவும் கடுமையாகப் பதில் வந்தது நாகசாமி பாகவதரிடமிருந்து.

பாகவதர் இப்படி முகத்தில் அறைந்த மாதிரிப் பதில் சொல்வாரென்று கண்ணன் எதிர்பார்க்கவில்லை. நண்பனுக்கு அது சுரீரென்று உறைத்துவிட்டது. இருவருமே திரும்பி விட்டனர்.

''பார்த்துக்கிட்டே இரு கண்ணன்! சீக்கிரமே இப்படி எடுத்தெறிஞ்சு பேசினதோட பலனை இந்தப் பாகவதன் அநுபவிப்பான். அப்பவாவது இவனுக்குப் புத்தி வருதா இல்லையான்னு பார்க்கலாம்''— என்று அடிபட்ட புலியாகக் கறுவிக்கொண்டு போனுன் நண்பன். அவனுக்கு அவ்வளவு கோபம் வந்து கண்ணன் பார்த்ததே இல்லை.

## 4

பத்து நாள் கழித்து ஒரு நாள் இரவு உணவின்போது மோருஞ் சாதத்திற்குத் தொட்டுக் கொள்ள ஊறுகாயாக உப்புக்காரம் ஊறிய பச்சைமிளகு ஒரு கொத்து இலையில் விழவே கண்ணன் மனைவியை நிமிர்ந்து பார்த்தான்.

''இது ஏது?''

''ஏது, எங்கேருந்து வந்தது எல்லாம் தெரிந்ததால்தான் சாப்பிடுவீர்களா?''

"சாப்பிடுவேனா இல்லையா என்பது வேறு விஷயம்! ஆனால் இது எங்கிருந்து கிடைத்தது என்பது இப்போதே தெரிந்தாக வேண்டியது அவசியம்..."

"பச்சை மிளகு ஊறுகாய் உடம்புக்கு ரொம்ப நல்லது. ஆயுர்வேத முறைப்படி பக்குவமாத் தயாரிச்சிருக்காங்க."

"இந்த சர்டிபிகேட் எல்லாம் எனக்குத் தேவையில்லை. முதலில் நீ என் கேள்விக்குப் பதில் சொல்லு."

அவள் பதில் சொல்லத் தயங்கித் தட்டிக்கழிக்கவே கண்ணனின் சந்தேகம் வலுப்படத் தொடங்கியது. அவன் இலையிலிருந்து கையை உதறிக்கொண்டு சாப்பிடுவதை நிறுத்திவிட்டு விருட்டென்று எழுந்திருந்தான். இனியும் அவனிடம் மறைக்க முடியாதென்று அவளுக்குப் பயம் வந்தது. அவள் வழிக்கு வந்தாள்.

"நீங்க கோபிச்சுக்க மாட்டீங்கன்னா நான் உண்மையைச் சொல்றேன்..."

"மிளகு யார் குடுத்தாங்க?"

"கேரளாவிலிருந்து வந்ததுன்னு பக்கத்து வீட்டு அம்மிணி அம்மா குடுத்தாங்க..."

—இதைக் கேட்டதும் அவன் கொதிக்கும் எண்ணெயில் விழுந்த அப்பளமாகப் பொரிந்து தள்ளினான். அவன் முகத்தில் கோபத்தின் தகிப்பு அதிகமாகிக் கனன்றது.

"அம்மிணியம்மா குடுக்கறதை எல்லாம் வாங்கிக்கறதுன்னு வந்திட்டா இந்த வீடு சந்தி சிரிச்சு நாறிப்போகும். இது சம்மந்தமா நான் ஏற்கெனவே உன்னை எச்சரிச்சாச்சு..."

இதைச் சொல்லியபடியே கலத்திலிருந்ததைச் சாப்பிட்டு முடிக்காமலே பாதியில் எழுந்து கைகழுவி விட்டான் கண்ணன்.

மனைவி எவ்வளவோ மன்றாடியும் அவன் கேட்கவில்லை. கோபமும் பிடிவாதமும் அவனுக்கு வெறியூட்டியிருந்தன.

"என்னை மன்னிச்சிடுங்க. நான் பண்ணினது தப்புத் தான், அவங்க பிரியமாக் கூப்பிட்டுக் குடுக்கறப்ப 'வேண்டாம்—வாங்கிக்க மாட்டேன்'னு எடுத்தெறிஞ்சு பேசித் திருப்பிக் குடுக்க முடியலே. இனிமே எதையும் வாங்க மாட்டேன். இப்ப நீங்க உட்கார்ந்து சாப்பிட்டு முடியுங்க..."

"முடியாது! முடியாது! கண்ட கண்ட எடுபட்ட பொம்பிளைங்க கையிலிருந்தெல்லாம் ஊறுகாயும், மத்ததும் பிச்சை வாங்கித் தின்ற நிலைமைக்கு இந்த வீட்டைக் கொண்டாந்தாச்சு. இனிமே இங்கே சாப்பிடறதே பாவம்..."

ஒரு வெறியோடு சமையலறை முழுவதும் தேடி ஒரு பழைய ஹார்லிக்ஸ் பாட்டிலில் மூடி வைக்கப்பட்டிருந்த அந்தப் பச்சை மிளகு ஊறுகாய் முழுவதையும் ஏதோ மிகவும் அருவருப்பான செத்த எலியைத் தூக்குகிற மாதிரித் தூக்கிப் போய்க் குப்பையில் எறிந்துவிட்டு வந்தான் கண்ணன். அதைச் செய்துவிட்டு வந்தபின்பும் கூட நெடு நேரத்துக்கு அவனது ஆத்திரம் தணியவில்லை. மனைவி அவனைக் கடிந்து கொண்டாள்.

"உங்களுக்கு வேண்டாம்னா நீங்க சாப்பிடத் தேவையில்லை! அநாவசியமாப் பெறுமானமுள்ள பண்டத்தைக் குப்பையிலே கொண்டுபோய்க் கொட்டிட்டீங்களே; இது உங்களுக்கே நல்லா இருந்தாச் சரிதான்."

"ஒழுக்கங் கெட்டவங்க வீட்டுப் பண்டத்தை விவஸ்தை உள்ள யாரும் கையாலே தொடமாட்டாங்க."

"நமக்குக் கறிகாய் விற்கிற கூடைக்காரி, அரிசி விற்கிற கடைக்காரர், பலசரக்குத் தருகிற வியாபாரி எல்லாரும்

ஒழுக்கமுள்ளவங்களான்னு பரீட்சை பண்ணிப் பார்த்துப் புறம்தான் நாம வாங்கிச் சாப்பிடறமா?''

அவளுடைய இந்த வாதத்துக்கு அவனிடம் சரியான பதில் இல்லாவிட்டாலும் ஒரேயடியாகக் கோபத்தின் சுருதியை மேலேற்றி உரத்த குரலில், "நீ இப்போ வாயை மூடப் போறியா இல்லியா?''—என்று கூப்பாடு போடவே அவள் அடங்கிவிட்டாள். அவனுக்குப் பயந்து மேலும் அவள் விவாதிக்கவில்லை.

ஆனாலும் தன் மனத்திலிருந்த அதே வெறுப்பையும் துவேஷத்தையும் வீட்டிலிருந்த மற்றவர்களின் மனத்தில் விதைக்க முடியாததைக் கண்ணனே உணர்ந்தான். தெரிந்தும் தெரியாமலும் தன் வீட்டிலுள்ளவர்கள் அம்மிணி அம்மாவின் வீட்டோடு பழகிக் கொண்டிருப்பதை அவன் அநுமானித்துக் கொள்ள முடிந்தது. அதற்கு வசதியாக இரண்டு வீட்டுக்கும் நடுவே சுவரோ வேலியோ எதுவும் இல்லை. இந்த வீடும், அந்த வீடும் சந்திக்கிற எல்லையின் பின் பக்கத்திலிருந்து முன்பக்கம் வரை உள்ள நூற்றுக்கு மேற்பட்ட அடி தூரத்தில் எந்த இடத்திலும் யாரும் யாரோடும் நின்று பேசலாம், பார்க்கலாம். சைகைகள் காட்டலாம் என்கிற மாதிரி இருந்தது. வீட்டின் நான்கு பக்கத்திலும் இப்படித் திறந்து கிடந்த எல்லையாகத்தான் இருந்தது.

இந்தப் பக்கத்து வீட்டுக்குக் குடி வந்திருந்த நாகசாமி பாகவதரையும் கண்ணனுக்குப் பிடிக்காமல் போயிற்று. காரணம், அவர் பணத்துக்கு ஆசைப்பட்டு அம்மிணி அம்மாளின் வீட்டோடு நெருங்கிப் பழகி நாராயணீயம், தேவி பாகவதம் என்று சொல்லிக்கொண்டிருந்ததுதான். அவன் எச்சரித்ததையும் அவர் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை.

கண்ணனுக்கு இருந்த அத்தனை விரோதமும், வெறுப்பும் அக்கம்பக்கத்து வீட்டாரிடம் அவன் வீட்டிலுள்ள மற்றவர்

களுக்கு இல்லை. அவர்கள் கண்ணனுக்குத் தெரியாமல் அக்கம்பக்கத்தாரிடம் பழகி வந்தார்கள். இது கண்ணனுக்கும் தெரிந்துதான் இருந்தது. எப்படியாவது இதைத் தடுத்தாக வேண்டுமென்று அவனும் யோசித்துக் கொண்டு தான் இருந்தான். கண்மூடித்தனமான விரோத வெறி அவனுள் மூண்டிருந்தது.

அவனைப் போன்ற மத்திய தர வர்க்கத்து என். ஜி. ஓ. வுக்குக் காம்பவுண்டுச் சுவர் எடுக்கப் போதுமான பணவசதி குதிரைக் கொம்பாக இருந்தது. ஆனலும் ஏதோ ஒரு வெறியில் வட்டிக்குக் கடன் வாங்கியாவது காம்பவுண்டுச் சுவர்களை எடுத்து விடுவது என்ற முடிவிற்கு வந்திருந்தான் கண்ணன். மனைவி எவ்வளவோ தடுத்துப் பார்த்தாள்: "இப்போ இருக்கிற பணமுடையிலே காம்பவுண்டுச் சுவர் இல்லாட்டி என்ன கொறைஞ்சிடப் போவுது. வீண் செலவை இழுத்து விட்டுக்கிட்டுப்பின்னலே கடனை அடைக்கக் கஷ்டப்படப் போறீங்க..."

அவள் இப்படிக் கூறியதை அவன் பொருட்படுத்தவே இல்லை.

"உன்னை ஒன்றும் யோசனை கேட்கலை. எதைச் செய்யணுமோ அதைச் செய்ய எனக்குத் தெரியும்." கண்ணன் மனைவியிடம் எரிந்து விழுந்தான்.

உண்மையில் உடனே சுற்றுச் சுவர் எடுப்பதற்கான எந்த அவசரமும் அப்போது இல்லை. பின்புறம் ஓடிய கால்வாய் எல்லா வீடுகளுக்கும் ஒரு வகையில் எல்லையாக வும், பாதுகாப்பு அகழியாகவும் இருந்தது. முன்புறம் சாலை இருந்ததனால் எந்நேரமும் பயமில்லாமல் ஆள் நடமாட்டமும் கலகலப்பும் இருந்தன. இருபக்கத்திலிருந்த அண்டை வீட்டார்கள் இருவர் மேலும் ஏற்பட்ட வெறுப்பைத் தவிர, காம்பவுண்டுச் சுவர் எடுக்க வேறு வலுவான காரணங்களே

இல்லை ஒரு வீம்புக்காகத்தான் கண்ணன் கஷ்டப்பட்டு அதிக வட்டிக்குக் கடன் வாங்கிக் காம்பவுண்டுச் சுவரை எடுக்கும் முயற்சியில் அப்போது தீவிரமாக இறங்கியிருந் தான். யார் தடுத்தும் கேட்கக் கூடிய மனநிலையில் அவன் அப்போது இல்லை. கொக்குக்கு ஒன்றே மதி என்பது போல் இருந்தான்.

சுவர் எடுக்குமுன் மாநகராட்சியில் வரைபடம் கொடுத்து அநுமதி வாங்க அலைய வேண்டியிருந்தது. சிமெண்ட் தட்டுப்பாடு இருந்ததனால் நல்ல சிமெண்ட் கிடைக்கவில்லை. இலட்சக்கணக்கில் காண்ட்ராக்ட் எடுத்த பெரிய கட்டிட வேலைகளுக்கு அலைந்து கொண்டிருந்ததனால் வெறும் காம்பவுண்டுச் சுவர் எடுப்பது போன்ற சிறிய வேலைகளுக்கு ஆட்கள் கிடைப்பது சிரமமாயிருந்தது. இருந்தாலும் கண்ணன் முரண்டு பிடித்து இறங்கினால் இறங்கினதுதான். கிடைத்த சிமெண்டை வைத்து அவசரத்துக்கு வாங்கின அரை வேக்காட்டுச் செங்கல்லைக் கொண்டு தவித்த மாடு பிடிப்பதுபோல் பிடித்த ஆட்களால் இரண்டே நாட்களில் காம்பவுண்டுச் சுவர் எடுத்து முடிக்கப்பட்டது. மேலே ஓர் அடி உயரம் பார்ப்பட் வயரும் போடப்பட்டது.

“நாலு மாசமா உடுத்திக்கொள்ள இரண்டாவது புடவை இல்லாமல் கஷ்டப்படறேன். அதுக்கு ஒரு வழி பண்ணாத நீங்க அதிக வட்டிக்குக் கடன் வாங்கி வீம்புக்காக இந்தச் சுவரை எடுத்து முள்வேலியும் போட்டாச்சு...! அழுத்தி ஒரு உதை உதைச்சால் கீழே விழுந்துடும் இந்தச் சுவர்...”—என்று கண்ணனின் மனைவி கூறியதை அவன் காதில் வாங்கிக் கொண்டதாகவே காண்பித்துக் கொள்ளவில்லை. செவிடன் காதில் ஊதிய சங்கு போல் ஆயிற்று.

உண்மையில் அப்போதிருந்த பொருளாதார நிலையில் கண்ணன் அந்தச் சுவர்களை எடுத்தது அநாவசியமான

காரியம்தான். பள்ளிக்கூடம் போய் வரும் பத்து வயதுச் சிறுமி கலாவுக்கு ஒரு பட்டுப் பாவாடை எடுத்துத் தர வேண்டும் என்று அவள் கெஞ்சி—இரண்டு மூன்று பிறந்த நாள்களும் ஓடிவிட்டன. வாங்கிக் கொடுக்க முடிய வில்லை. ஹவுஸிங் போர்டு ஒதுக்கிய வீட்டிலேயே உட் பகுதியில் சமயலறை மேடை. குளியலறை இவை எல்லாம் சரியாயில்லை. சுவர்களில் இரண்டொரு பகுதி உப்புப் பரிந்து சதா ஈரமாகச் சொத சொத என்று காட்சியளித்தது. சிரம தசையைக் கருதி அதை எல்லாம்கூட அப்புறம் எப்போதா வது சரிப்படுத்திக் கொள்ளலாம் என்று விட்டு வைத்திருந் தவன் இதில் மட்டும் அதிக பட்ச அவசரமும் ஆத்திரமும் காட்டியிருந்தான். கண்ணனின் மனைவி சுகன்யாவுக்கே இதில் தாங்க முடியாத மனவருத்தம் இருந்தாலும் அவள் அதிகம் தலையிடவில்லை.

கண்ணன் வீட்டில் இல்லாத நேரத்தில் அம்மிணி அம்மாவே சுகன்யாவைக் கூப்பிட்டு ஒரு யோசனைகூடச் சொன்னாள்: "உங்க வீட்டுக்காரர் எதுக்கும்மா தான் மட்டும் சிரமப்பட்டுச் செலவழிச்சுக் கஷ்டப்பட்டுக் காம்பவுண்டுச் சுவர் எடுக்கணும்? எங்கிட்டக் கொஞ்சம் முன்னாலேயே கலந்து பேசியிருந்தா ஒரு பக்கத்துச் சுவருக்கான செலவை நான் ஒத்துப்பேனே? அதே போல அந்தப் பக்கத்திலே பாகவதரிடம் பேசிப் பார்த்திருந்தா அவர் இன்னொரு பக்கத்துச் சுவரை ஒத்துக்க வைச்சிருக்கலாம். உங்களுக்கு முன்பக்கம்—பின்பக்கச் சுவர்ச் செலவு மட்டும் மிஞ்சி யிருக்கும்! இத்தனை செலவு ஆகியிருக்காதே?"

"இதைப் பத்தி அவர் எங்கிட்டக்கூட எதுவும் சொல் லலேம்மா!" திடீர்னு ஏதோ நினைச்சார். கொத்தனாரைக் கூட்டிக் கொண்டுவந்து வேலையை ஆரம்பிச்சிட்டார்" என்று அம்மிணி அம்மாளிடம் பூசி மெழுகிறாற்போலப் பதில் சொல்லி வைத்தாள் சுகன்யா. ஏதாவது பதில் சொல்லி யாக வேண்டுமே?

'உங்கமேலேயும், உங்க வீட்டுமேலேயும் இருக்கிற வெறுப்பாலேதான் சுவரே எடுக்கக் கிளம்பினுர் இவர்' என்று அம்மிணி அம்மாவிடம் உள்ளதைச் சொல்ல முடியுமா? சொன்னுல்தான் அது நன்ருகயிருக்குமா? உச்சியில் முழ உயர முள்வேலியுடன் சுவர்தான் எடுக்க முடிந்ததே ஒழிய அதற்கு மஞ்சள் கோபிகூட அடிக்க முடியவில்லை. தொட்டுக்கொள் துடைத்துக்கொள் என்று கடன் வாங்கிய பணத்தை வைத்துச் சுவரை எடுத்து முடித்தாயிற்று. அம்மிணி அம்மாவின் மூத்த பெண்கள் மாலா—பாலா—இருவரும் ஒரு நாள் கண்ணன் வீட்டில் இல்லாத போது சுகன்யாவிடம் வந்து பேசிக் கொண்டிருந்த போது, "அவசர அவசரமாகக் கட்டி, மேலே முள் கம்பியும் போட்டதாலே இந்தச் சுவர் அசிங்கமாத் தெரியுது அக்கா! மேலே வெள்ளையோ கோபியோ பூசாததாலே ரொம்ப விட்டுத் தெரியுது. இத்தனை அவசரமா இதைச் செய்திருக்கவே வேண்டாம்"—என்று குறைப்பட்டுக் கொண்டு போனுர்கள்.

குழந்தை கலாவுக்குக்கூடச் சுவர்வந்தது பிடிக்கவில்லை. பக்கத்து வீட்டிலிருந்து சாக்லேட், பென்ஸில், பால்பாயிண்ட் பேனு என்று கை நீட்டி வாங்க முடியாதபடி சுவர் குறுக்கே நின்றது. வாசல் வழியாகப் பக்கத்து வீட்டுக்குள் போய் இதெல்லாம் வாங்கிக் கொள்ள அப்பா வீட்டில் இல்லாத நேரமாகப் பார்த்துக் காத்திருக்க வேண்டியிருந்தது.

சுவரைப் பற்றி அம்மிணி அம்மாவும் அவளது பெண்களும் கூறிய விவரங்களைக் கணவனிடம் சுகன்யாவால் தெரிவிக்கக் கூட முடியவில்லை. தான் அவர்களோடு பேசிக் கொண்டிருப்பதாகத் தெரிந்தாலே கணவனுக்கு மூக்குக்கு மேல் கோபம் வரும் என்பதை அவள் நன்ருகப் புரிந்து கொண்டிருந்தாள்.

# 5

சில நாட்களுக்குப் பின் நண்பன் ஒரு பகல் வேளையில் கண்ணனின் அலுவலகத்துக்கே தேடி வந்து அவனிடம் 'உண்மை விளம்பி' என்ற பத்திரிகை ஒன்றைத் திணித்து விட்டுப் போய்ச் சேர்ந்தான்.

"ஆபீஸில் பிரித்துப் படிக்காதே! வீட்டுக்குப்போனதும் பிரித்துப் பார்...முடிந்தால் பக்கத்து வீட்டுப் பாகவதருக்கும் தெரியச் செய்..." என்று போகிற போக்கில் பரபரப்பாகவும் பதற்றமாகவும் சொல்லிவிட்டுப் போனான் அவன்.

தனது அலுவலகச் சந்தடியிலும் வேலைப் பரபரப்பிலும் கண்ணனுக்கு அதைப் பார்க்கவோ, படிக்கவோ நேரமும் இல்லை. மனநிலையும் இல்லை. அப்படியே வாங்கிப் பைக்குள் போட்டதுதான். அலுவலகம் முடிகிறவரை மறுபடி அதன் நினைவே வரவில்லை.

மாலையில் அலுவலக நேரம் முடிந்து வீடு திரும்புவதற்குத் தெருவில் இறங்கினால் ஒவ்வொரு நியூஸ் பேப்பர் ஸ்டாலிலும் 'உண்மை விளம்பி' தொங்கியது. 'உண்மை விளம்பி'யின் போஸ்டரை எழுத்தெண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தால் அவனை யாராவது தப்பாக நினைக்கக்கூடும் என்ற கூச்சம் இருந்தும் அதில் தென்பட்ட தலைப்புப் பார்க்க வைத்தது. நின்று நிதானித்துப் படிக்கவும் வைத்தது.

'இஞ்சிக் குடியாரின் மஞ்சள் வேலைகள். அம்மிணி அம்மாளிடம் பாகவதர் அம்மன் பூஜை'—என்ற தலைப்பைப் பார்த்ததும் நண்பன் தேடிக்கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போன பத்திரிகை பைக்குள் இருப்பது நினைவுக்கு வந்தது.

கண்ணனுக்கு அதைப் படித்ததும் என்னவோ போலிருந்தது. இதபாஷப்ரவீண இஞ்சிக்குடி நாகசாமி பாகவதரை அவ்வளவு நீளமான பெயர் முழுவதையும் சொல்லித்தான் தெரியவேண்டும் என்பதில்லை. சங்கீத உலகில் எப்படி ஊர்ப் பெயரை ஆரம்பித்தவுடனே ஆள் பெயர் தெரியுமோ அப்படியே 'இஞ்சிக்குடி' என்று தொடங்கின உடனேயே அடையாளம் புரிந்துவிடக் கூடிய பெயர் பாகவதருடையது. ஏதோ நாலு இடத்திலே கதா காலட்சேபம் செய்து பிழைக்கிறவரை நண்பன் இப்படி எல்லாம் தாறுமாருக எழுதி வயிற்றிலடிக்கலாமா என்று அவன் மனம் உள்ளூற வருந்தியது. பாகவதர் அம்மிணி அம்மாள் குடும்பத்தோடு நெருக்கமாகப் பழகியது கண்ணனுக்கும் பிடிக்கவில்லை என்ருலும் இப்படி எல்லாம் 'உண்மை விளம்பி' போன்ற ஏடாகூடமான பத்திரிகையில் அவரைப் பற்றித் தாறுமாருக வருவதும் அவனுக்குப் பிடிக்கவில்லை. பாகவதருடைய மேதா விலாசம் பெரியது என்பது ஊரறிந்த விஷயம்.

இப்போது இது தாஞக நடந்திருக்க முடியாது. பாகவதர் கடுமையான வார்த்தைகளில் பேசியதையடுத்து நண்பன் தன்னிடம் சவால் விடுவது போல் கோபமாகக் கூறிவிட்டுப் போனது கண்ணனுக்கு நினைவு வந்தது. இதை நண்பன் செய்திருப்பாஞனால் அவன் இந்த அளவுக்கு மோசமாக இறங்கியிருக்க வேண்டியதில்லை என்றே கண்ணன் நினைத்தான். இந்த அளவு] பாகவதரைக் கொச்சைப் படுத்தி விட்டிருக்கக் கூடாது என்பதே கண்ணனின் எண்ணமா யிருந்தது. நண்பன் மேல் சிறிது ஆத்திரம்கூட அப்போது அவனுக்கு ஏற்பட்டது.

பக்கத்து வீட்டுக்காரஞகிய தன்னை அம்மிணி அம்மாளை அறிவதற்கு முன்பே அறிந்திருந்தும் தன்னோடும் தன் வீட்டோடும் நெருங்கிப் பழகாமல் பாகவதர் திடீரென்று அங்கே குடி வந்தவுடன் அம்மிணி அம்மாள் வீட்டோடு

புதிதாக இழைய ஆரம்பித்ததைக் கண்ணன் ரசிக்கவில்லை. தனது ஏழ்மையையும் அம்மிணி அம்மாளுடைய வசதியையும் சீர்தூக்கிப் பார்த்து அந்த முடிவைப் பாகவதர் செய்ததாக அவன் தனக்குத் தானே கற்பித்துக் கொண்டுவிட்டான். தாழ்வு மனப்பான்மைக்கும் இப்படி எதிர்மறையாகக் கற்பனை செய்துகொள்வதற்கும் நிறைய நெருக்கம் உண்டு. தன்னைத் தானே குறைவாய்க் கற்பித்துக்கொண்டு தாழ்வு உணர்வோடு இருக்கிற ஒருவனுக்குச் சுற்றி நடக்கிற சகலமும் தனக்கு எதிராகத்தான் நடக்கின்றனவோ என்ற எண்ணமே மிகுந்திருக்கும். இந்த எண்ணமே ஒருவகை நோய் மாதிரி. காரணமற்ற பொருமையும் இதன் துணை உற்பத்தியாக வந்து சேர்ந்து கொள்ளும்.

ஒருவேளை பாகவதர் அம்மிணி அம்மாளைப் பற்றித் தெரியாமல் அந்த அம்மாள் குடும்பத்தோடு பழகாமல் கண்ணனோடும், கண்ணன் வீட்டோடும் மட்டுமே பழகிக் கொண்டிருக்க நேர்ந்திருந்தால் கண்ணனுக்குள் இந்தத் தாழ்வு மனப்பான்மையும் அதனடியாகக் கிளைத்துவிட்ட பொருமையும் விரோதமும் ஏற்படாமலே போயிருக்கலாம். பாகவதரைப் பற்றிய நல்லெண்ணமே நீடித்திருக்கலாம்.

மனிதன் தன்னுடைய அபாரமான கற்பனை உணர்வினால் இல்லாத விரோதங்களையும் குரோதங்களையும் தனக்குள் தானே கற்பித்து அழிக்க முடியாதபடி வளர்த்துக் கொண்டு விடுகிருன். ஒரு நிலைமைக்குப் பின்னுல் அவனே விரும்பினுல்கூட அவற்றை அழிககவோ, ஒழிக்கவோ முடியாதபடி அவனைவிட அவை விசுவரூபமெடுத்துக் கொண்டு நின்றுவிடுகின்றன. நிலைமை கட்டுமீறிப் போய் விடுகிறது. கண்ணன் நிலையும் இப்போது அப்படித்தான் ஆயிற்று.

பாகவதர் அம்மிணி அம்மாள் குடும்பத்தோடு நட்பாகப் பழகினுரே ஒழியக் கண்ணன் குடும்பத்தாரோடு விரோத

மாகப் பழக முயலவில்லை. ஆனாலும் கண்ணனுக்கு அது மட்டுமே போதவில்லை.

'இவர்தான் பக்கத்து வீட்டுக்குக் குடிவரப் போகிறார் என்று தெரிந்ததும், முன்பு இவர் குடியிருந்த இராமநாதன் தெரு ஒண்டிக் குடித்தனத்திற்கு இவரைத் தேடிப்போய்க் காலனி நலன் நாடுவோர் சங்கத்தில் இவரைச் சேர்த்து வந்தேன். இருந்தும் இவர் என்னை விட்டுவிட்டு இங்கே வந்ததும் இந்த 'ரெக்கார்ட் டான்ஸ் அம்மாக்களி'டம் போய் ஒட்டிக்கொண்டுவிட்டார்! பணமும் அழகும் இருந்தால் மற்ற எது இல்லாவிட்டாலும் காந்தத்தில் போய் ஒட்டிக் கொள்கிற இரும்பு மாதிரி மனிதர்கள் போய் மொய்க்கிறார்களே!' என்று கண்ணன் தனக்குள்ளே நினைத்தான். இந்த நினைப்பெல்லாம் சேர்ந்து குமைந்து கொண்டிருந்தபோதுதான் நண்பன் வந்து எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்த மாதிரி அதைக் கிளறி ஊதி மேலும் கனலச் செய்துவிட்டான்.

இன்று இப்போது இந்த ரௌடித்தனமான மஞ்சள்பத்திரிகையைத் தேடி வந்து தன்னிடம் திணித்துப் பாகவதருக்கும் தகவல் தெரிவிக்கச் சொல்கிறான் நண்பன்! இதில் இவனுக்கு ஏன் இத்தனை குரூரமான சந்தோஷம்? பாகவதரிடம் பேசுவதையே ஏறக்குறைய நிறுத்திவிட்ட நான் போய் இதை எப்படி அவரிடம் எடுத்துக் கூட்டி ஆரம்பித்துச் சொல்வது? நல்ல விஷயமாயிருந்தாலாவது பரவாயில்லை. இதைப் போய் அவரிடம் காண்பித்துப் பேசத் தொடங்கினாலே நான் அவரைப் 'பிளாக் மெயில்' செய்கிறேனே என்பது போன்ற சந்தேகமும் கோபமும் என்மேல் அவருக்கு வராதா? நண்பன் ஏன் இத்தனை இங்கிதக் குறைவாக நடந்துகொள்கிறான்? நம் சொந்த அக்கம்பக்கத்து விவகாரத்தை இவனைப் போல ஓர் அரைவேக்காட்டு நண்பனிடம் நான் தெரிவித்திருக்கவே கூடாதோ? நான் செய்ததுதான் தவறோ?

—என்றெல்லாம் கண்ணனுக்குத் தோன்றியது. வீட்டுக்குத் திரும்பியதும் 'உண்மை விளம்பி'யைப் பிரித்துப் படித்தால் பாகவதரையும் அம்மிணி அம்மாளையும் இரண்டாவது முறையாக நினைத்துப் பார்க்கவே கூசும் நரகல் மொழி நடையில் பச்சை பச்சையாகவும் தாறுமாருகவும் எழுதியிருந்தது. வேறு யாரும் அதைப் பார்த்துவிடக் கூடாதே என்ற பயத்தோடும் எச்சரிக்கையோடும் அதைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துத் தெருக் குப்பைத்தொட்டியில் கொண்டு போய்ப் போட்டுவிட்டு வந்தான் கண்ணன். அப்படி மிகுந்த கவனத்தோடு அதை அவன் செய்திருந்தபோதும்கூட, "என்னது? எதையோ ரகசியமாய்ப் படிச்சுட்டுக் கிழிச்சுக் குப்பைத் தொட்டியிலே கொண்டுபோய்ப் போட்டுவிட்டு வந்தாப்ல இருக்கே?"—என்று அவன் மனைவி சுகன்யா கேட்டே விட்டாள்.

"அதெல்லாம் உனக்கு ஒண்ணுமில்லே! ஆபீஸ் விஷயம்"—என்று மழுப்பினுன் கண்ணன். அவள் சிரித்துக் கொண்டே போய்விட்டாள்.

ஆனுல் விஷயம் அதோடு முடிந்து போகவில்லை. இரவு ஏழு ஏழரை மணிக்குப் பாகவதரே கையிலே 'உண்மை விளம்பி'யுடன் அவனைத் தேடி வந்தார்.

"உங்க கிட்டக் கொஞ்சம் தனியாப் பேசணும்."

"இதோ வரேன்..."

கண்ணன் சட்டையை எடுத்து மாட்டிக்கொண்டு பாகவதரோடு சேர்ந்து வெளியே கிளம்பினுன். தெருக் கோடியில் கொஞ்சம் ஒதுக்குப்புறமாயிருந்த ஒருமரத்தடிக்கு வந்ததும் பாகவதர் நின்ருர்.

"உங்க சிநேகிதர் அன்னிக்கு மிரட்டிட்டுப் போனுர்! இது இன்னிக்கித் தபால்லே வந்துது. கன்னுபின்னுனு எழுதியிருக்கா..."

"நானும் பார்த்தேன்! யாரோ கொண்டுவந்து காமிச்சா...வருத்தப்பட்டேன்."

"நீங்க எதுக்கு அநாவசியமா வருத்தப்படணும்? நானே இதற்காக வருத்தப்படலியே...?"

"மனிதர்களின் வயிற்றிலடிக்கிறப் போலப் பிழைப்பைக் கெடுக்கிற மாதிரி எழுதறதை நான் வெறுக்கிறேன்."

இதைக் கேட்டுப் பாகவதர் சிரித்தார். "மிஸ்டர் கண்ணன்! இப்படியெல்லாம் எழுதறதாலே ஒருத்தரோட பிழைப்புக் கெட்டுப் போகும்னு நீங்க நினைக்கிறதே ஹைதர் காலத்து உத்தி. இந்தக் காலத்து சைகாலஜியே வேற மாதிரி. ஒருத்தனைப் பத்தி அவன் பரம யோக்கியன், ஏகபத்தினி விரதன், ஒழுக்க சீலன், பரஸ்திரீகளை ஏறிட்டும் பார்க்காத பரிசுத்தவான் அப்படீன்னெல்லாம் எழுதினா அந்த யோக்கியன் யாருன்னு பார்க்க இன்னிக்கு நாலு பேர்கூட வரமாட்டா! அதே சமயத்தில் மூன்று பெண்டாட்டிக்காரன், குடிகாரன், கொலைகாரன, பெண் பித்தன், கஞ்சா அடிக்கிற வன், ஆள்மயக்கின்னு ஒருத்தனைப் பத்தி எதிர் மறையா எழுதினா அவன் யாருன்னும் எப்படியிருக்கான்னும் பார்க்க லட்சக்கணக்கிலே ஜனங்க கூடும். அதுதான் இந்தக் கால வெகுஜன மனப்பான்மை. அந்த வகையிலே இதிலே எழுதி யிருக்கிறதெல்லாம் நிஜமில்லேன்னாலும் இதனாலே ஏற் கெனவே பிரபலமான நான் அடையப் போற பப்ளிஸிட்டி அதிகம்தான். என் பிழைப்புக்கு விளம்பரமும் வருமானமும் அதிகமாகுமே ஒழியக் குறைஞ்சிடாது. ஒன்பது பேரை ஒரே இரவில் கொலை பண்ணின ஜெயப்ரகாஷைக் கோர்ட்டுக்குக் கொண்டு வந்தப்போ அவனைப் பார்க்கக் கூட்டம் அலைமோதித்து. தெரியுமோன்னோ?"

"உங்களை ஏன் அவனோடு ஒப்பிட்டுக்கொள்கிறீர்கள்?"

"ஒப்பிடவும் இல்லை. உபமானமாகச் சொல்லவும் இல்லை. சும்மா ஒரு வார்த்தைக்குச் சொன்னேன். அவ்வளவுதான்.

அம்மிணி இந்த வயசிலேயும் லட்சுமீகரமா இருக்கா. நல்ல ரசிகை. சின்ன வயசிலே மலையாள இலக்கியமும் சம்ஸ்கிருதமும் நிறையப் படிச்சிருக்கா. அவ பொண்கள்லே ரெண்டு டான்ஸ் ஆடறது. மத்தது நடிக்கிறதுங்கறு...ஒண்ணு ரொம்ப ரொம்பக் கவர்ச்சி நடிப்பெல்லாம் நடிச்சு 'ஸெக்ஸ் பாம்'னு கூடப் பேர் வாங்கியிருக்காம். ஆனு என் பழக்கம் வேற லெவல்னு நீங்க புரிஞ்சுக்கணும். மோர் ஆர் லெஸ் என்னுது ஒருவிதமான இண்டெலக்சுவல் கம்பானியன்ஷிப். இதுலே உடம்பைச் சம்பந்தப்படுத்தி எழுதறது கயவாளித்தனம் அல்லது பிளாக் மெயில்னே சொல்லுவேன். ரைஸிங் ஸ்டீல் இண்டஸ்ட்ரீஸ் மானேஜிங் டைரக்டர் சிதம்பரம், அவரோடவீட்டிலே மஹிஷாசுரமர்த்தனி ஸ்லோகம் சொல்லி பூஜைக்கு அழைச்சா நான் போயிட்டுப் பூஜையைப் பண்ணிச் சம்பாவனை வாங்கிண்டு வரேனே இல்லையா? அவரோட மற்ற ஊழல், ஒழுக்கமின்மை, ஆபீஸ் லௌகீகம், இதை எல்லாம் நான் பார்த்துத் தயங்கறதில்லையே? அதைப்போல அம்மிணி அம்மா பயபக்தியோட நாராயணீயம் சொல்ல அழைச்சாலும் போறேன். மத்ததைப் பத்தி யோசிச்சுத் தயங்கலே...இதை மட்டும் ஏன் இப்பிடிக் கொச்சைப் படுத்தருன்னுதான் தெரியலே..."

"உங்கதர்க்கத்திலே நியாயம் இருக்குப் பாகவதர்வாள்."

"ஏன், நியாயமில்லேன்னுதான் சொல்லிப் பாருங்களேன்! அதுக்காக நான் கவலைப்படவோ, பயப்படவோ போறதில்லை. ஐயாம் திக் ஸ்கின்ட்."

தன்னிடம் பாகவதர் கொஞ்சம் ஆத்திரத்துடனேயே பேசுவது கண்ணனுக்குப் புரிந்தது. அதைவிடப் பெரிய வியப்பு அவர் இந்த மாதிரிப் பூச்சாண்டிக்கெல்லாம் பயப்படாதவராக இருந்ததுதான். மிகவும் திடமாகவும் உறுதியாகவும் இருந்தார்.

"உங்க நண்பர் கிட்டச் சொல்லுங்கோ! பனங்காட்டு நரி சல சலப்புக்கு அஞ்சாதுன்னு."

—என்று அந்த உரையாடலை முறித்துக்கொண்டு திடீரென்று திரும்பிச்சென்றுவிட்டார் பாகவதர். கண்ணனுக்கு என்னவோ போலிருந்தது.

கண்ணன் பாடு மத்தளத்திற்கு இரு பக்கமும் இடி என்பது போலாயிற்று. நண்பனோ பாகவதரிடம் எச்சரித்து வை என்று தன்னிடம் வந்து மிரட்டுகிறான். பாகவதரோ 'உன் நண்பனிடம் நான் பயப்பட மாட்டேன் என்று போய்ச் சொல்' என்கிறார். வேடிக்கையாகத்தான் இருந்தது. தான் இருவருக்கும் நடுவே வசையாக மாட்டிக் கொண்டதை அவன் உணர்ந்தான்.

# 6

அன்று வெள்ளிக்கிழமை. வழக்கமாக ஒவ்வொரு வெள்ளியும் அம்மிணி அம்மாள் வீட்டுப் பூஜையறையில் குருவாயூரப்பன், மூகாம்பிகை படங்களுக்குச் சிறப்பாக அலங்காரம் செய்து தேவி பாகவதம் சொல்லி வந்தார் பாகவதர்.

அன்றும் அதற்காக அவர் வழக்கம் போல அம்மிணி அம்மாளின் வீட்டுக்குப் போனார். அந்த வீட்டில் யாருக்கும் தமிழ் எழுதப் படிக்கத் தெரியாது. ஆனால் பழக்கம் காரண மாக நன்றாய்ப் பேசத் தெரியும். மலையாளமும், ஆங்கில முமே எழுதப் படிக்கப் பேச வரும்.

உள்ளே மனத்தில் வைத்துக்கொண்டு தவிப்பதைவிட—மறைத்து ஒளிப்பதைவிட அந்த மஞ்சள் பத்திரிகை உண்மை விளம்பியில்—வந்திருப்பதை எல்லாம் அந்த வீட்டார் எல்லாருக்கும் சொல்லிவிடுவது என்று பாகவதரே அதை எடுத்துக்கொண்டு போய் இருந்தார். அதையெல் லாம் நேரடியாகச் சொன்னால் அவர்களே மிரண்டு போய் விடுவார்களோ என்ற தயக்கம் அவருக்கு இருந்தது. 'தேவி பாகவதமும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம். நீங்கள் இங்கே வந்து போவதால் தானே இந்த வம்பு எல்லாம்?

கொஞ்ச நாளைக்கு நீங்கள் இங்கே வரவே வேண்டாம்'—என்று அவர்களே கூறினாலும் அதற்குத் தயாராயிருக்கும் துணிவோடுதான் அவர் சென்றிருந்தார். பிழைப்பைக் காப்பாற்றிக் கொள்கிற ஆளாயிருந்தால் அம்மிணி அம்மாளுக்கும் மற்றவர்களுக்கும் தமிழ் படிக்கத் தெரியாது என்ற ஒரே வசதியைப் பயன்படுத்திக்கொண்டு அந்த விவரமே அவர்களுக்குத் தெரியவிடாமல் மறைக்கவே அவர் முயன்றிருப்பார். ஆனால் பாகவதர் அப்படிச் செய்யவில்லை. ஆண் துணையற்ற அம்மிணியம்மாவின் குடும்ப நண்பர் என்ற தம் உரிமையை இம்மியும் தவருகப் பயன்படுத்துகிற எண்ணம் அவருக்கு இல்லை. உலகத்துக்கு அவர் பயப்படவில்லை. அதே சமயம் உண்மையை மறைக்கவும் விரும்பவில்லை. தாம் செய்யாத தவற்றுக்காக வருந்தவோ கூசவோ அவர் தயாராயில்லை.

தேவி பாகவதம், பூஜை எல்லாம் முடிந்தது. ஆரத்தி எடுத்து சம்பிரதாயமாகப் பூஜையை நிறைவு செய்தபின் தம்முடைய வழக்கமான கதா காலட்சேப பாணியிலேயே அதை விவரிக்க ஆரம்பித்தார் அவர்:

"இன்றைக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்சரின் உபகதைகளிலே மிகவும் அருமையான கதை ஒன்றை இப்போது உங்களுக்குச் சொல்லப் போகிறேன். கதையைவிட அதன் உள்ளர்த்தம்தான் மிக முக்கியம். எல்லாரும் உள்ளர்த்தத்தை மட்டும் கவனியுங்கள்.

"இரண்டு சிநேகிதர்கள் வீட்டை விட்டு வெளியே புறப்பட்டார்கள். மாலை நேரம். ஒரு சிநேகிதன் கோவில் முன் மண்டபத்தில் நடக்கும் இராமாயணப் பிரவசனத்தைக் கேட்பதற்காகப் போய்க்கொண்டிருக்கிறேன் என்றான். மற்றொருவன் இன்பமாகப் பொழுதைக் கழித்து மகிழ்வதற்காகத் தாசி வீட்டுக்குப் புறப்பட்டுப் போகிறேன் என்றான்.

“போகிற வழிக்குப் புண்ணியம் தேடி இராமாயணம் பாகவதம், என்று கேட்டுப் பயன் அடையாமல் இப்படிக் காமுகனாக அலைகிறாயே? நீ தேறுவாயா? உன்னை நினைத்து நான் பரிதாபப்படுகிறேன்’ —என்று இரண்டாவது சிநேகிதனைப் பார்த்து முதல் சிநேகிதன் வருத்தப்பட்டான். அதைக் கேட்டு இரண்டாவது சிநேகிதனும் சும்மா இருந்துவிடவில்லை. தான் பங்கு உபதேசத்தை முதல் சிநேகிதனுக்கு உடனே பதிலுக்குச் செய்யத் தொடங்கினான்:

“என்றைக்கோ எந்த உலகத்திலோ புண்ணியப் பயன் தரப்போகிறதென்று இன்றைக்கு இந்த உலகத்தில் ஏன் சிரமப்பட வேண்டும்? கிடைக்கிற இன்பங்களைக் கிடைக்கும் மட்டும் அநுபவிக்க வேண்டியதுதானே? அடுத்த உலகத்தையும் அடுத்த பிறவியையும் நினைத்துக்கொண்டு வீணாக அவஸ்தைப்படுவானேன்?’

“ஒருவர் மற்றவரை மாற்ற முயன்றாலும் அது பலிக்காமல் புறப்படும்போது திட்டமிட்டபடியே இருவரும் அவரவர் நினைத்த இடங்களுக்குப் போயிருந்தனர். அவரவர் நினைத்ததை அநுபவித்தனர்.

“ஆனால் ஒரே ஒரு வித்தியாசம். இன்று இவர்கள் இருவரும் தத்தம் பாதைகளை நோக்கி விடை பெற்றுப் பிரியும்போது ஒருவர் மற்றவரைக் கேட்ட வினாவும் அதன் பாதிப்பும் அவரவர் மனத்தை ஊடுருவித் தைத்த நிலையில் பிரிந்திருந்தனர்.

“தாசி வீட்டுக்குப் போன நண்பன் சிந்தித்தான்.

“ஒருவேளை நம் நண்பன் சுட்டிக் காட்டிக் குறை கூறியது போல் நாம் செய்வது தவறுதானா? இராமாயணம், பாரதம், பாகவதம் போன்ற சத்விஷயங்களைப் பற்றி எல்லாம் கேட்பதற்குப் பதில் தாசி வீட்டில் வீணே பொழுதைக் கழிக்கிறோமே? ஐயோ! வழி தவறிப் போனோமே?’

“‘இராமாயணம் கேட்கப் போன நண்பனின் மனம் அங்கே இராமாயணத்தில் லயிக்கவே இல்லை. தாசி வீட்டுக்குப் போனவன் எப்படி எப்படி எல்லாம் சுகத்தை அநுபவித்துக் கொண்டிருப்பான் என்ற கற்பனையிலேயே முழுக்க முழுக்க ஈடுபட்டிருந்தது.

“‘‘ஐயோ! இந்தப் பிறவியில் எந்தச் சுகத்தையும் அநுபவிக்காமல் பாவம் என்று ஒதுக்கிவிட்டு அடுத்த பிறவிக்குப் புண்ணியம் சேர்த்து ஆகப் போவதென்ன என்று நண்பன் கேட்டதில் என்ன தவறு? போகிற வழிக்குப் புண்ணியம் என்ற ஒரே குருட்டு நம்பிக்கையில் இந்த உலகில் இன்று இந்த விநாடியிலேயே அநுபவிக்கவேண்டிய அநுபவிக்க முடிந்த—சுகங்களை உதறிவிட்டு அடுத்த பிறவிக்கு எதைச் சேர்த்து என்ன கிழிக்கப் போகிறோம்?’

“இப்படி இரண்டு பேருமே தாங்கள் போன மார்க்கங்களில் மனம் லயிக்காமல் அவநம்பிக்கைப் பட்டதன் மூலம் அவர்களது பாவ புண்ணியப் பலன்களே இருவருக்கும் முறை மாறிக் கிடைத்தன. தாசி வீட்டுக்குப் போனவன் இராமாயணத்தையே நினைத்துக் கொண்டிருந்ததால் அவனுக்குப்புண்ணியமும் இராமாயணம் கேட்கப்போனவன் தாசி வீட்டையே நினைத்துக்கொண்டிருந்ததால் அவனுக்குப் பாவமும் கிடைத்தன என்றார் இராம கிருஷ்ண பரமஹம்சர்.

“இந்தக் கதை இப்போது நமக்கு முழுவதும் பொருந்த வில்லை என்றாலும் நம்மை எதிர்க்கும் சில பொறாமைக்காரர்களுக்கு ஓரளவு பொருந்துகிறது. நாம் என்ன செய்கிறோம் என்பதை வீணாக நினைத்து நினைத்தே தவறாகக் கற்பனை செய்து கொண்டு சிரமப்படுகிறார்கள் சில பொறாமைக் காரர்கள். அவர்களுக்காக நாம் அநுதாபப்படுவதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியாது.”

இந்த இடத்தில் கதையையும் தாம் சொல்லி வந்ததையும் மற்றவர்கள் முகங்களையும் ஏறிட்டுப் பார்த்தார்

பாகவதர். சில நிமிட மௌனத்துக்குப் பின் அந்த மஞ்சள் பத்திரிகையை எடுத்துக் காண்பித்து அதில் எழுதி யிருப்பதை ஒளிவு மறைவின்றி அவர்களுக்குச் சொன்னார் பாகவதர்.

அதைக் கேட்டு அம்மிணி அம்மாவும், அவளது பெண் களும் கலகலவென்று சிரித்தார்கள்.

"பாகவதரே! இதற்காகவா இவ்வளவு பெரிய அடிப் படையோடு கதை கிதை எல்லாம் சொல்ல ஆரம் பித்தீர்கள்? இது ரொம்பப் பழைய சங்கதி! இந்தப் பத்திரிகை யிலேருந்து யாரோ ஒருத்தன் கே. சி. எம் ஸ்டூடியோ விலேயே என்ட மோளையைச் சந்திச்சுப் பயங்காட்டி ரெண்டாயிரம் குடுத்தா இதை நிறுத்திடறேன்னிருக்கான். அவள் மசியலே; முடியாதுன்னுட்டா. நானும் அவ செய்தது தான் சரின்னுட்டேன். இதைப் பார்த்து நீங்க ஒண்ணும் கலங்கவேண்டாம். உங்களைப் போல ஒரு பாகவத சிரேஷ்டரோடு என்னைச் சம்பந்தப்படுத்தி இப்பிடி எழுதினதுக்கு நான் குடுத்து வச்சிருக்கணும். எனிக்கு இதிலே கொஞ்சமும் வருத்தமில்லே. உங்களுக்கு ஒருவேளை யாரோ ஒரு கெட்ட பொண்ணோட நம்மளை இப்படிச் சம்பந்தப்படுத்தி எழுதிக் களங்கப்படுத்திட்டானேன்னு வருத்தமிருக்கலாம்" என்றாள் அம்மிணி.

"எனக்கு ஒரு வருத்தமுமில்லே! நான் இது மாதிரிப் பய முறுத்தலுக்கு எல்லாம் பயப்படறவன் இல்லே" என்றார் பாகவதர்.

"பின்னே இதை ஒரு பொருட்டா மதிச்சு இவ்வளவு நேரம் வீணடிச்சிருக்க வேண்டாமே."

"உண்மையை உங்களிடம் மறைக்கப் படாது பாருங்கோ! அதான் கொண்டு வந்து அப்படியே படிச்சுக் காண்பிச்சேன்."

“எனக்கும் உங்களுக்கும் பால்யப் பிராயமா இருந்தா இதிலே சொல்லியிருக்கறதை ருசுப்பிச்சிருக்கணும்னுகூட எனக்குத் தோணும் சுவாமி” என்று அம்மிணி அம்மாள் கண்களைச் சிமிட்டிக் கொண்டே கூறியபோது திடீரென்று அவளது வயது குறைந்து பேரழகு யுவதியாகி விட்டாற் போலப் பாகவதரின் கண்களுக்குக் காட்சியளித்தாள்.

அதைக் கேட்டுப் பாகவதர் கூச்சப்பட்டார். அம்மிணி அம்மாவைப் பார்த்து முகத்தில் அசடு வழியச் சிரித்தார். அவர் இத்தனை வெளிப்படையான நெஞ்சுறுதியை அந்தப் பெண்களிடம் முதலிலேயே எதிர்பார்க்காததுதான் காரணம்.

# 7

காலனி வெல்ஃபேர் அஸோஸியேஷன் கூட்டம் நடந்தது. ஒரு முக்கியமான நோக்கத்தோடு அந்தக் கூட்டம் கூட்டப்பட்டிருந்ததால் எல்லா அங்கத்தினர்களும் வருவதற்கு வசதியாக ஜெனரல் பாடியாகவே கூட்டப்பட்டிருந்தது. காலனிவாசிகள் எல்லாரும் வந்தனர்.

கொஞ்சம்கூடக் கூச்ச நாச்சமின்றி—ஊர் என்ன பேசும் என்ற பயமோ பதற்றமோ இல்லாமல்—அம்மிணி அம்மாவும், நாகசாமி பாகவதரும் சேர்ந்தே வந்தார்கள். பாகவதர் அழகிய சால்வை போர்த்திக்கொண்டு சிவப் பழமாகக் காட்சியளித்தார். கையகலப் பொன் சரிகைக் கரையிட்ட நேரியல் முண்டு கட்டி நெற்றியில் அழகிய சந்தனக் கீற்றைத் தீற்றிப் பொட்டுக்கும் நெற்றிக்கும் வித்தியாசம் தெரியாத சந்தன நிற மேனி மினுமினுக்கப் புன்சிரிப்போடு ஒவ்வொருவராகக் கைகூப்பி வணங்கியபடி அம்மிணி அம்மா மீட்டிங் நடக்கும் ஹாலில் நுழைந்தபோது காரியதரிசி கண்ணன் மட்டும் அவள் வந்த திசையிலேயே பாராமல் முகத்தை வெறுப்போடு வேறுபக்கமாகத் திருப்பிக் கொண்டான்.

அம்மிணி அம்மா உள்ளே நுழைந்தபோது நாட்டியக் காரிகளாகவும், நட்சத்திரங்களாகவும் இருக்கும் அவள் பெண்களின் பெயர்களை முணுமுணுத்து, "இவதான் அதுகளோட அம்மாக்காரி! நம்ம காலனி வாசி! இஞ்சிக்குடி பாகவதரிட்ட சகலமும் அடக்கம்" என்று கூட்டத்தில் இரகசியமாய்க் காதும் காதும் வைத்தாற்போல் முணு முணுத்துப் பேசிக் கொண்டார்கள்.

ஓரிருவர், "யோவ்! இவதான்யா செக்ஸ் பாம் நந்தினி யோட மதர்! நல்லாப் பார்த்துக்கோ—"என்று கூடச் சொல்லிச் சிரித்தனர். அப்படிச் சிரித்தவர்களுக்கு அதில் ஒரு நமட்டு மகிழ்ச்சி.

காலனி நலம் நாடுவோர் சங்கத்தின் தலைவரான சுந்தரவரதனையே—ரிட்டயர்டு போஸ்டு மாஸ்டரையே—கூட்டத்துக்குத் தலைமைதாங்கி நடத்திக்கொடுக்கச் சொல்ல வேண்டும் என்று செயலாளர் கண்ணன் நினைத்திருந்தான்.

அந்தக் காலனி எல்லையில் ஒரு சிறிய பிள்ளையார் கோயில் கட்ட ஏற்பாடு செய்யவே அந்தப் பேரவை கூட்டப் பட்டிருந்தது. பிள்ளையார் கோயில் என்பதால் கூடியிருந்தவர் களில் சிலர் கண்ணனைக் கலந்து பேசி யோசிக்காமலே திடீரென்று பாகவதரை அந்தக் கூட்டத்திற்குத் தலைமை வகிக்குமாறு முன்மொழிந்து விட்டனர். உடனே கூட்டமும் அதைப் பேராரவாரத்துடன் கைதட்டி வரவேற்று விட்டது. பாகவதர்தான் ஊரறிந்த பிரமுகராயிற்றே.

கண்ணனுக்கு எதிர்பாராத அதிர்ச்சி, நிலைமை அவன் கையை மீறிப் போயிருந்தது. இனி ஒன்றும் செய்வதற் கில்லை. காலனி அஸோஸியேஷன் தலைவரே இந்தக் கூட்டத்தையும் தலைமை வகித்து நடத்தட்டும் என்று எண்ணியிருந்தான் கண்ணன். அதில் இப்போது மண்

விழுந்திருந்தது. பாகவதர் 'கோவில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்'—என்ற பழமொழியில் தொடங்கி ஆலயம் கட்டுவதன் அவசியத்தை வற்புறுத்தி ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தபின் திருப்பணிக்குத் தாராளமாகப் பொருளுதவி செய்யவேண்டும் என்று எல்லாரையும் வேண்டிக்கொண்டார். அவரே மேலும்கூறினார்: "என்னோட அபிப்ராயம் வெறும் பிள்ளையார் மட்டும் போறாது. ஒரு சின்ன குருவாயூரப்பன் சந்நிதியும், ஐயப்பன் சந்நிதியும் கூட வேணும். எல்லாருக்கும் பிரயோசனமாயிருக்கும். மலைக்குப் போறவாளுக்குப் பூஜை பண்ண வசதி. குருவாயூரப்பன் சந்நிதி சைவ வைஷ்ணவ பேதமின்றி இரு சாராருக்கும் தரிசனத்துக்கு ஏற்ற ஏற்பாடாயிருக்கும்."

இப்படிப் பாகவதர் கூறியதை அடுத்து உடனே அம்மிணி அம்மாள் எழுந்து, "பாகவதர் கூறியபடி குருவாயூர் கிருஷ்ணர் சந்நிதி ஐயப்ப சுவாமி சந்நிதிகளைக் கட்டி முடிக்க ஆகிற அவ்வளவு செலவையும் நான் ஏத்துக்கறேன்—" என்று கூறியபோது அதைப் பாராட்டி வரவேற்றுப் பலத்த கரகோஷம் அங்கே எழுந்தது.

அதன்பின் பேசிய பலரும் அம்மிணி அம்மாளின் தாராள மனத்தையும் பக்திப் பாங்கையும் பாராட்டிப் புகழ்ந்தனர். கூட்டத்தின் போக்கே திசை மாறி அவள் பக்கம் திரும்பி விட்டது.

முடிவில் கண்ணன் அஸோஸியேஷனின் காரியதரிசி என்ற முறையில் பேரவைக்கு நன்றி கூறவேண்டும். பாகவதரையும், அம்மிணி அம்மாவையும் தன் வாயால் புகழும்படி ஆகிவிடக் கூடாதே என்று கண்ணனுக்கு ஒரே பதற்றம். மெல்லத் தான் நன்றி கூற நேராமல் தட்டிக் கழிக்க ஓர் ஏற்பாடு செய்தான். காலனி அஸோஸியேஷன் தலைவரிடம் போனான். "தலைவர் நீங்க இருக்கறப்ப நீங்க

நன்றி கூறினுத்தான் மத்தவங்களுக்குப் பெருமையா இருக்கும். நீங்க கூட்டத்துக்குத் தலைமை வகிச்சா நான் நன்றி கூறியாகணும்னு நேர்ந்துவிடும். இன்றோ தலைமை பாகவதருக்குப் போய்விட்டது. நன்றியையாவது தலைவர்ங் கிற முறையிலே நீங்க சொல்லிடணும்''—என்று பவ்யமாக எடுத்துரைத்தான்.

முதலில் அடக்கமாக மறுத்து ஒதுங்கப் பார்த்த தலைவர் அப்புறம் சரி என்று சம்மதித்தார். அப்பாடா என்று நிம்மதி யாகப் பெருமூச்சு விட்டான் கண்ணன். தலைவர் தம்முடைய நன்றியுரையில் தமது பங்கிற்கு அம்மிணியம்மாளின் தர்ம சிந்தனையையும், தெய்வ பக்தியையும் வானளாவப் புகழ்ந்தார். பாகவதர் இருப்பதானது தங்கள் காலனியின் பெருமையையே உயர்த்தக் கூடியது என்றும் புகழ்ந்து கூறினார். கண்ணன் சாமர்த்தியமாக ஒதுங்கி விட்டதைப் பாகவதரும், அம்மிணி அம்மாளும் கவனித்துப் புரிந்து கொண்டார்கள். அவன் ஏதோ 'காம்ப்ளெக்ஸ்' காரணமாக வீணுக்கு அலட்டிக் கொள்வதாக அவர்களுக்குத் தோன்றியது. காலனியில் யாருமே 'உண்மை விளம்பி' யைப் படித்துப் பாதித்ததாகவோ, பாகவதர்—அம்மிணி அம்மாள் நெருக்கத்தைப் பற்றிக் கவலைப் பட்டதாகவோ காண்பித்துக் கொள்ளவில்லை. ஒருவேளை 'இத்தகைய செய்திகள் மூலம் இன்று ஒருவருடைய கவர்ச்சி அதிகமாகுமே ஒழியக் குறையாது'—என்று பாகவதர் கூறிய விளக்கம்தான் சரியானதோ என்று கண்ணனுக்கே இப்போது தோன்றியது.

காலனியில் கோவில் கட்டுவதற்கான துணைக் கமிட்டியில் பாகதவர்—அம்மிணி அம்மாள் இருவருமே இடம் பெறுவதை அவனால் தடுக்க முடியவில்லை. தாங்கள் அந்தக் கூட்டத் திலும் கமிட்டியிலும் அவ்வளவு முக்கியத்துவம் பெற்றது

கண்ணனுக்கு எரிச்சலூட்டியிருக்கும் என்பதைப் பாகவதரும் அம்மிணி அம்மாவும் உள்ளூர உணர்ந்தே இருந்தனர்.

அன்றைய கூட்டம் எல்லாம் முடிந்து சங்கத் தலைவரும், பொருளாளரும் தானும் மட்டும் தனியானபோது கண்ணன் மெல்ல ஆரம்பித்தான். "எனக்கு ஒரு சின்ன சந்தேகம்! இந்த மலையாளத்து அம்மாவையும் இஞ்சிக்குடியாரையும் பற்றி ஊர்லே ஒரு மாதிரிப் பேசிக்கிற சூழ்நிலை இருக்கு, சில பேப்பர்களிலே கூட ஏதோ இவங்க ரெண்டு பேரையும் பத்தித் தாறுமாறு வந்திருக்குன்னு கேள்விப் பட்டேன். இவங்களைப் போய்க் கோயில் கமிட்டியிலே போட்டிருக்கோமே?"

"கமிட்டியிலே நாமா போட்டோம்? ஜெனரல் பாடி யின்னு விரும்பித் தேர்ந்தெடுத்திருக்கு. பாகவதர் ரொம்பப் பிரபலமா இருக்கார். அவர் குருவாயூரப்பன், ஐயப்பன் சந்நிதிகள் வேணும்னு சொல்லி முடிக்கிறத்துக்குள்ளே அந்தம்மா எழுந்திருந்து அதுக்கான அத்தனை செலவையும் ஒத்துக்கறேன்னுட்டா. இதெல்லாம் பார்த்து மத்தவங் களுக்குப் பிரமாதமாப் படத்தானே செய்யும்?" என்றார் தலைவர்.

"நாமும் இதிலே சம்பந்தப்பட்டிருக்கோமே! அதான் பார்க்க வேண்டியிருக்கு..."

"அவா ரெண்டு பேரோட பெர்ஸனல் லைஃபைப் பத்தி நாம என்ன பண்ணமுடியும்? நாடு இன்னிக்கு இருக்கிற நிலைமையில எத்தனையோ பெரிய பாலிட்டிஷியன்ஸ், தொழி லதிபர்கள், வியாபாரிகள் இவங்களோட பெர்ஸனல் கேரக் டர்னு பார்த்தோம்னு ஒருத்தர் கூடத் தேர்றது கஷ்டம்."

"அதுக்கில்லே! கோயில் விஷயமாச்சேன்னுதான் பார்த்தேன்! வேற ஒண்ணுமில்லே."

"அதெல்லாம் ரொம்ப டப்பா ஒண்ணும் பார்க்காதீங்க கண்ணன்! பட்டும் படாமலும் இருந்துக்குங்க! நமக்குக் காரியம் ஆகணும். கோயில் கட்டி முடிக்கிறோமா இல்லையாங் கிறதை வச்சுத்தான் நம்ம கமிட்டிக்கு ஊர்ல மரியாதை. கோவில் கட்ட மனுஷா உதவியும், பணமும் வேணும். பணம் யார் தரான்னு தேடி வாங்கிக்கணுமே ஒழிய அது எப்பிடிப் பட்டவா கையிலேருந்து வரதுன்னு வீணா ஆராய்ச்சி பண்ணிட்டிருக்கறதுலே பயனில்லே! முதல்லே இதை நீங்க புரிஞ்சிக்கணும்."

சங்கத் தலைவர் இவ்வாறு கூறியதிலிருந்து இந்த விஷயத்தில் தன்னளவு மனச் சங்கடம் அவருக்கு இல்லை யென்று கண்ணனுக்குப் புரிந்துவிட்டது. நண்பன் பாகவதரையும், அம்மிணி அம்மாவையும் பற்றி 'பிளாக் மெயில்' செய்வது போல் தோன்றுவதையே பொறுத்துக் கொள்ள முடியாமல் இருந்தாலும் கண்ணனுடைய அடி மனத்திலும் அவர்கள் இருவர் மேலும் ஏதோ ஒரு துவேஷம் முளைக்கத் தான் செய்திருந்தது. அடுத்த வீட்டுக்காரர்கள், உத்தி யோகங்களில் அடுத்தடுத்த நிலையிலிருப்பவர்கள், சக்களத்திகள், மாமியார் மருமகள், எலியும் பூனையும் என்று இவர்களுக்கிடையே இனம் புரியாத வெறுப்பும் விரோதமும் கடவுளாலேயே படைக்கப்பட்டு விட்டதோ என்னவோ? தன்னளவுக்குத் தன் மனைவியோ குழந்தையோ கூட அம்மிணி அம்மாவையும், பாகவதரையும் வெறுக்கவோ, விரோதித்துக் கொள்ளவோ தயாராயில்லை என்பதையும் அவன் உணர்ந்துதான் இருந்தான். தான் இதில் தனித்து ஒதுக்கி விடப்பட்டு விட்டோமோ என்றுகூட அவன் உள்ளத்தில் தோன்றியது. தன்னை எதிரியாகப் பாவிக்காத இரண்டு பேரைத் தான்மட்டும் எதிரிகளாகப் பாவிப்பதும வெறுப்பதும் ஏன் என்று அவனுக்கே புரியவில்லை. மர்மமாக இருந்தது. வெறுப்பை விடவும் முடியவில்லை. தவிர்க்கவும் இயலவில்லை.

இதனால் அவனுக்குப் பயந்து மனைவியும், குழந்தையும் அவன் வீட்டில் இருக்கும்போது அவனறியப் பக்கத்து வீட்டோடு பேச்சு வார்த்தைகள் இல்லாமல் ஜாக்கிரதை யாக நடிக்கக் கற்றுக் கொண்டிருந்தனர். கண்ணனின் போக்கு அவர்களை மிகவும் பாதித்திருந்தது.

கோயில் கட்டுவதற்கான கமிட்டி அமைக்கப்பட்டுப் பதிவானதும் முதல் வருமானமே அம்மிணி அம்மாளிட மிருந்துதான் வந்தது. கமிட்டியின் பெயருக்கு ரூபாய் இருபத்தையாயிரத்துக்கு ஒரு செக் அனுப்பியிருந்தாள் அந்த அம்மாள். கமிட்டி அப்படியே அவளைக் கொண்டாடியது. புகழ்ந்தது.

அடுத்த கமிட்டிக் கூட்டத்திலேயே தங்களுக்கு விருப்ப மான இன்னொரு காரியத்தையும் பாகவதர் சுலபமாகவே நிறைவேற்றிக் கொண்டார்.

அவர்கள் வசித்த அந்தக் காலனிக்கு வெறும் ஹவுஸிங் யூனிட் நம்பர் 64 என்று மட்டும் அநாமதேயமாக ஒரு எண்ணின் பெயர் இருந்து வந்தது. அதை 'சாஸ்தா நகர் எக்ஸ்டென்ஷன்' என மாற்ற வேண்டும் என்றார் பாகவதர்.

அன்று எப்படியாவது அதை எதிர்த்தாக வேண்டும் என்பதற்காக அதே கூட்டத்தில் மற்றொருவரிடம் சொல்லி அதை மறுத்து வேறு பெயரை முன்மொழியச் செய்தான் கண்ணன். மறுப்பதற்கு அவன் தேர்ந்தெடுத்த ஆள்தான் புலவர் மகிழ்மாறன்.

"இங்கே ஏற்கெனவே மலையாள ஆதிக்கம் அதிகமா யிருக்குன்னு நம்ம காலனிவாசிகள் மத்தியிலே ஒரு கெட்ட பெயர் வந்திருக்கு! எனவே நம் பண்பாடுகளையும் கற்பின் சிறப்பையும் வற்புறுத்துகிற மாதிரி இதற்குக்'கண்ணகி நகர்'

என்று பெயர் சூட்டுவதே சாலச் சிறந்ததாய் இருக்கும்''— என்றார் புலவர் மகிழ்மாறன். 'சாஸ்தா நகர்' என்பதில் வருகிற வடமொழி 'ஸ்' அவருக்குப் பிடிக்கவில்லை.

காலனிவாசிகளில் ஒருவரான தமிழ்ப்புலவர் மகிழ் மாறனே மறுக்கவும் பாகவதருக்குச் சங்கடமாகப் போய் விட்டது.

''கண்ணகி மதுரையை எரிச்சது மாதிரி இந்தக் காலனியும் ஏதாவது சாபத்திலே எரிஞ்சிடுமோன்னு பலருக்கு ஒரு அச்சான்யம் உண்டாகும்.''

''இதை நான் வன்மையாக மறுக்கிறேன். தமிழர் காப்பியமாம் தன்னிகரற்ற சிலம்பின் மாபெரும் பத்தினி கண்ணகிக்குக் களங்கம் உண்டாக்கும் முயற்சி இது! கண்ணகி எரித்தது மதுரையிலுள்ள தவறு புரிந்தவர்களை மட்டுமே! இங்கும் தவறு புரிந்தவர்கள்—புரிகிறவர்கள் குடியிருந்தால் அவர்களுக்குத்தான் இப்படிக் கண்ணகி நகர் எனப் பெயரிடுவது பிடிக்காது. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும் என்பது தமிழர் பழமொழி! குற்ற முள்ளவர் எரிக்கப்படவே வேண்டும்.''

புலவர் மகிழ்மாறன் சுற்றி வளைத்து எதைத் தொடு கிறார் என்று புரிந்து பாகவதர் அடங்கி விட்டார். சங்கத் தலைவருக்கோ பாகவதரை விரோதித்துக் கொள்ள விருப்ப மில்லை. அவர் சமாதானமாக முடித்தார்:

''புலவர் மகிழ்மாறன் அவர்களுக்கும் பாகவதர் அவர் களுக்கும் பொதுவாக நான் ஒரு பெயர் சொல்லுகிறேன். நல்ல தமிழில் 'ஐயப்பா நகர்' என்று வைத்து விடுவோம். பாகவதர் கூறிய அர்த்தமும் வந்து விடுகிறது. மகிழ்மாறன்

கருதிய தமிழும் வந்துவிடுகிறது! இருவருமே இதை ஆட்சேபிக்க மாட்டார்கள் என நினைக்கிறேன்.''

''நாளடைவில் சொல்லிச்சொல்லி மக்கள் அதை 'ஐயோ அப்பா நகர்' என்பது போல ஆக்கி விடுவார்கள். ஆகவே 'ஐயப்பன் நகர்' என்று இருந்தால் எமக்கு மறுப்பு இல்லை''—என்றார் புலவர்.

''எனக்கும் அது சம்மதம்தான்''—என்றார் பாகவதர். கூட்டம் முடிந்ததும் கண்ணன் புலவரைத் தனியே அழைத்துச் சென்று அவருக்குத் தன் அந்தரங்கமான பாராட்டுக்களைத் தெரிவித்தான்.

''புலவரே! உங்களை மாதிரிச் சிலர் இருப்பதால்தான் நம் காலனியின் தன்மானமும் இனமானமும் பாதுகாக்கப்படுகிறது. என் பாராட்டுக்கள். என் ஒத்துழைப்பு எப்போதும் உங்களுக்கு உண்டு''—என்று கண்ணன் கூறியவுடன் புலவர் உச்சி குளிர்ந்தார்.

எப்படியோ பாகவதர் கூறிய 'சாஸ்தா நகர்' என்ற பெயரை மாற்றி விட்டோம் என்ற திருப்தியில் கண்ணன் புலவரைப் பாராட்டினாலும் மற்றவர்கள் எல்லாரும் பாகவதர் கொடுத்த பெயரின் மறு வடிவமே 'ஐயப்பன் நகர்' எனக் கூறி அவருக்கு நன்றி தெரிவித்தனர். பெயர் சூட்டிய பெருமை பாகவதரின் பெருமையாகவும் வெற்றியாகவுமே அவர்களால் கொண்டாடப்பட்டது. காலனியின் பெயர் சாமி பெயராக இருக்க வேண்டுமென்று பாகவதரும் மற்றவர்களும் விரும்பினார்கள். அது பலித்துவிட்டது. சாஸ்தா வானால் என்ன? ஐயப்பனானால் என்ன? நினைத்தபடி பெயர் கிடைத்துவிட்டது. உண்மையில் 'சாஸ்தா நகர்' என்று பெயர் வைக்கும் யோசனையைப் பாகவதருக்குக் கூறியதே அம்மிணி அம்மாதான். நல்ல வேளையாக அது கண்ணனுக்குத் தெரியாது. பாவம்! தெரிந்தால் கூட்டத்தில் அதுவும் கடுமையான விமர்சனத்துக்குட்பட்டிருக்கும்.

# 8

ஒருநாள் காலை-ஜயப்பன் நகர் மேற்கு முதல் குறுக்குத் தெரு ஒன்பது, பத்து, பதினொன்று எண்ணுள்ள வீடுகளுக்கு இடையே பயரங்கரமான கூப்பாட்டுடன் தெருச் சண்டை ஒன்று நடந்தது. ஊரே தெருவில் கூடிவிட்டது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. எல்லாரும் வீட்டில் தான் இருந்தனர். பத்துமணிக்கு மின்சாரம் நிறுத்தப்பட்டு மரக் கிளைகளும் மன்சார வயரும் உரசுகிற இடங்களாகப் பார்த்து மரக்கிளைகளை வெட்டிக் கொண்டு வந்தனர் மின்சார வாரிய ஆட்கள். மின்வாரிய லாரி கண்ணன் வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தது.

அந்தக் காலனி முழுவதும் அண்டர்கிரவுண்ட் கேபிள் இல்லாத காரணத்தால் சர்ஃபேஸ் லயனில் இடிக்கும் மரக் கிளைகள், தென்னை ஓலைகளை வெட்டிவிட்டுச் சரி செய்வதற் காக லயனை ஆஃப் செய்துவிட்டு இரண்டு மூன்று மாதங் களுக்கு ஒரு முறை இப்படி மின்சார வாரிய ஆட்கள் வந்து போவார்கள். மரஞ்செடி கொடிகள் தாராளமாகத் துவம்சம் ஆகும்.

இப்படி ஒவ்வொரு முறையும் காலனியின் பசுமையைச் சவரம் பண்ணும் இந்தப் பணி சவிஸ்தாரமாக நடைபெறும். காலனி வாசிகளுக்குச் சில மணிநேரம் மின்சாரம் இல்லாமல் போவதோடு மரம் செடி கொடிகளுக்கும் கடுமையான சேதம் ஏற்படும். காலனியின் பசுமை கணிசமாகப் பறிபோகும்.

கண்ணன் வீட்டு வாசலில் இருந்த ஒரு மின்சாரக் கம்பத்திலிருந்துதான் பாகவதர் வீட்டுக்கும் சரி, அம்மிணி அம்மாள வீட்டுக்கும் சரி இருவருக்குமே ஓவர்ஹெட் வயர் மூலம் கனெக்ஷன் போயிற்று. அதே கம்பத்திலிருந்து கண்ணன் வீட்டுக்கும் நடுவாக ஓவர்ஹெட் வயர் இழுக்கப் பட்டிருந்தது.

இப்படித் திரிசூலத்தின் மூன்று கோணங்களைப் போலக் கண்ணன் வீட்டு வாயிலிலிருந்து ஓவர்ஹெட் வயர்கள் போனதால் அவ்வப்போது கண்ணனின் முகப்புத்தோட்டத்து மாமரம், வேப்பமரம், பப்பாளி, தென்னை, கிறிஸ்துமஸ் மரம் எல்லாம் வெட்டுதலுக்கு ஆளாயின. அவன் வீட்டுக்கான கனெக்ஷன் வாயிலுக்கு நேராக ஓவர்ஹெட் லயனில் வந்ததால் அந்த ருட்டில் மரங்களே இல்லை. ஆனால் இருபக்கத்து வீடுகளுக்குமாக அவன் வீட்டை நடுவாக வகிர்ந்து கொண்டு போன ஓவர்ஹெட் கனெக்ஷன்களால்—அவற்றுக்கு இடையூறு என்ற பெயரில் வந்து அவன் தண்ணீர் ஊற்றி வளர்த்த அருமை மரங்களை அடிக்கடி சிதைத்து வெட்டினார்கள் மின்வாரிய ஆட்கள்.

இது வழக்கமாக நடக்கிற சேதம்தான் என்றாலும் அன்று ஞாயிற்றுக்கிழமையாதலால் கண்ணன் கண்முன்பே அவனது பசுமை சிதைக்கப்பட்டது. ஓலையை வெட்டுகிறேன் என்ற சாக்கில் மின்சாரவாரியத்தின் ஆள் கைத்தவறுதலாக ஒரு குலை இளநீரையும் கீழே வெட்டித் தள்ளி விட்டான் அன்று.

இதைக் கண்டு கண்ணன் தெருவுக்கு வந்து கூப்பாடு போட்டான்: "விவஸ்தை இருந்தா அடுத்தவன் வீட்டு வழியாக கனெக்ஷன் வாங்கிக்கிட்டு உயிரை எடுக்கப்பிடாது. அவங்கவங்க வீட்டுக் கனெக்ஷன் அவங்கவங்க வீட்டு வழியா இருக்கணும். மானரோஷம் இல்லாத ஜன்மங்க பக்கத்து வீடுகளிலே குடியிருந்தா என்ன பண்ணமுடியும்?"

இந்தக் கூப்பாடு காதில் விழுந்து முதலில் பாகவதர்தான் வெளியே வந்தார். அப்புறம் சிறிது நேரத்தில் அம்மிணி அம்மாள் வெளியே வந்தாள். கண்ணன் இருவர் காதிலும் விழுகிறாற்போல மறுபடியும் இரைந்தான். "உங்களாலே என் வீட்டு மாமரமும் தென்னை மரமும் பாழாகுது. முதல்லே பணம் கட்டி அண்டர் கிரவுண்ட் கேபிள் கனெக்ஷன் வாங்கப் பாருங்க. இல்லாட்டிக் கம்பத்திலிருந்து நேரே

அப்படியே ஸ்டிரெயிட்டா உங்க மொட்டை மாடிக்கு ஓவர் ஹெட் கனெக்ஷன் வர்ற மாதிரி ஒரு புதுப் போஸ்ட் நடச் சொல்லி ஏற்பாடு பண்ணிக்குங்க...உங்களுக்காக நான் தொடர்ந்து நஷ்டப்பட முடியாது.''

''மிஸ்டர் கண்ணன்! கொஞ்சம் அடக்கமாகவே பேசுங்கோ. இதுக்கு ஏன் இப்பிடி ஊரெல்லாம் கூடற மாதிரிக் கூப்பாடு போடறீங்க? இந்த வீடுகளுக்கு இப்படி உங்க வீட்டுக்குள்ளே கூடி ஊடுருவி வர்ற மாதிரிக் கனெக்‌ஷன் தரச் சொல்லி நான் கேட்டு வாங்கிக்கலே...வீடுகள் உங்களுக்கும் எனக்கும் அலாட் ஆகிறதுக்கு முன்னாடி எல்லா வீடுகளுமே ஹவுஸிங் வாரியததுக்குச் சொந்தமா இருந்தப்ப அவங்களே எலெக்ட்ரிசிடி போர்டுக்கு எழுதி இப்பிடி எல்லாம் தாறுமாருக் கனெக்ஷன வாங்கித் தொலைச்சிருக்காங்க.

''அதுக்காக என் தோட்டம், மரங்கள் செடிகொடிகள் லாம் இபபிடி நாசமாகணுமா?''

''யார் சொன்னா அப்பிடி? அவங்க இப்பிடி அடிக்கடி வந்து என் வீட்டு ஓவர்ஹெட் லைனுக்காக உங்க வீடடு மரஙகளை வெட்டறது எனக்கும்தான பிடிக்கலை.''

''பிடிக்கலைன்னு சும்மா வாயால் சொல்லிட்டா மட்டும் ஆச்சா? அதைத் தவிர்க்க உருப்படியா நீங்களோ அந்தப் பக்கத்து வீட்டு அம்மாளோ எதுவுமே பண்ணினதாத் தெரியலையே?''

''எங்க எல்லோருக்கும் நீங்கதான் பிரதிநிதி! அதாவது காலனி வெல்ஃபேர் அசோஸியேஷனின காரியதரிசி. காலனி முழுவதும் உடனே அண்டர்கிரவுண்ட் கேபிள் சிஸ்டத்தை இண்ட்ரொடியூஸ் பண்ணச் சொல்லி அசோஸியேஷன் சார்பில் எம். இ. எஸ். டிவிஷனல் இன்ஜீனியருக்கு நீஙகளே ரெப்ரஸெண்ட் பண்ணுங்களேன! அதை விட்டு வடடு...''

இதைக் கேட்டுக் கண்ணன் தன்னை அவர் வகையாக மடக்கி விட்டது போல உணர்ந்தான். உடனே காலனி அஸோஸியேஷன் செயலாளர் பதவியையே ராஜிநாமா செய்து விடலாமா என்று கூட ஆத்திரம் வந்தது அப்போது அவனுக்கு.

"பாகவதர் பறஞ்சது சரி. நீங்கதான் இதுக்கு வழி பண்ணணும்"—என்று அம்மிணி அம்மாளும் சேர்ந்து கொள்ளவே கண்ணனுக்குக் கடுப்பு மேலும் அதிகமாயிற்று.

கொஞ்சம் யோசித்துச் சுதாரித்துக் கொண்டு, அஸோஸியேஷன் மூலமாச் செய்யறதைவிட நீங்க ரெண்டு பேரும் தனித்தனியே பணத்தைக் கட்டி உங்க ரெண்டு வீட்டுக்கும் கேபிள் கனெக்ஷன் கேட்டுக்கிறது ரொம்ப சுலபம்"—என்றான்.

"நான் காலனியில் இருக்கிற எல்லாருடைய பிரசினைகளும் தீர யோசனை சொல்றேன். நீங்க என்னடான்னா எங்க ரெண்டு பேர் பிரசினையும், உங்க பிரசினையும் தீர மட்டும் யோசனை சொல்றீங்க..."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது! நீங்க ரெண்டு பேரும் இதற்கு வழி பண்ணிக்கலேன்னா நான் சட்டப்படி ஏதாவது கடுமையாகச் செய்ய வேண்டியிருக்கும்."

இதைக் கேட்டுப் பாகவதருக்கும் பொறுமை மீறி ஆத்திரம் வந்துவிட்டது. அவரும் கரூராக ஒரு பதிலை உடனே தெரிவித்தார். "நான் உம்மைப் பொது மனிதர்னு மதிச்சு இதுவரை மரியாதை கொடுத்தேன். நீரோ சுயநலமாக மட்டும பேசுகிறீர். உம்மால் முடிஞ்சதை நீர் செய்துக்கலாம். கவலையில்லை."

மேற்கொண்டு அவன் என்ன பதில் சொல்லப் போகிறான் என்று கேட்கக் காத்திராமல் பாகவதரும் அம்மிணி அம்மாளும் தத்தம் வீட்டுக்குள்ளே திரும்பிப் போய்விட்டார்கள்.

இப்போது கண்ணனுக்கு அவமானப்பட்டு விட்டது போன்ற உணர்வு துடிதுடித்தது. ஏதாவது தீவிரமாகச் செய்தாக வேண்டுமென்று எண்ணினன். அவன் உள்ளே வந்ததும், "ஒண்ணுமில்லாத விஷயத்தை எல்லாம் ஏன் பெரிது படுத்தி அக்கம்பக்கத்தாரை வம்புக்கு இழுக்கிறீர்கள்? எலெக்ட்ரிசிடிக்காரன் வந்து லயன்லே இடிக்கிறதுன்னு மரம் செடி கொடிகளை வெட்டிஞ அதுக்கு இவங்க என்ன பண்ணுவாங்க? இவங்களை ஏன் திட்டறீங்க?" என்ருள் சுகன்யா.

"உன் மரமண்டைக்கு இதெல்லாம் புரியாது! அவங்க ரெண்டு பேருடைய வீட்டுக்கும் போற ஓவர்ஹெட் லைனுலே தான் நம்ம தோட்டம் பாழாகுது."

"அதை அமைதியா அவங்ககிட்டே எடுத்துச் சொன்னக் கேட்டுப்பாங்களே! இத்தனை சத்தம் போட்டு எம். இ .எஸ். காரன் முன்னடி அங்கேயே தெருவிலே வச்சா அவங்களை வம்புக்கு இழுக்கணும்?"

சுகன்யாவின் வார்த்தைகளை அவன் பொருட்படுத்தவே இல்லை. 'உம்மால் முடிஞ்சதை நீர் செஞ்சுக்கலாம்'—என்று பாகவதர் கடைசியாகச் சவால் விட்டு விட்டு உள்ளே போனதுதான் நினைவுக்கு வந்தது. அந்த வேளை பார்த்துச் சகுனியைப் போல் அந்த நண்பனும் வந்து சேர்ந்தான். கண்ணனின் போதாத வேளையோ அல்லது நண்பனின் அதிர்ஷ்டமோ அவனிடம் போய் மின்சார லைன் தகராறு முதல் பாகவதர் சிபாரிசின் பேரில் அம்மிணி அம்மா காலனியில் கோயில் கட்ட நன்கொடை கொடுத்தது வரை எல்லாம் சொல்லித் தொலைத்தான். நண்பன் பதிலுக்குக் கண்ணனைக் கேட்டான்:

"உண்மை விளம்பியிலே பச்சை பச்சையாப் புட்டுப் புட்டு வச்சப்புறமும் அவங்க இன்னும் மிரளலையா? ஊர் சிரிச்சுதேப்பா?"

"உஹூம்! அதுலே வந்தப்புறம் தான் தனக்குப் பப்ளிஸிடி அதிகமாயிருக்குன்னு' பாகவதர் பெருமையாச் சொல்றரு. அந்தம்மா கவலையே படலே..."

"அப்பிடியா? இன்னும் 'டோஸேஜ்' அதிகமாக்கணும் போல இருக்கு. வரட்டும் 'மஸாஜ் பார்லர் விவகாரத்தை ஒரு பிடி பிடிக்கிறேன். அவனவன் இப்பிடி இலேசா ஒரு ஃபீலர் வீட்டாலே ஐயாயிரம், பத்தாயிரம் ரொக்கத்தை எடுத்துக்கிட்டு ஓடியாந்து, 'இதை வச்சுக்க! இனிமே என்னைப் பத்தி எழுதாதே... வுட்டுடு'ங்கருன். இந்த மலையாளத்துப் பொம்பிளைக்கும் இஞ்சிகுடிக் கஞ்சித் தொட்டிக்கும் இத்தினி திமிரா? பார்த்துடறேன் ஒரு கை."

இதில் நண்பனின் சுயரூபம் ஓரளவு புரிந்தாலும் கண்ணனால் அவனை அறவே கத்திரித்துக் கொள்ள முடிய வில்லை. பாகவதர், அம்மிணி அம்மா விரோதத்தில் அவர் களை எதிர்க்க உதவியாயிருக்கும் புலவர் மகிழ்மாறன், உண்மைவிளம்பி நண்பன், எல்லாரையுமே அரவணைத்துக் கொண்டுதான் போக வேண்டியிருந்தது. குறுகிய நோக்கங் களிலும் மொழி இன வெறுப்புக்களிலுமே காலந்தள்ளிய மகிழ்மாறனும் சரி, பிளாக் மெயிலை நாசூக்காகச் செய்து பிழைத்து வந்த உண்மைவிளம்பி நண்பனும் சரி, முழுமை யான மனிதர்களாகக் கண்ணுக்குத் தோன்றவில்லை என்றாலும் கண்ணன் அப்போது அவர்களைத் தட்டிக் கொடுக்க வேண்டியிருந்தது.

மின்சார லைன் தகராறு நடந்த தினத்தன்று மாலையே வல்வழக்குகள் போடுவதில் செஞ்சுரி போட்ட ஒரு வம்புக்கார வக்கீலிடம் கண்ணனை அழைத்துப் போய்ட்டான் நண்பன். அந்த வக்கீல்தான் உண்மை விளம்பியின் சட்ட ஆலோச கராம்.

கண்ணன் அவரிடம் மின்சாரத் தகராறு பற்றி எல்லா வற்றையும் விவரித்ததும் அவரே பொய்யாக ஒரு கேஸை ஜோடித்துச் சொன்னார்.

"இரண்டு பக்கத்து வீட்டு 'லைன்'கள் அவ்வப்போது அறுந்து விழ நேர்ந்ததனாலேயும், செடிகள்லே உரசறதுனாலேயும் தோட்டத்திலே நடமாடற உங்க குழந்தைகளோட உயிருக்கு ஆபத்து ஏற்படலாம்னு கேஸைக் கொண்டு போகலாம். முதல்லே ஒரு இருநூறு ரூவா கொடுங்க...இந்த வக்காலத்துலே ஒரு கையெழுத்தும் போட்டுடுங்க... பாகவதர், அம்மிணி அம்மா, எம்.ஜி.எஸ் மூணு பேருக்கும் நோட்டீஸ் குடுத்திடுவோம்."

கண்ணன் தயங்கினான். "இப்பக் கையிலே அவ்வளவு பெரியதொகை இல்லே! நூறு ரூபாய் வரை இருக்கும்..."

"சரி அதைக் குடுத்துவிட்டுப் போங்க! பாக்கியை நாளைக் காலையிலே கொண்டாந்து குடுத்துடுங்க."

கண்ணன் கையிலிருந்த பணத்தை எல்லாம் திரட்டி நூறு ரூபாயை வக்கீலிடம் கொடுத்தான். உண்மைவிளம்பி நண்பன் வக்கீலிடம் தனக்குத் தனியே கொஞ்சம் வேலையிருப்பதாகச் சொல்லவே அவனை அங்கேயே விட்டுவிட்டு வீடு திரும்பினான் கண்ணன்.

அங்கே வீட்டில் ஏற்கெனவே புலவர் மகிழ்மாறன் வந்து கண்ணனுக்காகக் காத்திருந்தார். கூட இருவர் சேர்ந்து வந்து காத்திருந்தனர். கண்ணனைப் பார்த்ததும் புலவர் தொடங்கிக் கூறலானார். "இவங்க தமிழர் தன்மானப் படையைச் சேர்ந்த இளைஞர்கள். நம்ம குடியிருப்பு அளவில் பிறமொழி விளம்பரப் பலகைகளை நீக்கித் தமிழில் எழுதணும்னு ஒரு இயக்கம் தொடங்கியிருக்கோம். உங்க ஒத்துழைப்பு எங்களுக்கு வேண்டும்."

"தாராளமா உண்டு! நீங்க தொடங்கற எந்த மூவ்மெண்டிற்கும் என் ஒத்துழைப்பு உண்டு. இந்தக் காலனியிலே ரெண்டு தமிழ் எதிரிங்க இருக்கிறது உங்களுக்கே நல்லாத் தெரியும், ரெண்டு பேருமே எங்க பக்கத்து வீட்டுக்காரங்கதான்."

"வலையிடைப் பட்ட மானென அலையிடைப்பட்ட துரும் பென—மலையிடைப்பட்ட மீனென நீங்கள் நடுவே சிக்கித் தவிப்பதும் எனக்குத் தெரியும்"—என்று தன் பாணியில் வர்ணித்தபடியே நன் கொடை தருவோர் பட்டியல் என்ற ஒரு வசூல் நோட்டுப் புத்தகத்தை எடுத்துக் கண்ணனிடம் நீட்டினார் புலவர்.

கண்ணன் உள்ளூர எரிச்சலும் வெளியே ஒப்புக்கு முகமலர்ச்சியுமாக வக்கீலிடம் அழுதது போகக் கைச் செலவுக்கு மிச்சமிருக்கட்டும் எனப் பர்ஸில் ஒதுக்கி வைத் திருந்த ஒரு பத்து ரூபாயை எடுத்துப் புலவரிடம் கொடுத்து விட்டு நோட்டில் தன் பெயரை எழுதிக் கையெழுத்துப் போட்டுத் திருப்பிக் கொடுத்தான். புலவர் எழுந்து போனால் போதும் என்றாகிவிட்டது அவனுக்கு.

"உங்க ஒப்புதல் கிடைக்கும்கிற நம்பிக்கையிலே இதில் ஒரு சிறு திருத்தம் செய்துக்க அநுமதியளிக்கணும் நீங்க! முதல் முதல்லே கையெழுத்துப் போட்டு நன்கொடையைத் தொடங்கி வைத்திருக்கிறீர்கள். நீங்களே பத்து வெண் பொற் காசுகள்தான் தந்திருக்கிறீர்கள் என்று பார்த்ததும் இதற்குக் கீழே கையொப்பமிடுகிறவர்கள் ஐந்து, இரண்டு என்று தொகையைப் படிப்படியாய்க் குறைத்து விடுவார்கள். ஆகவே நீங்க எழுதியிருக்கிற 10க்குப் பக்கத்திலே ஒரு ஒண்ணு மட்டும் போட்டு நூத்தி ஒண்ணுன்னு திருத்திக் கறேன் அதனாலே உங்களுக்குச் செலவு ஒண்ணுமில்லே. எனக்கு வரவு உண்டு."

"ஒ எஸ்! தாராளமாப் பண்ணிக்குங்க புலவரே! நமக் குள்ளே இதெல்லாம் சொல்லிட்டுத்தானா செய்யணும்? என்னைப் பொறுத்தவரை இந்த மாதிரி உரிமையை நீங்க தாராளமா எடுத்துக்கலாம்."

புலவர் தொகையைத் திருத்திக்கொண்டு விடைபெற்றார் உண்மை விளம்பி நண்பன், புலவர் மகிழ்மாறன் இவர் களால் தனக்கு ஒரு பயனும் இல்லாவிட்டாலும் மற்றவர்களை

எதிர்க்க இவர்கள் தன்னோடு துணை நிற்கிறார்கள் என்ற ஒரே காரணத்தால் கண்ணன் இவர்களைத் தாங்கிச் சகித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. எதிரிக்கு எதிரி தனக்கு நண்பன் என்ற சர்வதேச இராஜ தந்திரக் கொள்கையை அண்டை வீட்டார் விஷயத்திலும் கண்ணன் கடைப்பிடித்தான். எதிரியின் எதிரிகளை நண்பர்களாக்கிக்கொள்ள ஆகிற செலவைவிடச் சிக்கனமாக எதிரிகளையே நண்பர்களாக்கிக் கொள்கிற மிகச் சுலபமான முயற்சியைக் கண்ணன் ஏனோ மறந்து போயிருந்தான். குருட்டுத்தனமான துவேஷம் அவன் கண்களை நன்றாக மூடி மறைத்திருந்தது.

# 9

காலனி நலன் நாடுவோர் சங்கத்தின் உடனடியான அவசரக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு பாகவதர், அம்மிணி அம்மாள் முதலிய இருபத்தைந்து அங்கத்தினர்கள் கையொப்ப மிட்டுத் தலைவருக்கு அனுப்பிய பதிவுத் தபால் கடிதத்தில் 'உடன் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்யவும்' என்ற தலைவரின் குறிப்பும் சேர்க்கப்பட்டுக் கண்ணனுக்கு வந்தது. சில அவசரப் பிரசினைகளை விவாதிக்க உடனே கூட்டத்தைக் கூட்டும்படி இருபதுக்கு மேற்பட்ட உறுப்பினர்கள் கையொப்பமிட்டுக் கோரினால் தலைவர் அனுமதியுடன் செயலாளர் பதினைந்து நாள் முன்னறிவிப்புடனே கூட்டத்தைக் கூட்டியாக வேண்டும் என்று சங்க விதிமுறை கூறியது. இப்போது பாகவதர் அந்தத் துருப்புச் சீட்டை வெட்டியிருந்தார்.

கண்ணன் பாடு தர்மசங்கடமாகப் போயிற்று. 'மின்சார ஓவர் ஹெட் லயன்' பற்றி அவன் பக்கத்து வீட்டாரோடு கூப்பாடு போட்டு வக்கீல் நோட்டீஸ் அனுப்பியது, புலவர் மகிழ்மாறன் காலனிவாசிகள் வீட்டுக் காம்பவுண்டுச் சுவர்

எல்லாம் தமிழாக்குவதாகத் தாரில் பெரிய பெரிய எழுத்துக்களை எழுதியது ஆகியவை பற்றி விவாதிக்கவே இந்த அவசரக் கூட்டம் கோரப்படுகிறது என்று கண்ணனுக்குப் புரிந்துவிட்டது. காலனி நலன் நாடுவோர் சங்கச் செயலாளர் பதவியில் நீடிப்பதா, ராஜிநாமாச் செய்து விட்டு ஒதுங்கிக் கொள்வதா என்ற நிலைமைக்குத் தள்ளப்பட்டிருந்தான் அவன். கரடு முரடான வேகத்தோடு சாதக பாதகங்களைப் பற்றிய முன் யோசனையே இன்றிப் புலவர் பண்ணியிருந்த சில வேலைகளைப் பார்க்கும்போது கண்ணனுக்கே அவர்மேல் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

முதல் குறுக்குத் தெருவில் இருந்த பல் டாக்டர் 'கிங்சிங்கு'வின் 'டென்டிஸ்ட்' 'டெண்டல் கிளினிக்' என்ற ஆங்கில போர்டுகளில் தார் பூசி அழிக்கப்பட்டு, 'பல் செப்பனிடும் பட்டறை' 'பல் ஆய் மருத்துவர்'—என அதன் பக்கத்திலேயே தாரில் தமிழாக்கம் போடப்பட்டிருந்தது.

தேவநாகரி எழுத்துக்களில் 'ஸ்ரீராம மந்த்ரம்' எனப் பாகவதர் வீட்டு முகப்பில் சலவைக் கல்லில் பதிக்கப் பெற்றிருந்த வீட்டுப் பெயர் தார் பூசி அழிக்கப்பட்டுச் சுவரில் 'இந்தி ஒழிக' என்று அதனருகிலேயே பெரியதாக எழுதப் பட்டிருந்தது.

'பிவேர் ஆஃப் டாக்ஸ்'—என்று அம்மிணி அம்மாள் வீட்டு முகப்பில் தொங்கிய ஆங்கில போர்டு அழிக்கப்பட்டுக் கொஞ்சம் குறும்பாகத் தமிழில் மாற்றி '(இந்த வீட்டில் உள்ள) பெண் நாய்கள் ஜாக்கிரதை'—என்று பூதாகரமான எழுத்துக்களால் எழுதப்பட்டிருந்தது. பூஜைக்காக அங்கே போனபோது பாகவதர் படித்துச்சொல்லி அம்மிணி அம்மாள் குடும்பத்தாருக்கு அது தெரிய வந்த விவரத்தைக் கண்ணனே பார்த்துத் தெரிந்துகொண்டிருந்தான். ஆங்கிலத்திலும் மலையாளத்திலும் இருந்த அம்மிணி அம்மாளின் வீட்டுப் பெயரான 'பொன் குன்னம்'—என்பது முற்றாகத் தார் பூசி அழிக்கப்பட்டிருந்தது.

தெருக் கோடியில் 'வெட்கிரைண்டிங் மிஷன்—ரோலர் ஃப்ளவர் மில்'—என்ற போர்டுகள் அழிக்கப்பட்டு—'ஈர அரவைப் பொறி—உருளை மாவுப் பொறி'—எனத் தமிழில் தனக்குத் தோன்றியது போல் மொழி பெயர்த்து எழுதியிருந்தான் புலவரின் ஆள் அதைப் படித்துவிட்டு யாரோ விவரம் புரியாமல் அதன் உரிமையாளரிடம் வந்து, "நாட்டாரே! மாவு மில்லை எப்பப் பொரி கடலைக் கடையா மாத்தினீங்க?" என்று கேட்டதாகக் கண்ணன் காதில்கூட விழுந்திருந்தது. எல்லாவற்றையும் செய்த புலவர் தமக்கு நன்கொடை கொடுத்தவர்கள் வீட்டுச் சுவர்களில் மட்டும் கை வைக்கவே இல்லை. 'ரெட் ரோஸ்' என்று கண்ணன் வீட்டு முகப்பில் ஆங்கிலத்தில் பதித்திருந்த பெயர்ப் பலகை தாரில் நீராடாமல் அப்படியே விடப் பட்டிருந்தது எல்லார் கண்களையும் உறுத்தியது.

இதை எல்லாம் விடப் பயங்கரமான தமிழாக்கம் காலனி முகப்பில் இருந்த 'விமன்ஸ் கன்ஸ்யூமர் கோவாப்ரேடிவ் சொஸைடி' என்ற போர்டை அழித்துப் பக்கத்திலேயே 'பெண்கள் நுகர்வோர் கூட்டுறவுக் கழகம்'—என விலாப் புடைக்க நகைக்கும்படி எழுதியிருந்ததுதான். அதைப் படித்துச் சிரிக்காதவர்களே கிடையாது.

இப்படி எல்லாம் புலவர் தாறுமாறாகக் கேலிக் கூத்துப் பண்ணியிருந்தும் தனது கூட்டணியில் இருக்கிறார் என்ற ஒரே காரணத்துக்காகக் கண்ணன் கூட்ட நோட்டீஸை எல்லாருக்கும் அனுப்புமுன் புலவரைக் கூப்பிட்டனுப்பினான். புலவர் தன்மானப் படையுடன் வந்தார். கண்ணன் நிலைமையை விளக்கி, "நான் அஸோஸியேஷன் செயலாளர் பதவியை விட்டு விலகிக்கலாம்னு பார்க்கிறேன்"-என்றான்.

"கூடாதுங்க! நீங்களா விடவே கூடாது. பயந்தாங் கொள்ளிம்பாங்க. பேரவையைக் கூட்டுங்க. பயப்படாதீங்க...அவங்க என்னதான் செய்யிறாங்கன்னு பார்த்துடுவோம். நானும் பேரவைக்கு நம்ம செயல் வீரர்களோட

வரேன். எதிர்க்கிறவங்களை ஒரு கை பார்த்திடலாம்''— என்ருர் மகிழ்மாறன்.

அப்படிச் செய்யக் கண்ணனுக்கு விருப்பமில்லாவிட்டாலும் செயற்குழுவைக் கூட்டுவதற்கு முன்பே தான் ராஜிநாமாச் செய்வது கோழைத்தனமாகப் புரிந்துகொள்ளப் படும் என்பதால் தயங்கினுன். பொறுமையாக இருக்க முடிவு செய்து கொண்டான்.

அவசரச் செயற்குழு கூடுவதற்கு இன்னும் ஒரு வாரம் தான் இருந்தது. அவன் மனைவி சுகன்யா அவனிடம் தற்செயலாக ஒரு நாள் விசாரித்தாள்: இப்போ உங்களுக்கு என்ன ஆச்சு? இருக்கிற பணமுடையிலே என்னென்னமோ புதுப் புதுத் தெண்டச் செலவெல்லாம் இழுத்து விட்டுக்கறீங் களே? வக்கீலுக்குப் பணம் அழுது ஒண்ணுமில்லாததுக்கு நோட்டீஸ் அனுப்பி அக்கம் பக்கத்தாரை மிரட்டியிருக்கீங்க. காம்பவுண்டுச் சுவர் எடுக்கிறேன்னு ஆயிரக் கணக்கிலே வட்டிக்குக் கடன் வாங்கியிருக்கீங்க...யாரோ போர்டெல்லாம் தமிழ்லேதான் எழுதணும்னு தார் பூசி அழிக்கிறவங்களுக்கு முதல் ஆளா ரூபாய் ஆயிரத்துக்கு மேலே டொனேஷன் குடுத்திருக்கீங்களாம். எதுக்கு இப்பிடிப் பணத்தைப் பாழாக்கறீங்க?''

''நான் புலவர் மகிழ்மாறனுக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேலே குடுத்தேன்னு உனக்கு யார் சொன்னது?''

''அடுத்த தெருவிலே கலா படிக்கிற ஸ்கூல் ஹெட் மிஸ்ட்ரஸ் எதுக்கோ ரெண்டு ரூபா டொனேஷன் கேட்டுக் கலாவை வீட்டுக்கு அனுப்பிச்சா. நான் அவ்வளவு இல் லேன்னு எங்கிட்ட இருந்ததைத் திரட்டி ஒரு ரூபா குடுத் தனுப்பிச்சேன். அவ உடனே, கலா கிட்ட, 'ஏண்டீ! உங்க அப்பா தமிழர் படை தார் பூசறத்துக்கு ஆயிரம் ரூபாய் டொனேஷன் தர்ருர். இதுக்கு மட்டும் ஒரு ரூபாதானு?'ன்னு கேட்டாளாம்.''

—புலவர் மகிழ்மாறன் தன்னிடம் 10ஐ 101ஆகத் திருத்திக் கொள்வதாகச் சொல்லிவிட்டு 1001 ஆகவோ, 1011 ஆகவோ திருத்திக் கொண்டிருக்க வேண்டும் என்று கண்ணனால் இதைச் சுலபமாகவே அநுமானித்துக் கொள்ள முடிந்தது. அதே நோட்டுப் புத்தகத்தில் புலவர் அந்தத் தலைமை ஆசிரியையிடமும் வசூலுக்குப் போயிருக்க வேண்டும் என்று தோன்றியது. இந்த நாணயக் குறைவும் திரிசமனும் அவனுக்குப் பிடிக்கவில்லை. அந்த நோட்டைப் பார்த்தவர்கள் எல்லாரும் தான் தமிழர் படையின் தார் பூசும் முயற்சிக்கு ஆயிரத்தொரு ரூபாய் கொடுத்ததாக நம்பியிருக்கக் கூடுமென்று எண்ணியபோது கதி கலங்கியது. மாதம் தொள்ளாயிரத்து அறுபது ரூபாய்க்கும் குறைவாகச் சம்பளம் வாங்கும் தன்னைப் போன்ற ஒரு என். ஜி. ஓ. ஆயிரத்தொரு ரூபாய் நன்கொடை கொடுப்பது என்பது மற்றவர்களுக்கு மலைக்க வைக்கும் செய்திதானே?

தான் உண்மையில் கொடுத்தது வெறும் பத்து ரூபாய் தான் என்றும்—மற்றவர்களை வலை போட்டு இழுத்து நன் கொடை வாங்கப் புலவர் தந்திரமாக அதை ஆயிரத்து ஒன்றாகவோ ஆயிரத்துப் பதினொன்றாகவோ திருத்திக் கொண்டிருக்கக் கூடும் என்றும் தன் மனைவிக்கு விளக்கி அவளை நம்ப வைப்பதற்குள் கண்ணனுக்குப் போதும் போதும் என்றாகிவிட்டது.

பேரவைக் கூட்டத்துக்கு அங்கத்தினர்கள் அனைவருக்கும் சுற்றறிக்கை அனுப்பிவிட்டு அஜெண்டா தயாரிப்பதற்காகத் தலைவரைக் கலந்தாலோசிப்பதற்காக அவர் வீட்டுக்குப் போனான் கண்ணன். எப்போதும் இப்படிக் கூட்டத்திற்கு முன் தலைவர் வீட்டுக்குப் போவது வழக்கம்தான். காலனி நலன் நாடுவோர் சங்கத் தலைவர் அவனிடம் வழக்கம் போல் சுமுகமாகப் பேசிப் பழகவில்லை. கொஞ்சம் கோபத்தோடு இருப்பது போல் தோன்றியது. கத்திரித்தாற் போல வார்த்தைகள் வந்தன. தனக்கு முன்பே அவரை அதிருப்தி

யாளர்கள் சந்தித்துத் தன்னைப்பற்றி ஒரு வண்டி புகார்களைச் சொல்லியிருக்க வேண்டும் என்று தோன்றியது கண்ணனுக்கு.

''பாகவதர், அம்மிணி அம்மா போன்றவர்களால் காலனி வளர்ச்சிக்குப் பலவகையிலும் உதவி செய்ய முடியறப்போ அவங்களை நீங்க அநாவசியமா விரோதிச்சுக்கிறீங்க! அந்தப் புலவருக்கு வெளிப்படையா ஆயிரக்கணக்கில் டொனேஷன் குடுத்து எல்லார் வீட்டுச் சுவரிலேயும் தாரைப் பூசி அசிங்கம் பண்ண வச்சிருக்கீங்க! ஓவர் ஹெட் டயன் பிரச்னையிலே காலனி அஸோஸியேஷனை ரெப்ரெஸண்ட் பண்ணியிருக்கலாம். அதை விட்டுவிட்டுத் தனிப்பட்ட முறையிலே பாகவதருக்கும் அம்மிணி அம்மாளுக்கும் நீங்க நோட்டீஸ் அனுப்பியிருக்க வேண்டியதில்லை. ஆட்களை அடுத்தடுத்து விரோதிச்சுக்கறது ரொம்பச் சுலபம். ஆனா நட்பையும் நல்லெண்ணத்தையும் திரும்பச் சம்பாதிக்கிறது அத்தனை சுலபமில்லே''—என்றார் சங்கத் தலைவர்.

கண்ணன் அதற்குமேல் அவரிடம் மன்றாடிக்கொண்டு நிற்கவில்லை. உடனே வீட்டுக்குத் திரும்பி வந்துவிட்டான். மகிழ்மாறனின் தமிழர் படைக்கு ஒரு பத்து ரூபாய் நன்கொடை கொடுத்துப் பட்டியலில் முதல் பேராகத் தன் பெயரை எழுதித் தொலைத்தது இவ்வளவு பெரிய வம்பில் வந்து முடியும் என்று அவன் கனவிலும் எதிர்பார்த்திருக்கவில்லை.

அந்த மனிதன் பத்தை நூற்று ஒன்றாகத் திருத்திக் கொள்வதாகச் சொல்லிவிட்டு ஆயிரத்து ஒன்றாகத் திருத்திக் கொள்ளப் போகத் தானே பணம் கொடுத்துக் காலனி வாசிகளுக்கு எதிராகப் புலவர் வகையறாவைத் தூண்டிவிட்ட மாதிரி ஆகிவிட்டது.

ஆயிரம் ஆண்டுகள் சிரமப்பட்டுச் சேகரித்த நல்லெண்ணத்தையும், நன்னம்பிக்கைகளையும் அரை நொடியில் தவிடு பொடியாக்கிவிடுகிற 'மகத்தான திறமை' சிலருக்கு

இருந்து தொலைக்கும். புலவர் மகிழ்மாறனுக்கு அப்படி ஒரு திறமை உண்டு. இரண்டே நாட்களில் கண்ணனை அந்தக் காலனிவாசிகள் அத்தனை பேருக்கும் விரோதியாக்கிவிட்டார். அதற்காகக் கண்ணனுக்குப் பத்து ரூபாய் வீண் செலவும் ஆகி ஆயிரம் ரூபாய்ப் பழியும் வந்து சுமந்திருந்தது. தாம் ஒத்துழைத்து ஆதரிப்பதன் மூலமே அப்படி ஆதரிக்கப் படுகிறவரை ஒன்றுமில்லாமல் பண்ணிவிடுகிற சாமர்த்தியம் புலவருக்கு இருந்தது. கண்ணன் விஷயத்திலும் அதையே செய்து முடித்திருந்தார் அவர்.

பேரவையில் ஏதோ விரும்பத்தகாத திருப்பங்கள் ஏற்படப் போவதுபோல் கண்ணனுக்கே தோன்றியது. அவன் அஜெண்டா தயாரிக்கப் போனபோது தலைவர் பிடி கொடுக்காமல் நழுவுகிறுர். ஏதோ செலவுக்காகச் செக்கில் கையெழுத்துக்குப் போனபோது பொருளாளர், "இப்போ ஒண்ணும் அவசரமில்லே! கொஞ்சம் பொறுத்துச் செய்ய லாம்''—என்று செக்கில் கையெழுத்துப் போடாமல் தட்டிக் கழித்து விட்டார். பொருளாளர் செய்தது எதற்கோ முன்னடையாளம் காட்டியது.

சூழ்நிலை சரியாயில்லை! மர்மமாகத் தனக்கு எதிராய் எங்கோ ஏதோ சதி நடப்பது போல் கண்ணனுக்குத் தோன்றியது.

# 10

காலனி நலன் நாடுவோர் சங்கத்தின் அவசரப் பேரவை கூடியது. புலவர் மகிழ்மாறன் தன் அடியாட் களோடு கூட்டத்துக்கு வந்திருந்ததுடன் இரண்டு நிமிஷத் துக்கு ஒருமுறை கண்ணனின் அருகே வந்து காதருகே ஏதேதோ சொல்லிவிட்டுப்போனுர். கண்ணனேடு மிகநெருக்க மாகக் காட்டிக் கொண்டார்.

அவர் இப்படிச் சொல்லிவிட்டுப் போனதன் மூலம் கண்ணனோடு தான் மிகவும் நெருக்கம் என்று பேரவையின் கண்முன் வெளிப்படையாகக் காண்பித்துக் கொள்ளவே பேரவைக்குக் கண்ணன் மேலிருந்த வெறுப்பு அதிகமாயிற்று. தாம் யாரை நெருங்கி நிற்கிறாரோ அவர்களை அறவே திவாலாக்கி விடுவது புலவரின் வழக்கம். அன்றும் அதைத் தான் நடத்திக் கொண்டிருந்தார் அவர். வெற்றிகரமாகவே நடத்திக் கொண்டிருந்தார் என்று கூற வேண்டும்.

தலைவரும் மற்றவர்களும் கூட்ட ஆரம்பத்திலேயே புலவரின் அடியாட்கள் கூட்டத்தில் ஊடுருவியிருப்பதைக் கவனித்து இரகசியமாகப் போலீஸ் பாதுகாப்புக்குச் சொல்லி யனுப்பி விட்டிருந்தார்கள். வெளியே போலீஸ் வந்து நின்றதும் தலைவர் எழுந்து அறிவித்தார்:

"இந்தக் காலனி அஸோஸியேஷன் அங்கத்தினர்கள் அல்லாத அந்நியர் யாரும் இந்தக் கூட்டத்தில் அமர்ந்திருந்தால் தயவுசெய்து அவர்கள் உடனே வெளியேறி விடுமாறு வேண்டுகிறோம்."

சங்கத் தலைவர் இப்படி அறிவித்த பின்பும் சிலர் வெளியேறாமல் இருக்கவே நிர்வாகிகள் வேறு முடிவுக்கு வந்தார்கள். எல்லாரையுமே வெளியேறச் செய்து மறுபடி ஆட்களை உறுப்பினரா இல்லையா என்று அடையாளம் பார்த்து அப்புறம் உள்ளே விடுவது என்று ஏற்பாடு ஆயிற்று. போலீஸ் உதவியுடன் உறுப்பினர் பட்டியலைக் கையில் வைத்துக் கொண்டு ஒவ்வொரு பெயராகப் படித்து ஆட்களை உள்ளே விட்டதும் கதவு உட்புறமாகத் தாழிடப்பட்டு அடைக்கப் பட்டுவிட்டது.

புலவர் மகிழ்மாறனோடு வந்திருந்த தன்மானத் தமிழர் பட்டாளத்து ஆள் முப்பது பேருக்குமேல் வெளியேற வேண்டியதாகி விட்டது. உறுப்பினர் என்ற முறையில் மகிழ்மாறன் மட்டும் உள்ளே விடப்பட்டார். ஆனால் மற்றவர்கள் அங்கு அவரை ஒரு வெறுப்போடு முறைத்துப் பார்த்தார்கள் என்பது வெளிப்படவே தெரிந்தது.

இந்த ஏற்பாடுகள் முடிந்ததும் தலைவர் எழுந்திருந்து பொதுவாக ஓர் உரை நிகழ்த்தினார். பொதுப்படையான பேச்சுப்போல ஒலித்தாலும் அங்கங்கே தன்னைச் சாடுவது போல் அவரது உரையில் உள்ளர்த்தம் இருப்பதைக் கண்ணன் கண்டு கொள்ள முடிந்தது.

"ஒரு காலனியின் வளர்ச்சியைக் கவனிக்கும்போது எல்லார் நலனுக்கும் பாடுபடக்கூடிய பரந்த மனத்தோடு இருப்பது தான் நல்லது. தனித்தனி விரோதங்களைப் பெரிது படுத்தி வளர்த்தால் எந்தச் சங்கமும் உலைந்து விடும். ஒற்றுமையும் பொதுநல நோக்கமும்தான் இத்தகைய வெல்ஃபேர் அஸோஸியேஷன்களுக்கு முழுமூச்சாயிருக்க வேண்டும். நமது உறுப்பினர்கள் பலர் சில மனத்தாங்கல்களைத் தெரிவிக்க இந்த அவசரக் கூட்டத்தைக் கூட்டும்படி வேண்டினார்கள். முதலில் ஏகாம்பர முதலியார் அவர்கள் பேசுவார்."

மிகவும் வயது மூத்தவராகிய ஏகாம்பர முதலியார் பேச வருவது போல வந்து திடீரென்று சட்டைப் பைக்குள் கையை விட்டு ஒரு காகிதத்தை எடுத்துப் படிக்க ஆரம்பித்தார்.

"இந்தக் காலனி நலன் நாடுவோர் சங்கத்தின் செயலாளராயிருந்து கொண்டே காலனியின் நலனுக்கும் ஒற்றுமைக்கும் புறம்பான காரியங்களில் ஈடுபடும் கண்ணன் அவர்கள் மேல் பெரும்பாலான உறுப்பினர்கள் நம்பிக்கையிழந்து விட்டதால் அவர் உடனடியாகச் செயலாளர் பதவியிலிருந்து இராஜிநாமா செய்யவேண்டும் அல்லது விலக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையை நான் இப் பேரவையில் முன் மொழிகிறேன்."

"அதை நான் வழி மொழிகிறேன்"—என்றார் மாவுமில் உரிமையாளர் சங்கர சுப்பிரமணியம்.

"இப்படிச் செய்வது மரியாதை இல்லை. கண்ணன் இந்தக் காலனி நலனுக்காக எவ்வளவோ செய்திருக்கிறார்.

அவருக்கு விளக்கம் சொல்லச் சந்தர்ப்பம் தந்து அவரது விளக்கம் நியாயமாயிருந்தால் அவரே செயலாளர் பதவியில் தொடர வாய்ப்பளிப்பதுதான் முறை''—என்று பாகவதர் குறுக்கிட்டது கண்ணனுக்கு ஆச்சரியமளித்தது. அதை விடப் பெரிய ஆச்சரியம், ''பாகவதர் சொல்றதுதான் என் அபிப்ராயமும்! அவசரப்பட்டுக் காரியதரிசியை மாத்த வேண்டியதில்லை''—என்று அம்மிணி அம்மாளும் தொடர்ந்த போது கண்ணனின் ஆச்சரியம் இன்னும் அதிகமாயிற்று. அப்போது மகிழ்மாறன் கண்ணனின் காதருகே வந்து முணு முணுத்தார். ''அத்தனையும் வேஷம்! நம்பி ஏமாந்து போயி டாதீங்க...இவங்க தூண்டிவிட்டுத்தான் இத்தனையும் நடக் குது. சும்மா உங்க கண் முன்னாலே இப்பிடி உங்களை ஆதரிக்கிறமாதிரி நாடகமாடறாங்க.''

''என் மேல் என்ன குற்றம்னே சொல்லாமல் தீர்மானம் கொண்டு வர்ரப்போ நான் எப்படி விளக்கம் சொல்லமுடி யும்?''—கண்ணன் இப்படி எழுந்து கேட்கவும் கூட்டத்தில் மூலைக்கு மூலை ஆத்திரமான குரல்கள் கிளம்பின. அங்கே கண்ணனுக்கும் புலவருக்கும் கடுமையான எதிர்ப்பு இருந்தது. அவர்களை எழுந்து பேசவிடாத அளவு கூட்டம் ஆத்திரமாயி ருந்தது. ஏதோ எழுந்து பேச முயன்று முடியாமல் போய்த் திணறிய கண்ணன், ''நீங்க உங்க இஷ்டப்படி முடிவு பண் ணிக்கலாம்''—என்று நிராதரவாக அப்படியே உட்கார்ந்து விட்டான். வேறு எதுவும் செய்ய முடியாத நிலைமை அவனுக்கு.

''அதெல்லாம் நீங்களா முடிவு பண்ணினா ஒண்ணும் சட்டப்படி செல்லாது. முறைப்படி தீர்மானத்தை ஓட்டுக்கு விட்டாகணும்'' என்று புலவர் ஆவேசமாக எழுந்து கத்தினார். அவர் அப்படிச் செய்ததும் கண்ணனுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் அவரை அவனால் தடுக்கவும் முடியவில்லை.

தலைவர் எழுந்து கூட்டத்தை அமைதியாயிருக்குமாறு வேண்டிவிட்டு, ''இப்போது இந்த நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தை ஆதரிப்பவர்கள் அனைவரையும் கை தூக்கு

மாறு வேண்டுகிறேன்''என்றார் பாகவதரும் அம்மிணி அம்மா ளும் தாங்கள் ஓட்டெடுப்பில் கலந்து கொள்ளவில்லை என்றார் கள். முதலிலேயே ஒதுங்கிக் கொண்டார்கள்.

கண்ணனையும், மகிழ்மாறனையும் தவிர அனைவரும் கை தூக்கினர். முடிவு தெரிந்து விட்டாலும் ஒரு முறைக்காக, ''இப்போது இந்த நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தை எதிர்த்து ஓட்டளிப்பவர்கள் கை தூக்கலாம்''—என்பதையும் தலைவர் அறிவித்தார். மகிழ்மாறனின் கை மட்டுமே உயர்ந் தது. கண்ணன் ஏதோ ஞாபகத்தில் பேசாமலிருந்து விட்டான்.

நம்பிக்கை இல்லாத் தீர்மானம் நிறைவேறியதாகத் தலைவர் அறிவித்தார். கண்ணன் முகத்தில் ஈயாடவில்லை. புலவரால் வந்த அவமானம் பொறுக்க முடியாமல் சங்க நிர்வாக சம்பந்தமான மினிட்ஸ் புக், ரசீது, லெட்ஜர் எல்லா வற்றையும் தலைவர் முன் தூக்கி எறிந்துவிட்டு ஆத்திரமாக வெளியேறினான் அவன்.

''பாகவதர் ஆதிக்கம் ஒழிக'' என்று கத்திக் கூப்பாடு போட்டவாறு புலவரும் தன்னைப் பின்தொடர்ந்து வெளியேறி யது கண்ணனுக்குப் பிடிக்கவில்லையானாலும் அதைத் தடுக் கவும் அவனால் முடியவில்லை. பலாத்காரமாக இந்தப் புலவர் தன் மேல் விழுந்து விழுந்து ஆதரிப்பதன் மூலம் தான் இன்னும் நிறைய அவமானப் பட நேரப்போகிறது என்றே அவன் உள்மனம் அவனுக்குச் சொல்லியது. கண்ணனும், புலவரும் வெளியேறியதும் வெளியே காத்திருந்த புலவரின் கூலிப் பட்டாளம் சம்பந்தமில்லாமல் அம்மிணி அம்மாவை யும், பாகவதரையும் திட்டி மிக மலிவான கோஷங்களைப் போடத் தொடங்கினார்கள். அதுவும் கண்ணனுக்குப் பிடிக்க வில்லை. கண்ணனும் புலவரும் வெளியேறிய சிறிது நேரத் தில் புலவரைச் சங்கத்திலிருந்து வெளியேற்றும் தீர்மானமும் அங்கு ஏகமனதாக நிறைவேற்றப்பட்டதாகக் கேள்விப்பட் டார்கள் அவர்கள்.

ஒருவகையில் கண்ணன் தொல்லைகளிலிருந்து விடுபட்டதுபோல் உணர்ந்தான். இன்னொரு வகையில் மனசு குன்றி அவமானப்பட்டு மூக்கறுக்கப்பட்டது போலவும் தோன்றியது. அவன் புலிமேல் சவாரி செய்பவனுடைய நிலையிலிருந்தான். மகிழ்மாறனை அவனால் விடவும் முடியவில்லை. மகிழ்மாறன் அவனை விடவும் தயாராயில்லை.

அன்று மாலையிலேயே அவசர அவசரமாக அச்சிடப்பட்ட ஒரு புதிய 'லெட்டர் ஹெட்'டுடன் மறுபடி கண்ணனை வந்து சந்தித்தார் மகிழ்மாறன். 'அய்யப்பன் நகர அன்பர் கழகம்'—தலைவர்: கண்ணன்—பொதுச் செயலாளர்: புலவர் மகிழ்மாறன் என்று அச்சிடப்பட்டுப் புலவருடைய வீட்டு முகவரியே விலாசமாகக் கொடுக்கப்பட்டிருந்தது. கண்ணன் சற்றுக் கோபமாகவே அவரைக் கேட்டான்: "சட்டி சுட்டது—கையை விட்டது—அந்த மட்டில் தொல்லையில்லை என்று நான் ஒதுங்க விரும்புகிறேன் புலவரே! எனக்கு ஆயிரம் சொந்த வேலை இருக்கிறது. இதெல்லாம் ஏன் பண்றீங்க? நாமா ஒரு லெட்டர் பேடு போட்டுத் தலைவர், செயலாளர்னு மட்டும் எழுதிக்கிட்டாப் போதுமா? காரியம் நடக்க வேணுமா? யாரு செய்வாங்க...?"

"அப்படி விட்டுடப்பிடாதுங்க! அப்புறம் அவங்க துளுத்துப் போயிடுவாங்க. நம்மைக் கையாலாகாதவங்க... உப்புக் கல்லுக்குத் துப்பில்லாதவங்கன்னு நினைப்பாங்க... நீங்க ஒண்ணும் பண்ணவேண்டாம். பேசாம இருங்க... போறும். எல்லாம் நானே பார்த்துக்கிறேன்."

"என்னத்தைப் பார்க்கப் போகிறீர்! மத்தவங்க மெம்பர் ஆவாங்களா இல்லியான்னு தெரியாம நீரா ஒரு பேரைச் சூட்டிக்கிட்டுக் காசு செலவழிச்சு லெட்டர் ஹெட் அடிச்சிருக்கீரே?...அதுதான் போகட்டும்! இதென்ன 'அன்பர் கழகம்'னு போட்டீரு? இது எப்படி வெல்ஃபேர் அஸோஸியேஷனைக் குறிக்கும்?"

"நீங்க ஒண்ணு! அனுவுக்கு அனு வருதில்லே? அய்யப்பன் நகரத்து மேலே அன்புள்ளவங்க கழகம்னு பொருள் கொள்ளணும். நகர் வளர்ச்சியிலே அன்பில்லாத வங்களா அதிலே உறுப்பினரா இருப்பாங்க...?"

"அது ஏன்யா கழகம்னு போட்டீரு? அரசியல் வாடை அடிக்குதே? சங்கம்னு போடக் கூடாதோ?"

"அவங்க சங்கம்னு போட்டிருக்காங்க! சும்மா மிரளட்டும்னுதான் கழகம்னு போட்டேன். பாருங்க! ரெண்டே மாசத்துலே அத்தனை பேரும் அஸோஸியேஷனை விட்டுட்டுக் கழகத்துக்கு ஓடி வரப் போறுங்க..."

புலவர் போகும்போது லெட்டர் ஹெட் முதலிய செலவு வகைக்கு ரூபாய் ஐம்பது ஆகிவிட்டது என்று தலையைச் சொறிந்துகொண்டு நின்றுர். கண்ணன் மனத்துக்குள் அவரைத் திட்டித் தீர்த்துக் கொண்டே பணத்தைக் கொடுத்துத் தொலைக்க வேண்டியதாகிவிட்டது.

அடுத்து வந்த காலம் அவனைப் படாத பாடு படுத்தியது. மின்சார இலாகா, பாகவதர், அம்மிணி அம்மாள் இவர்கள் மேல் அவன் போட்டிருந்த வழக்கு ஆறுமாத காலம் இழுத்தடித்து ரூபாய் நாலாயிரம் செலவுக்குப் பின் கோர்ட்டில் தள்ளுபடி ஆகிவிட்டது. அவனுக்கு அலைச்சலும் வீண் பணச் செலவும்தான் கண்ட பலன்.

அங்கே வீடுகளைக் கட்டும்போது ஹவுஸிங் யூனிட் காரர்கள் அனுமதித்து இசைந்ததனுல்தான் வீடுகளுக்கான ஓவர் ஹெட் லயன் கனெக்ஷன் தரப்பட்டிருக்கிறது. அதனுல் மின்சார வாரியமோ, பாகவதரோ, அம்மிணி அம்மாளோ இதற்குப் பொறுப்பாக முடியாது என்று காரணம் கூறி வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டார்கள். ஹவுஸிங் யூனிட்டுக்கு இன்னும் அவன் முழுமையாகப் பணம் கட்டி முடித்துப் பத்திரம் பதிவு செய்து வாங்கிக் கொள்ளவில்லை. தவணை முறையில் பல ஆண்டுகள் பணம் கட்டி முடித்த

பின்பே வீட்டைப் பதிவு செய்து வாங்கிக் கொள்ள முடியும். ஆகவே ஹவுஸிங் யூனிட்காரர்கள் மேல் கேஸ் போட அவன் துணியவில்லை. உண்மையில் கேஸ் தள்ளுபடி செய்யப்பட்ட அன்று அவனைவிட அதிகமாக அவனுக்காகப் பாகவதரும், அம்மிணி அம்மாவும் வருத்தப்பட்டார்கள். அவர்களோடு அவனாகவே விரோதம் பாராட்டிப் பேசுவதை நிறுத்தி விட்டதால் அவனிடம் பேசமுடியாது. என்று அவன் வீட்டில் இல்லாத போது சுகன்யாவிடம் சொல்லி வருத்தப் பட்டார் பாகவதர்.

''உங்க வீட்டுக்காரருக்குச் சத் சங்கம்— நல்ல சகவாசம் இல்லே... தார் பூசறவன், சண்டைக் கோழி, தகராறுப் பிரியர்களோட வார்த்தையைக் கேட்டிட்டு அநாவசியமா அலைஞ்சு பணத்தையும், மனத்தையும், கெடுத்துக்கிறதைப் பார்த்து எனக்கே வருத்தமா இருக்கும்மா! பணத் திமிர்லே வம்புக்காகக் கொழுப்பெடுத்துப் போய்க் கோர்ட்டுக்குப் போறவா நெறையப் பேரை எனக்குத் தெரியும். உங்க வீட்டுக்காரரை மாதிரி ஒரு குடும்பஸ்தன் இப்பிடி ஒண்ணு மில்லாததுக்காக மூவாயிரம், நாலாயிரம்னு கோர்ட்டுக்கு அழுததைப் பண்ணின பாவம்னுதான் சொல்லணும் அம்மா...''

சுகன்யாவைத் தனியே பார்த்து அம்மிணி அம்மாவும் வருத்தப்பட்டாள்: ''அநாவசியமா உம் புருஷன் எங்களை விரோதியாப் பாவிச்சு இப்பிடி நடந்துக்க வேண்டாம். எங்களை விரோதிச்சுக்க ஆசைப்பட்டுக் கடைசியிலே அந்த மகிழ்மாறனைத் தவிர இந்தக் காலனி முழுதுமே உம் புருசனுக்கு விரோதமாப் போயாச்சு.''

கணவனுக்காக—ஏங்கல் தாங்கலில் பணமோ பண்டமோ ஒத்தாசையோ எதுவும் செய்யக்கூடிய அம்மிணி அம்மாளைச் சுகன்யா ஒரு நாளும் தவறாகப் புரிந்து கொண்டதில்லை. புருஷன் வீட்டில் இல்லாத போது சுகன்யா அவர்கள் வீட்டில் போய்ப் பேசிக் கொண்டிருப்பது உண்டு. வீடியோவில் புதுப்

புதுப் படங்கள் போடும் போது புருஷன் வீட்டில் இல்லா விட்டால் போய்ப் பார்ப்பதுகூட உண்டு. சில ஓய்வான வேளைகளில் பாகவதரும்கூட வந்து சினிமாப் பார்க்க உட்காருவார். கணவனைப் போல இவர்களை வெறுக்க அவளால் முடியவில்லை. கணவனின் அர்த்தமற்ற வெறுப்பை அவளால் முயன்று மாற்றவும் இயலவில்லை.

# 11

பாகவதர், அம்மிணி அம்மாள் தவிர மூன்றுவது எதிரியாகப் பாவிக்கக் கண்ணனுக்கு இன்னொரு மனிதர் கிடைத்தார். அவர்தான் ஐயப்பன் நகர் இரண்டாம் குறுக்குத் தெரு பதினெட்டாம் நம்பர் வீட்டுக்குரிய நீலகண்டன். கண்ணன் மேல் நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றியபின்—அதே இடத்தில் காலனி நலன் நாடுவோர் சங்கத்தின் புதிய செயலாளராக இந்த நீலகண்டன்தான் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்.

நீலகண்டன் பல்கலைக்கழக இந்தித் துறையில் பேராசிரியராக இருந்தார். பரம சாது. யாரோடும் வம்பு தும்புக்குப் போகாதவர். இவர் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப் பட்டவுடன் அதைப் புலவர் மகிழ்மாறன் தம் பாஷையில் கீழ்க்கண்டவாறு கண்ணனிடம் வந்து தெரிவித்தார்: "காலனியிலே இந்தி ஆதிக்கம் பரவுது! இல்லாட்டி எத்தினியோ ஆளுங்கள்ளாம் இருக்கறப்போ மந்தி நிகர் இந்தியைக் கற்பிக்கும் அந்தத் தொந்திக்கார நீலகண்டனைப் போய்ச் செயலாளராகத் தேர்ந்தெடுப்பாங்களா?"

"நீலகண்டனுக்கு ஏது ஐயா தொந்தி? ஊதினால் ஒடிந்து விழுகிற மாதிரி ஒல்லி ஆளாச்சே அவர்?"

"அட நீங்க ஒண்ணு! தொந்தி இருந்தாத்தான் சொல்லணுமா? இந்தி, மந்தின்னு வர்றப்பத் தொந்தின்னும்

வந்தாத்தானே பேச நல்லா இருக்கும்?''—என்று கண்ணனுக்குப் புலவரிடமிருந்து பதில் வந்தது.

நீலகண்டனுக்கும் கண்ணனுக்கும் பகைமை எதுவும் இல்லை என்றாலும், தான் நீக்கப்பட்ட ஒரு பதவிக்கு அவர் நியமிக்கப்பட்டார் என்ற ஒரே காரணத்தாலேயே அவர் வெறுக்கப்பட வேண்டியவர் என்பது போல் தோன்றி விட்டது.

அந்தக் காலனி அஸோஸியேஷன் சம்பந்தமான பழைய ரசீதுப் புத்தகங்களின் அடிக்கட்டை வேண்டுமென்று நீலகண்டனே ஒரு நாள் கண்ணனைத் தேடிக் கொண்டு வந்தார்.

''எப்போதும் போல உங்க ஒத்துழைப்பெல்லாம் வேணும்! இப்ப நீங்க செகரெட்டிரியா இல்லேன்னாலும் நீங்க தான் இந்த அஸோஸியேஷனோட ஃபவுண்டர் செக்ரெட்டரி, மறந்துடாதீங்க... ஏதோ போறுத வேளை என்னென்னவோ நடந்து போச்சு. அதையெல்லாம் நீங்களும் மறந்துடுங்க. நாங்களும் மறந்துடறோம்''—என்று அவர் கூறிய பரிவான வார்த்தைகளுக்குப் பதில் இதமாக நாலு சொற்கள் கூறக் கூடக் கண்ணனால் முடியவில்லை.

''ரசீது அடிக்கட்டை கிடிக்கட்டைல்லாம் எதுவும் எங்கிட்டக் கெடையாது. உங்க அஸோஸியேஷனோட சங்காத்தமே நம்பளுக்கு வேண்டாம். ஆளை விடுங்க சாமீ!''—முகத்திலடித்தாற்போல நீலகண்டனுக்குப் பதில் சொன்னான் கண்ணன். அதன்பின் நீலகண்டன் கண்ணனைத் தேடி வரவே இல்லை.

ஆனால் காலனி நலன் நாடுவோர் சங்கம் பிரமாத வேகத்தில் செயலாற்றியது. அந்தக் காலனியில் வசிக்கும் ஐந்து முதல் பன்னிரண்டு வரையிலான வயதுள்ள குழந்தைகளுக்காக வெல்ஃபேர் அஸோஸியேஷனை காலனிக்குள் இடம் கேட்டு வாங்கி ஆஸ்பெஸ்டாஸ் ஷெட்டுகளைப் போட்டு

ஒரு பள்ளிக்கூடம் தொடங்கியது. கோயில் திருப்பணி வேலைக்கு அம்மிணி அம்மாள் முதலியவர்களின் நன்கொடை தாராளமாகக் கிடைத்து அது வேகமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. அவர்கள் முயற்சியின் பேரில் எல்லாத் தெருக்களுக்கும் புதிய தார்ச்சாலைகள், மெர்க்குரி விளக்குகள் எல்லாம் வந்தன. அஸோஸியேஷன் முக்கியஸ்தர்கள் மின்சார வாரியத்தை அணுகி வற்புறுத்தியதன் பேரில் காலனி முழுவதற்குமே அண்டர் கிரவுண்ட் கேபிள் சிஸ்டம் அறிமுகப்படுத்தப்பட்டது. கண்ணன் வீட்டுத் தோட்டம் பிழைத்தது.

உண்மையில் பழைய அஸோஸியேஷன் இப்படியெல்லாம் வேகமாகவும் துடிதுடிப்பாகவும் செயற்படக் காரணமே கண்ணனைத் தலைவராகப் போட்டுப் புலவர் தொடங்கிய 'அய்யப்பன் நகர் அன்பர் கழகம்' என்ற லெட்டர் ஹெட் சங்கம்தான்.

எங்கே புதிய சங்கம் ஏதாவது வேகமாகச் செயல்பட்டுப் பழைய சங்கம் சோம்பேறி என்று நிரூபித்து விடப் போகிறதோ என்ற பயத்தில் கண்ணனை வெளியேற்றிய பழைய சங்கத்தினர் தீவிர வேகத்தோடு காலனி வளர்ச்சிக்குப் பாடுபட்டிருந்தனர்.

ஆனால் பழைய சங்கத்தை இப்படி ஒரு மிரட்டு மிரட்டி வேகமாக முடுக்கிவிட்ட புதிய சங்கமோ வெறும் லெட்டர் ஹெட்டுடன் நின்று போன மாதிரி அப்படியே தேங்கி விட்டது.

திடீரென்று புலவர் ஒருநாள் படு உற்சாகத்தோடு கண்ணனைத் தேடி வந்தார். "ஒரு புது யோசனை! இதை மட்டும் கடைபிடிச்சோம்னு அத்தினி அங்கத்தினர்களும் அந்தச் சங்கத்தை விட்டுப்பிட்டு நம்மகிட்டே வந்து சேர்ந்திடுவாங்க. இது நிச்சயம்."

"என்ன யோசனை அது?"

"நம்ம அ. அ. க. சார்பிலே ஒரு ரெக்ரியேஷன் கிளப்-அதாவது மனமகிழ் மன்றம் தொடங்கி, சீட்டு, கேரம் போர்டு, செஸ், டென்னிஸ், ஷட்டில்காக் மாதிரி விளையாட்டுங்களுக்கு ஏற்பாடு பண்ணிக் குடுத்தோம்னு அங்கத்தினர்கள் அலறிக்கிட்டு ஓடிவருவாங்க..."

"அதென்ன அ. அ. க...?"

"அதாங்க அய்யப்பன் நகர் அன்பர் கழகம்கிறத்துக்குச் சுருக்கம்."

"முழுப் பேரையுமே சொன்னாக் கூட யாருக்கும் தெரியாததைச் சுருக்கமாகச் சொல்லி என்ன ஆகப்போகுது? ஏதோ உமக்குக் கட்சிப் பெயருங்களைச் சொல்றமாதிரிச் சுருக்கிச் சொல்லிப் பார்க்கணும்னு ஆசை. சொல்லிக்குமே?"

"என் யோசனை எப்பிடி?"

"யோசனை எல்லாம் சரிதான்! சீட்டுக்கட்டு, கேரம் போர்டு, ஷட்டில்காக் எல்லாம் வாங்கப் பணத்துக்கு எங்கே போவீர்? சொல்லும்! அதுக்கெல்லாம் முதல்லே பணம் வேணுமே, பணம்?"

"ஒரு நிதி வசூல் தொடங்கவேண்டியதுதாங்க."

"ஐயையோ! வேண்டவே வேண்டாம்! உங்களாலே முடியும்னு 'இந்த மாதிரி எல்லாம் செய்யப் போறோம்! மெம்பராச் சேருங்க,'ன்னு முதல்லே நெறைய ஆட்களைச் சேருங்க. அப்பிடி நெறையப் பேர் சேர்ந்தாங்கன்னு அப்புறம் 'ரெக்ரியேஷன் கிளப்' செட் அப் பண்ணிடலாம்."

"அது அலை ஓய்ந்த பிறகு நீராடலாம்னு காத்துக்கிடக்கிற மாதிரி ஆயிடுங்க! முதல்லே எல்லாம் செய்துதான் அப்புறம் ஆள் சேர்க்க முடியும்."

"சரிதான்! ஆனால் தண்ணீரே இல்லாம நீராட முடியாதே? தண்ணீரைத் தேக்கிட்டுத்தானே அப்புறம் குளிக்கலாம்?"

புலவர் நிதி வசூல் என்று ஆரம்பித்தாலே கண்ணனுக்கு உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை நடுங்கியது. பத்து ரூபாயை ஆயிரத்தொரு ரூபாயாகத் திருத்திய பழங்கதை நினைவுக்கு வந்து வதைத்தது. 'நரி இடம் போனால் என்ன? வலம் போனால் என்ன? மேலே விழுந்து பிடுங்காமல் இருந்தால் சரி'—என்பது போல் புலவர் அ. அ. க. வை வளர்த்தாலும் சரி, அழித்தாலும் சரி தன்னிடம் நிதி வசூல் என்று நோட்டுப் புத்தகத்துடன் வராமல் இருந்தாலே போதும் என்று கண்ணனுக்குத் தோன்றியது. கடித முகப்பில் தன் பெயரை அ. அ. க. வின் தலைவர் என்று அச்சிட்டிருந்தாலும் தன்னைக் கேட்காமலே அ. அ. க. சார்பில் புலவர் பல காரியங்களைச் செய்வது கண்ணனுக்குப் பிடிக்கவில்லை. லெட்டர் ஹெட்டை வைத்துக்கொண்டே புலவர் ஒரு சங்கத்தை அட்டகாசமாக நடத்தியது கண்ணனுக்கு வியப்பூட்டியது. தன் பெயர் அச்சிட்ட லெட்டர் ஹெட்டை வைத்துக் கொண்டே தனக்கு அவப் பெயர் உண்டாக்கும் சில காரியங்களைப் புலவர் செய்தபோது கண்ணனாலேயே பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அப்படிக் காரியங்களை மறுக்கவும் முடியாமல், ஆதரிக்கவும் முடியாமல் கண்ணன் திணறினான்.

இப்படி எல்லாம் இருந்தாலும் ஒரே ஒரு செய்தியை மட்டும் புலவர் தன்னிடம் கோள்மூட்டி வத்தி வைத்தபடியே நம்பினான் கண்ணன். காலனி நலன் நாடுவோர் சங்கம் தன் மேல் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்து அவமானப்படுத்தியது முதலிய சகல காரியங்களுக்கும் பின்னணியிலிருந்து சதி செய்தவர்கள் பாகவதரும் அம்மிணியம்மாளும்தான் என்று புலவர் சொல்லி வந்ததை மட்டும் அவன் அப்படியே நூற்றுக்கு நூறு நம்பினான்.

கண்ணன் எங்கே தன்னைத் தனியே விட்டு விட்டுப் பாகவதர் அம்மிணியம்மாள் வசம் சேர்ந்து விடுவானோ என்ற பயத்தில் அதைத் தடுப்பதற்கான நிரந்தர முயற்சி யாகப் புலவர் இந்தக் கோள்மூட்டுதலைச் செய்துவந்தார். அது பயனளித்தது. கண்ணனின் அண்டை வீட்டாருடன் அவனுக்குள்ள விரோதம் தணிந்துவிடாமல் அவ்வப்போது புலவர் புதுப் புது நெருப்பைப் பற்ற வைத்துச் சமாளித்தார்.

'குருவாயூர் அப்பன், ஐயப்பன் சந்நிதிகள் தமிழர் வழிபாட்டு மரபுக்கு முரணானவை. அவை அமைவதை அ. அ. க. மறியல் செய்து தடுக்கும்'—என்று திடுதிப் பென்று காலனி முழுவதும் ஒரு சுவரொட்டி ஒட்டப் பட்டிருந்தது. சுவரொட்டியில் மீசையோடு பிரமாதமாகத் தென்பட்ட புலவரின் புகைப்படமும் இருந்தது. இது விஷய மாகப் புலவர் கண்ணனிடம் எதுவும் பிரஸ்தாபிக்கக்கூட இல்லை. அவரே முடிவு செய்து அவரே போஸ்டரும் அடித்து ஒட்டி விட்டார். அ. அ. க. வில் தன் பெயர் சம்பந்தப் பட்டிருப்பதால் கண்ணன் புலவரைக் கூப்பிட்டுக் கண்டித் தான். புலவர் அவனுடைய கண்டிப்பைக் கேட்டுச் சிறிதும் அயரவில்லை.

"நீங்க இதெல்லாம் கண்டுக்காதீங்க. போராட்டத்திலே நீங்க குதிக்கணும்கிறதும் இல்லே. நானும் நம்ம படை வீரர்களுமே பார்த்துக்கிறோம். சும்மா இப்பிடி அவங்களுக்கு ஏதாவது தலைவலி குடுத்துக்கிட்டே இருக்கணும். இல்லாட்டி நாம இருக்கோம்கிறதையே மறந்துடுவாங்க."

"அது சரி! தலைவர்னு எம் பேரை லெட்டர்ஹெட்ல போட்டுருக்கீங்களே; அதையாவது தயவு செய்து எடுத்துடுங்க."

"சே! சே! நான் அத்தனை தூரம் நன்றி மறக்கிற ஆள் இல்லீங்க. நானைக்கே 'அ. அ. க. வின் தன்னேரிலாத் தலைவர் கண்ணன் அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க மறியல் திட்டம் கைவிடப்பட்டது'ன்னு இன்னொரு போஸ்டர் போட்டு உங்களை எல்லாரும் கொண்டாடற மாதிரிப் பண்ணிடுவேன். பயப்படாதீங்க."

கண்ணன் திகைத்தான். மகத்தான அரசியல் கட்சி ஒன்றை நடத்தும் அத்தனை பெரிய சாமர்த்தியத்தை வைத்துக் கொண்டு புலவர் ஒரு சின்னக் காலனி அமைப்பில் சிக்கித் திணறுவதாகக் கற்பனை செய்து கொண்டான் அவன். இவ்வளவு பெரிய திறமைசாலியைச் செயலாளராகக் கொண்ட ஒரு சங்கத்தின் தலைவராக இருக்கும் திறமை தனக்குத்தான் இல்லையோ என்று ஏக்கமாயிருந்தது அவனுக்கு.

இந்த நாட்டில் தலைவனாக விரும்புகிற ஒவ்வொரு வனுக்கும் இவரை மாதிரி ஒரு செயலாளர் கிடைத்தால்தான் அதிர்ஷ்டம் என்று தோன்றியது கண்ணனுக்கு. அந்த வகையில் அ. அ. க. தலைவராகிய தான் அதிர்ஷ்டசாலியா இல்லையா என்பதுதான் இன்னும் அவனுக்குப் புரியவில்லை. சந்தேகமாகவே இருந்தது.

அய்யப்பன் நகர் காலனி வெல்ஃபேர் அஸோஸியேஷனி லிருந்து வெளியேற்றப்பட்டு ஒரு வருஷத்திற்கு மேலாகியும் அதற்குப் போட்டியாகப் புலவர் மகிழ்மாறன் தொடங்கிய அ. அ. க. வில் இரண்டே இரண்டு உறுப்பினர்களுக்கு மேல் சேர்க்க முடியவில்லை. அந்த இரண்டு பேர் கூட வேறு யாருமில்லை. புலவரும் கண்ணனும்தான்.

பழைய சங்கத்திலோ ஜெட் வேக வளர்ச்சி. பள்ளிக் கூடம், கோயில், பார்க், புதிய சாலைகள், தெருக்களுக்கு மெர்குரி விளக்குகள், காலனி முழுவதும் அண்டர் கிரவுண்ட் கேபிள் என்று பலவற்றைச் சாதித்து முடித்திருந்தார்கள். உண்மை விளம்பி நண்பன் பாகவதரையும் அம்மிணி

அம்மாளையும் பற்றி மேலும் பல தடவை தாறுமாருக எழுதியும் அது அவர்களையோ மற்றவர்களையோ ஒருசிறிதும் பாதிக்கவில்லை.

கோயில் திருப்பணிக்கு முதலில் கொடுத்த இருபத்தை யாயிரம் நிதியைத் தவிரத் தன் பெண்கள் மாலா, பாலா நாட்டிய நிகழ்ச்சி ஒன்றும் ஏற்பாடு செய்து அதன் மூலம் மேலும் ஓர் ஐம்பதினுயிரம் ரூபாய் திரட்டிக் காலனி அஸோஸியேஷனுக்குக் கொடுத்திருந்தாள் அம்மிணி அம்மாள். காலனி நலன்நாடுவோர் சங்கத்தில் பாகவதருக்கும் அம்மிணி அம்மாளுக்கும் நல்ல செல்வாக்கு இருந்தது. சங்கத்தின் புதுச் செயலாளர் நீலகண்டனின் பெயருக்கும் மதிப்பிருந்தது.

''பழைய கண்ணன் மாதிரி இந்த ஆள் சவடால் பேர்வழி இல்லே! ஆளு அடக்கமா இருந்துக்கிட்டே பெரிய பெரிய காரியங்களை எல்லாம் சாதிச்சிருக்கான் இந்த மனுஷன்''— என்று காலனி முழுவதும் நீலகண்டனைக் கொண்டாடியது. கண்ணனை எல்லாரும் மறந்தே போன மாதிரி இருந்தது. ஆனாலும் கண்ணனின் அடிமனத்தில் தன் இரு பக்கத்து வீட்டுக்காரர்கள் மேலும் ஏற்பட்டிருந்த ஆக்ரோஷம் மட்டும் தணியவே இல்லை.

அவ்வப்போது முடிந்த தொல்லைகளை அவர்களுக்குக் கண்ணன் செய்யத் தவறுவதே இல்லை. சனிக்கிழமை, சனிக்கிழமை இரவு ஏழு மணி முதல் பதினேரு மணி வரை காலனியிலுள்ள ஆஸ்திக அன்பர்கள் சிலர் கூடிப் பாகவதர் வீட்டில் பஜனைப் பாடல்களைப் பாடி வந்தனர். இந்தச் சனிக்கிழமைப் பஜனை தன் தூக்கத்தைப் பாதிப்பதாகவும், சத்தம் பொறுக்க முடியாமல் காலனிவாசிகள் அவதிப்படுவ தாகவும் பஜனை சத்தம் சில வயதான நெஞ்சுவலிககாரர் களின் உயிரைக் கூடப் பாதிக்கும் என்றும கண்ணன் அ. அ. க மூலம் போலீஸ் கமிஷனருக்குப் புகார் எழுதிப் போட்டான். பாகவதருக்கு இடையூறு செய்தோம் என்ற

திருப்தியில்தான் இக்கடிதத்தை அவன் எழுதினன். போலீஸ் இலாகாவிலிருந்து ஒரு ஞாயிறு காலை கண்ணனின் அந்தப் புகார்க் கடிதத்தையும் எடுத்துக் கொண்டு ஓர் இன்ஸ்பெக்டர் கண்ணனைத் தேடி வந்தார். அவர் பாகவதரை எச்சரிப்பதற்குப் பதில் கண்ணனுக்குத்தான் அறிவுரை கூறிவிட்டுச் சென்றார்.

"இப்படி எல்லாம் புகார் செய்யறது உங்களுக்கே நல்லா இருக்கா சார்? ஏதோ படித்த பெரியவர் மத்தவங்க ஒத்துழைப்போட பஜனை பாடினல் அதைப் போய்ப் போலீஸுக்கு எழுதறீங்களே சார்? இப்படி விஷயத்திலே நீங்களே பரஸ்பரம் அனுசரிச்சுப் போறதுதான் நல்லது. கண்ட கண்ட பொதுக் கூட்டத்து மைக் கூப்பாடும், சினிமாப் பாட்டும் காதைத் துளைக்காம இந்த மட்டிலாவது பக்திப் பாடலைக் கேட்கக் குடுத்து வச்சிருக்கேன்னு சந்தோஷப் படுங்க."

கண்ணனல் அவரை மறுத்து எதுவும் பேச முடியாது போயிற்று.

## 12

ஐய்யப்பன் நகர் நலன் நாடுவோர் சங்கத்திலிருந்து தன்னை வெளியேற்றுவதற்கும், தன் மேல் நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வருவதற்கும் நேர்ந்திரா விட்டால் கண்ணனின் மனத்திற்குள் இவ்வளவு தீவிர வெறுப்பும் கசப்பும் ஏற்பட்டிருக்கப் போவதில்லை. மற்றவற்றை எல்லாம் அவன் நாளடைவில் மறந்திருப்பான். மன்னித்திருப்பான். பழகிச் சகித்துக் கொண்டிருப்பான்.

ஆனல் சங்கத்திலிருந்து தன்னை வெளியேற்றியே தீருவதென்று பணத் திமிர் பிடித்த அம்மிணியம்மாளும், தன் விரோதியான பக்கத்து வீட்டுப் பாகவதரும் சதி செய்

திருக்கிருர்கள் என்பதாகப் புலவர் வைத்திருந்த வத்தி நன்ருகப் புகைந்தது. பற்றி எரிந்தது. நல்லெண்ணத்தைக் கணசமாக நாசம் பண்ணியது. மனத்தில் துவேஷத்தைத் தேங்கவிட்டது. 'இந்தப் பேட்டையின் நன்மைக்காக இராப் பகலாக அலேந்து நான் தொடங்கி வளர்த்த ஒரு சங்கத்தில் நானே உறுப்பினராகத் தேடிப் போய்ச் சேர்த்த இந்தப் பாகவதர் என்னேயே வெளியேற்றி விட்டாரே?'— என்ற கசப்புக் கழுத்து முட்ட நிரம்பியிருந்தது கண்ணனிடம்.

செயற்குழுக் கூட்டத்திலும், பேரவையிலும் பாகவதர் தன்னே ஆதரித்தாற் போலக் காட்டிக் கொண்டதெல்லாம் சும்மா வெறும் நடிப்பு என்று புலவர் சொல்லியதுதான் சரி என்பதாகவும் நம்பிஞன் கண்ணன்.

யாரிடம் கோள் சொல்லுகிருேமோ அவருக்கு ஏற்கெனவே பிடிக்காமல் போய்விட்ட ஒருவரைப் பற்றிக் கோள் சொல்லுவது என்பது காய்ந்த பஞ்சுப் பொதியில் நெருப்பு மூட்டுவதைப் போல் மிகவும் இலகுவான காரியம். புலவர் அப்படித்தான் கண்ணனிடம் நெருப்பு மூட்டியிருந் தார். வகையாகப் பார்த்துப் பற்ற வைத்திருந்தார்.

கண்ணன் எதனுலாவது பாகவதருடனும், அம்மிணி யம்மாளோடும் மறுபடி சிநேகிதமாகிவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய கட்டாயம் இன்று புலவருக்கு ஏற்பட்டி ருந்தது. காரணம் புதுச் சங்கம். தான் புதிதாகக் கண்ணனே வைத்துத் தொடங்கியிருந்த அய்யப்பன் நகர் அன்பர் கழகத்தில் உறுப்பினர்கள் சேர்க்கும் முயற்சியில் இறங்கிஞர் புலவர். அதற்குக் கண்ணனின் முழு ஆதரவும் அவருக்குத் தேவையாயிருந்தது.

ஒரு ஞாயிற்றுக் கிழமை காலேயில் ஏழெட்டு ஆட்களு டனும், புதிதாக அச்சிட்ட ரசீதுப் புத்தகங்களுடனும் கண்ணனேத் தேடி வந்தார் புலவர். கண்ணன் புலவரைக் கேட்டான்:

“என்ன சங்கதி? இப்படிக் குடி படைகளோட காலங் கார்த்தாலேயே வந்து நிக்கிறீங்க?”

“அ. அ. க. வசூல் இன்று முதல் தொடங்குகிறோம். நிறைய உறுப்பினர் சேர்த்தாகணும். நாம ரெண்டுபேர் மட்டும் உறுப்பினரா இருந்தாப் போதாது.”

“அதுக்கு நான் என்ன செய்யணும்? சொல்லுங்க!”

“ஒண்ணும் செய்யவேண்டாம்! சும்மா என் கூட வாங்க. போதும். மத்ததெல்லாம் நாங்க பார்த்துக்கிறோம். தலைவர் நீங்கதான்னு உங்களைக் காண்பித்தே வசூல் பண்ணிடு வேன்.”

புலவரோடு தானும் சேர்ந்து பகிரங்கமாக மற்றவர்கள் முன் போய் நிற்பதில் கண்ணனுக்கு நிறையத் தயக்கங்கள் இருந்தன. தன் பக்கத்தில் கூட நிற்கிற ஆளை உடனே மரியாதை இழக்கச் செய்கிற மகத்தான திறமை புலவருக்கு இருப்பதைக் கண்ணன் உள்ளூர அறிந்திருந்தான். ஏன், அநுபவித்தே இருந்தான். அவர் தொடங்கிய தமிழர் தன் மானப் படைக்கு ஒரு பத்து ரூபாய் நன்கொடை எழுதிக் கையெழுத்துப் போட்டதால் காலனி முழுவதும் தன் பெயரே ரிப்பேர் ஆகிப்போனதைக் கண்ணன் இன்னும் மறக்கவில்லை. மெல்லத் தட்டிக் கழிக்க முயன்றான் கண்ணன்.

“நான் எதுக்கு? நீங்களும் உங்க கூட வந்திருக்கிற இந்தத் தம்பிகளும் போனாலே போதுமே.”

“இல்லீங்க! நீங்க கண்டிப்பா வரணுங்க! அதுனாலே நம்ம எதிரிங்க இரண்டு உண்மைகளைப் புரிஞ்சுப்பாங்க. ஒண்ணு, நீங்க வெளியேறினதாலே அவங்களுக்கு வந்த நஷ்டம். இரண்டு, புதுச் சங்கத்துக்கு லாபம். உங்களைப் போல ஒரு சிங்கத்தை வெளியேற்றிய சிறுநரிகளான அவங்க, நீங்க சும்மா இல்லே புதுச் சங்கம் தொடங்கியிருக் கீங்கன்னும் புரிஞ்சுப்பாங்க.”

“இதென்ன புலி, நரி, பூனை அது இதுன்னு நாம மிருகக் காட்சி சாலையா நடத்தறோம்? நமக்குப் பிடிக்காதவங்கன் னாலும் அவங்களும் மனுசங்கதான் புலவரே!”

"மக்களே போல்வர் கயவர்."

"அப்படின்னு என்ன அர்த்தம் புலவரே?"

"நான் சொல்லலே. வள்ளுவர் சொல்லிட்டுப் போயிருக்கிரு."

"சரி, போகட்டும்! இப்பச் சுருக்கமா விஷயத்துக்கு வாங்க! அந்த அஸோஸியேஷன்ல இருக்கிற எல்லாரையுமே நம்ம அன்பர் கழகத்திலே சேர்க்க முயற்சி பண்ணப் போறேமா? அல்லது சில பேரை நாமே வேண்டாம்னு ஒதுக்கிடலாமா?"

"கண்டிப்பா சிலபேரை ஒதுக்கியே ஆகணுங்க. அம்மிணி அம்மாள் என்ற திரையுலக மின்மினியம்மாள்களின் தாய், பாகவதர் என்னும் ஆலகால விஷம், நீலகண்டன் என்னும் நச்சுப் பாம்பு, பழைய சங்கத்தின் தலைவர், இவங்களை எல்லாம் நம்ம அ. அ. க.விலே சேர்க்கவே கூடாது."

"அதுக்குள்ளே எல்லாருக்குமே இப்பிடி அடைமொழி தயார்ப் பண்ணிக் கேவலப்படுத்துகிறீரே...?"

"பின்னே சும்மாவா? அவங்க உங்களை வெளியேத்திக் கேவலப்படுத்திணுங்களா, இல்லியா?"

புலவர் வசூலுக்குக் கூட அழைத்துச் செல்லாமல் விட மாட்டார் போலிருந்தது. சில வகைகளில் பார்க்கப் போனல் பண வசூல் போன்ற காரியங்களில் அவரைத் தனியே விடுவதைக் காட்டிலும் தான் கூடப் போவது ஒருவகைத் தற்காப்பு என்றே கண்ணனும் நினைத்தான். அவனைத் தனியே விட்டு விட்டுப் போக அவர் தயாராயில்லை. அவரைத் தனியே அனுப்ப அவனும் தயங்கினன். கடைசியில் தவிர்க்க முடியாமல் வேண்டா வெறுப்பாகக் கண்ணனும் அவர்களோடு கிளம்ப வேண்டியதாயிற்று.

போன முதல் வீடு, ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தருடையது. புலவர் அ. அ. க. என்று தொடங்கியதுமே, "நான் அரசியல் கட்சிங்க எதுலேயும் சேர்றதுக்கு இல்லீங்க! மன்னிக்கணும்" என்று வாசற்படியிலேயே கைகூப்பிவிட்டு உள்ளே போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டார் அவர்.

அடுத்த வீட்டில் புலவரையும் அவருடைய தம்பியர் பட்டாளத்தையும் வெளியிலேயே நிறுத்திவிட்டு, “சார், நீங்க மட்டும் ஒரு நிமிஷம் உள்ளே வர்றீங்களா?”—என்று கண்ணனை மட்டும் தனியாக உள்ளே கூப்பிட்டார் அந்த வீட்டுத் தலைவர். கண்ணன் மட்டும் உள்ளே சென்றதும், “ஏதாவது வேணும்னு நீங்க மட்டும் தனியா வரப்பிடாதா? இந்தப் புலவரோட கூட வந்திருக்கிற பையன்கள் எல்லாருமே பேட்டை ரவுடிங்க! அதிலே ஒருத்தன் நீல பனியன் போட்டிருக்கானே, அவன் முநதா நாள் சுவரேறிக் குதிச்சு எங்க வீட்டுத் தென்னை மரத்திலே ஏறித் தேங்காய் திருடினவன். இவங்களோட எல்லாம் நீங்க வரலாமா மிஸ்டர் கண்ணன்?” என்று அவனைக் கண்டித்தார்.

ஒரே ஒரு வீட்டில் மட்டும் எதுவும் அட்டி சொல்லாமல், “நாங்க வெல்ஃபேர் அஸோஸியேஷன்லேயும் மெம்பர்தான். இருந்தாலும் உங்களுதிலேயும் சேர்ந்துக்கறேன்” என்று பணத்தை எடுத்துக் கொடுத்தார்கள்.

இன்னொரு வீட்டில் புலவரைச் சுட்டிக் காட்டி, “இவர் அடிக்கடி நோட் புக்கும் கையுமா ஏதாவது வசூலுக்கு வந்துக் கிட்டே இருக்காரே சார்? எதுக்குன்னு குடுக்கிறது?” என்று குறைப்பட்டுக் கொண்டார்கள்.

வேறு சில வீடுகளில் உட்கார வைத்து நிதானமாகப் பேசிப் பழைய அஸோஸியேஷனை விட்டுக் கண்ணன் வெளியேறியிருக்கக் கூடாது என்று அவனுக்கு அறிவுரை கூறி அனுப்பினார்கள்.

“இவர்தானே சுவர்களில் தாரினாலே பெரிது பெரிதாக எழுதற ஆள்?” என்று ஒரு தினுசாகச் சிரித்தபடி புலவரைக் காட்டிச் சிலர் கேட்டபோது கண்ணனுக்கு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போல இருந்தது.

“பாகவதர் மாதிரிப் பெரியவங்களெல்லாம் இருக்கிறது நம்ம காலனிக்கே பெருமை சார்! நீங்க சொல்ற அஸோஸி

யேஷன்ல அவரும் இருக்காரில்லே...?'' என்று கேட்டுவிட்டு அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்த சிலரிடம், ''இல்லே சார்! இது வேற புதுச் சங்கம். இதுக்கு நான் பிரஸிடெண்ட். இவர் செகரெட்டரி'' என்று கண்ணன் பதில் கூறியதும், ''அப்பிடியா? வீ ஆர் நாட் இண்ட்ரஸ்ட்டட்'' என்று கையை விரித்தார்கள் பலர்.

மிகக் குறைந்த காலத்திற்குள்ளேயே பாகவதர், அம்மிணியம்மாள் இருவரும் காலனிக்குள் மிகவும் மரியாதைக்குரியவர்களாகி இருப்பது கண்ணனுக்கே தெரிந்தது. உண்மை விளம்பியின் கட்டுரைகளோ, புலவரின் பிரசாரமோ யாரையுமே பாதித்திருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் பாகவதர், அம்மிணியம்மாள் ஆகியோருடன் இயங்கும் பழைய வெல்ஃபேர் அஸோஸியேஷனையே கொண்டாடினார்கள். சிலர் கொஞ்சம் துணிச்சலாகவே, ''இந்தக் காலனிக்கு ரெண்டு சங்கம் எதுக்கு சார்? இருக்கிற நானூறு ஐந்நூறு வீடுகளும் ஒத்துமையா ஒரே சங்கத்திலே இருந்தாத்தான் ஏதாவது நாலு காரியம் சாதிக்க முடியும்? புதுப் புதுச் சங்கம் எல்லாம் ஒண்ணும் பண்ணமுடியாது. இதெல்லாம் வீண் வேலே'' என்றே கண்ணனைக் கண்டித்தார்கள்.

கண்ணனை அதுவரை நேரில் பார்த்திராத சில வீடுகளில், இவர்கள் தங்களை யாரென்று அறிமுகப்படுத்திக் கொள்வதற்குள்ளேயே, ''நீலகண்டன் செகரட்டரியா வந்தப்புறம் காலனி அஸோஸியேஷன் எவ்வளவோ நல்லாச் செயல்படுது. பல நல்ல காரியங்கள் வேகமா நிறை வேறியிருக்கு. பழைய செகரெட்டரி காலத்திலே சந்தா வசூலுக்குத்தான் வருவாங்க...ஒரு வேலேயும் நடக்காது'' என்று ஆரம்பித்து விடுவார்கள். கண்ணனுக்கும், புலவருக் கும் தர்மசங்கடமாகப் போய்த் தாங்கள் யாரென்று சொல்லிக் கொள்ளாமலே அப்படி இடங்களிலிருந்து நைஸாக வெளியேற நேர்ந்தது.

"யாரோ ஒரு ரௌடி சில மாதங்களுக்கு முன்னே எல்லா வீட்டுச் சுவர்லியும் தார்ல எழுதி வம்பு பண்ணினானே; அவனைக் கண்டிச்சீங்களா? இனிமே அதுமாதிரி நடக்காமே உங்க அஸோஸியேஷன் என்ன செய்யப் போறது?" என்று ஆத்திரமாகக் கண்ணனை வினவிய சில வீடுகளில் அவன் புலவரை அறிமுகப்படுத்தாமலேயே திரும்ப வேண்டியதாயிற்று.

"அந்தப் பழைய அஸோஸியேஷன் மாதிரிக் கோயில் குளம்னு மட்டுமே அலையாமே நாங்க அ. அ. க. விலே ரெக்ரியேஷன் கிளப் எல்லாம் ஏற்படுத்தப் போறோம். டேபிள் டென்னிஸ், பாட்மிண்டன், ஃபுட் பால், இன்னும் இண்டோர் கேம்ஸ் அது இதுன்னு யூஸ்ஃபுல்லா இருக்கும்பல" என்று புலவர் ஆரம்பித்ததுமே, "இந்த அவசர வாழ்க்கையிலே கேம்ஸுக்கெல்லாம் எங்கே நேரமிருக்கு?" என்று நைஸாகக் கழற்றிக் கொண்டார்கள் சிலர்.

காலனி முழுவதும் அலைந்துவிட்டுப் பகல் மூன்று மூன்றரை மணிக்குத் திரும்பியபோது மூன்றே மூன்று உறுப்பினர்களை மட்டும்தான் அ. அ. க. வில் சேர்க்க முடிந்திருந்தது. புலவர் கண்ணனிடம் குறைப்பட்டுக் கொண்டார்.

"இந்தக் காசு நம்ம பசங்களுக்கு டீ செலவுக்குக் கூடப் பாத்தாதுங்க."

"என்ன செய்யறது? யாரும் சேர மாட்டேங்கிறாங்களே? உம்ம ரெக்ரியேஷன் கிளப் ஐடியாகூட எடுபடலியே?"

"மாசம் ரெண்டு சினிமா காட்றோம்னு சொல்லிப் பார்க்கலாமா?"

"அதெல்லாம் தியேட்டர்லியே போய்ப் பார்த்துப்பாங்க. போறுக்குறைக்கு டெலிவிஷன் வேற இருக்கு. அதுக்காக உங்க சங்கத்திலே வந்து சேரமாட்டாங்க."

"எப்பிடியாவது அந்த அஸோஸியேஷனைப் பழி வாங்கியே ஆகணுங்க! ஒண்ணும் இல்லேன்னாக் கடைசி

யிலே 'கோயில் திருப்பணியில் ஊழல்! பாகவதர் வகையரு பணத்தில் திருவிளையாடல்'னு கிளப்பலாம்னு பார்க்கிறேன்.''

''வீண் வேலை. பலிக்கும்னு எனக்குத் தோணலை. யாரும் நம்ப மாட்டாங்க.''

''தொடர்ந்து சொல்லிக்கிட்டே இருந்தா எதையும் நம்ப வச்சிடலாம்னு நம்பறவன் நான்.''

''நீர் தொடர்ந்து வசூல் பண்ணிக்கிட்டே இருக்கிற மாதிரிதான் இதுவும் ஆகும்'' என்று கூறிச் சிரித்தான் கண்ணன். வெளிப்படையாக இப்படிப் புலவரைக் கிண்டல் செய்தாலும் கண்ணனுடைய மனத்திற்குள்ளும் பழைய வெல்ஃபேர் அஸோஸியேஷனையும் தன்னை அவமானப் படுத்தியவர்களையும் பழிவாங்க வேண்டும் என்ற முனைப்பே மிகுந்திருந்தது. அதன் காரணமாக அவன் புலவரை ஊக்கப் படுத்தாவிட்டாலும் தளரச் செய்யவில்லை.

பழைய சங்க நிர்வாகிகள் மேல் கணக்கு ஊழல் என்று புலவர் எதைக் கிளப்பினாலும் சரிதான் என்று எண்ணினான் அவன். உள்ளூர ஒரு சந்தேகமும் இருந்தது. புலவரைப் போன்ற பல கணக்குகளில் ஊழல் உள்ள ஒருவர் கிளப்புகிற ஊழல் புகாரை யாராவது நம்புவார்களா என்ற சந்தேகம் அவனுள் இருந்தாலும் அவரைப் பயன்படுத்திக் கொள்ள அவன் தயாராகவே இருந்தான். முதல்தரமான எதிரிகளை ஒழிக்க நாலாந்தரமான சுமாரான ஒரு நண்பன் கூடப் பயன் படலாம் என அவன் நம்பினான். அ. அ. க. பெரிதாக வளர்ந்து பழைய காலனி நலன் நாடுவோர் சங்கத்தை அழிக்க முடியாது என்று இப்போது அவனுக்கே தெளிவாகத் தெரிந்தாலும் தன்னை வெளியேற்றி அவமானப்படுத்திய பழைய சங்கத்தையும், அதன் ஆட்களையும் வெறுக்கும் வெறுப்புடன் கூடிய குரோதம் அவன் மனத்தின் ஆழத்திலே வேரூன்றித் தங்கி இருக்கத்தான் செய்தது.

# 13

ஒரு நாள் காலையில் கண்ணன் அலுவலகம் போன பின் ஒரு மாபெரும் தலைவரின் மறைவை முன்னிட்டுப் பிற்பகல் திடீரென விடுமுறை விட்டுவிட்டார்கள். அவன் எதிர்பாராத விதமாக இரண்டரை மணிக்கே வீடு திரும்ப நேர்ந்து விட்டது. அவன் அவ்வளவு சீக்கிரம் வீடு திரும்புவான் என அவன் மனைவி சுகன்யாவே எதிர்பார்த்திருக்க முடியாது. காரணம் வழக்கமாக அலுவலக நாட்களில் அவன் சாதாரணமாக மாலை ஆறரை-ஏழு மணி சுமாருக்குத்தான் வீடு திரும்ப முடியும்.

திடீரெனக் காலமாகிவிட்ட மாபெரும் தலைவர் ஒருவரின் பிரிவால் அறிவிக்கப்பட்ட திடீர் விடுமுறை அன்று அவனைப் பிற்பகலிலேயே வீடு திரும்பும்படி செய்திருந்தது.

ஆனால் அப்போது சுகன்யாவோ குழந்தை கலாவோ வீட்டில் இல்லை. வீடு பூட்டியிருந்தது. குழந்தை கலா படிக்கும் பள்ளிக்கூடம் 'ஷிப்ட்' முறையில் நடப்பது. காலை 8 மணி முதல் 12 மணி வரை ஒரு ஷிப்ட். பின்பு 2 முதல் 6 வரை ஒரு ஷிப்ட். அதில் கலா முதல் ஷிப்டில் படிப்பதால் அவளும் இதற்குள் வீடு திரும்பியிருக்க வேண்டும். இருந்தும் மனைவியும் குழந்தையும் எங்கே போயிருப்பார்கள் என்று அவனுக்குத் திகைப்பாயிருந்தது. ஏதாவது கடைக்குப் போயிருக்கலாம் என்று எண்ணிக்கொண்டு வீட்டு வாசலில் தயங்கி நின்றான். தெருவில் பால் பூத்திலிருந்து வீடுகளுக்குப் பால் கவர்களை வாங்கிக்கொண்டு போய்க் கொடுக்கும் வேலைக்காரக் கிழவி ஒருத்தி தற்செயலாக எதிர்ப்பட்டாள்.

அம்மிணி அம்மாள் வீட்டில் போய்ப் பால் கவர்களைக் கொடுத்துவிட்டு வெளியே வந்த அந்த வேலைக்காரக் கிழவி, "உங்க வீட்டு அம்மா உள்ளே குழந்தையோட உட்கார்ந்து வீடியோ பார்த்துக்கிட்டிருக்காங்க... நீங்க வந்திட்டீங்கன்னு

சொல்லிக் கூப்பிடட்டுமா? ' என்று கண்ணனருகே வந்து வினவினுள்.

கண்ணனுக்கு இதைக் கேட்டு ஓரளவு அதிர்ச்சியாகவும், வியப்பாகவும் இருந்தது. தன் மனைவி குழந்தையுடன் அம்மிணியம்மாள் வீட்டில் அமர்ந்து வீடியோ பார்த்துக் கொண்டிருக்க முடியும் என்று அவன் கற்பனையில் கூட நினைக்கவில்லை. சில சமயங்களில் தன் மனைவியும், குழந்தையும் பக்கத்து வீட்டாரோடு தன்னைப் போல் அல்லாமல் சுமுகமாகப் பழகக் கூடும் என்ற எண்ணம் அவனுள் ஏற்பட்டிருந்தாலும் தான் காலனி அஸோஸியேஷனில் இருந்து வெளியேற்றப்பட்டபின் இந்த நிலைமை மாறியிருக்கும் என்று கண்ணன் நம்பினுன். அவ்வளவேன்? அவனே தன் மனைவி சுகன்யாவிடம் பகிரங்கமாக எச்சரிக்கக்கூட எச்சரித்திருந்தான். "இதுவரை எப்படியோ—இனிமேல் நீ இரண்டு பக்கத்து வீட்டாரோடும் பழகுவதில் அர்த்தமே இல்லை. இவர்கள் இரண்டு பேருமாகச் சேர்ந்து என்னை நான் வளர்த்து உருவாக்கிய அஸோஸியேஷனிலிருந்தே நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்து வெளியேற்றி விட்டார்கள். இனி இவர்களோடு நீ சகஜ உறவு வைத்துக் கொள்வது என்பது என் ஜன்ம விரோதிகளுடன் வலுவில் நீ பழகுவது போல் தான். ஜாக்கிரதை."

"உங்களுக்காக நாங்க பேச்சு வார்த்தையை முறிச்சுக்கணுமா என்ன?" என்றுகூடச் சுகன்யா அப்போது அவனைக் கேட்டிருந்தாள். அவள் அப்படிக் கேட்டது அவனுக்குக் கடுங்கோபத்தை உண்டாக்கி விட்டது.

"புருஷனுக்கு அவமானத்தை உண்டாக்கிவிடறவங்கள்ளாம் யாரோ அவங்களோடு பழகறதுதான் உனக்கு மகிழ்ச்சின்னு நீ பேச்சு வார்த்தையை முறிச்சுக்காமப் பழகலாம்" என்று அப்போது மனைவியிடம் கடுமையாகப் பதில் கூறியிருந்தான் கண்ணன். இவ்வளவு கடுமையாகத் தான் எச்சரித்திருந்ததால் அவள் இனிமேல் அக்கம்பக்கத்தாரோடு

கவனமாகப் பழகுவாள் என அவன் எதிர்பார்த்திருந்தான். ஆனால் அவள் எப்போதும் போல்தான் இருக்கிறாள் என்பது இன்று அவனுக்கே நிதர்சனமாகப் புரிந்து விட்டது. அவனுள் ஆத்திரம் மூண்டது.

''உங்க வீட்டுக்காரர் வாசலில் வந்து காத்திருக்கிறாரம்மா'' என்று அந்த வேலைக்காரி போய்ச் சொல்லியிருந்ததாலோ என்னவோ சிறிது நேரத்தில் சுகன்யா குழந்தை கலாவுடன் பக்கத்து வீட்டிலிருந்து வெளியேறி வந்தாள்.

''ரொம்ப நேரமா வெயிட் பண்றீங்களா? நீங்க இவ்வளவு சீக்கிரம் வருவீங்கன்னு நான் எதிர்பார்க்கல்லே?''

''எத்தனை நாளா இந்தக் குலாவல்?''

''உள்ளே வந்து பேசுங்க... தெருவிலே ஏன் சத்தம் போடணும்?''

''நடுத் தெருவிலே கூடச் சத்தம் போடுவேன். அவங்க வீட்டிலே வந்துகூடக் கூப்பாடு போடுவேன்! எனக்கென்ன பயமா?''

தன் கணவன் எதற்காக இப்படி வெறி கொண்டவன் போல் கத்துகிறான் என்று அவளுக்குப் புரியவில்லை. முன்பெல்லாம் காம்பவுண்டுச் சுவர்கள் இல்லாததால் காதும் காதும் வைத்தாற் போல் பின்பக்கமாகப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தாள் அவள். காம்பவுண்டுச் சுவர் எடுத்துத் தடுத்த பிறகு அது முடியாமல் போய்விட்டது. பகலில் வீட்டு வேலைகள் எல்லாம் முடிந்தபின் பொழுது போக வேண்டும் என்று இந்தப் பக்கம் பாகவதர் வீட்டிலோ அந்தப் பக்கம் அம்மிணி அம்மாள் வீட்டிலோ பேசப் போனால் கூடாதென்று அதற்குத் தடை உத்தரவு, தடுப்புக் காவல் சட்டம் எல்லாம் போட்டால் என்ன செய்வது? இருபத்து நாலு மணி நேரமும் சிறை வைத்தாற் போலக் குழந்தையும் தானுமாக வீட்டிலேயே அடைந்து கிடக்கவா முடியும்? அப்படி என்ன அக்கம்பக்கத்து வீட்டார் இவர் தின்கிற

சோற்றிலா மண்ணை அள்ளிப் போட்டு விட்டார்கள்? ஏதோ விரோதம், அஸோஸியேஷன் சண்டை இதெல்லாம் இவர் மட்டில் சரி. எனக்கென்ன வந்தது? நான் சகஜமாகப் பழகிக் கொண்டிருக்கிறவள். ஏன் முகத்தை முறித்துக் கொள்ள வேண்டும்?' என்று எண்ணினாள் சுகன்யா.

பகைமையும் வெறுப்பும் மனிதனை எவ்வளவு கொடிய மிருகமாக மாற்றிவிட முடியும் என்பதற்கு உதாரணமாக அன்று நடந்து கொண்டான் கண்ணன். வேண்டுமென்றே அன்று மனைவியைச் சண்டைக்கு இழுத்தான் அவன்.

"இப்படிச் செய்யறதும் புருஷனுக்குத் தெரியாமச் சோரம் போறதும் ஒண்ணுதான்! சோரம் போறதுக்குத் தலைவை முறையிலே விலை பேசற வீட்டிலே இருக்கிற ஆளுங்களோட பழகினா வேற என்ன புத்தி வரும்?"

"நாக்கை அளந்து பேசுங்க. வாயிலே வந்ததைப் பேசாதீங்க."

"மான ரோஷம் இல்லாத ஜன்மங்களுக்கு என்ன பேசினாலும் உறைக்கப் போறதில்லே. எத்தனை தரம் கண்டிச்சாலும் புத்தி வரப் போறதில்லே. பன்றியோட சேர்ந்த கன்றும் மலம் தின்னும்னு பழமொழியே இருக்கு! தெரியுமா?"

"இதா பாருங்க...என்னைத் திட்டறத்துக்கும் வையிறத்துக்கும் வேணா உங்களுக்கு உரிமை இருக்கு. அநாவசியமா அடுத்தவங்களைத் திட்டறதோ தாறுமாறாப் பேசறதோ கொஞ்சங்கூட நல்லா இல்லே."

"ஆமாம்! பெரிய படிதாண்டாப் பத்தினிங்க பாரு...நான் பேசறதைக் கேட்டு அப்பிடியே நாந்துக்கிட்டுச் செத்துறப் போறாங்க..."

"அவங்கவங்க மனசறிய ஒழுங்கா இருந்தாப் போறும். இன்னொருத்தர் மெச்சறதுக்காக வேஷம் போடணுமா என்ன?"

"யாரை வேஷம் போடுறுங்கன்னு சொல்றே?"

"............................"

"என்னைத்தானே சொன்னே?"

"பொதுவாச் சொன்னேன்! உங்களுக்கும் பொருந்தும்னு எடுத்துக்குங்களேன்."

கண்ணன் இரையெடுக்கப் பசித்திருந்த புலிபோல் அவள் மீது பாய்ந்தான். சரமாரியாக அடிகள் விழுந்தன. தடுப்பதற்காகக் குறுக்கிட்ட குழந்தை கலாவுக்கும் அடிகள் விழுந்தன. ஒரே கூப்பாடு. குழந்தை அலறியது.

"அடிக்கிறதை நிறுத்துங்க மிஸ்டர் கண்ணன்! இது உங்களுக்கே நல்லா இருக்கா? படிச்சு நாகரிகமானவங்க இப்படியா நடந்துக்கறது?"

திரும்பினால் வாயிற்படியில் அம்மிணி அம்மாளும் அவள் மகள் நந்தினியும் நின்று கொண்டிருந்தார்கள். கண்ணனுக்கு எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்த்தது போல் ஆயிற்று.

"நீங்க போகலாம். உங்களை யாரும் இங்கே அட்வைஸ் பண்ணக் கூப்பிடலே...இது காலனி வெல்ஃபேர் அஸோஸியேஷன் இல்லே...என் வீடு."

"உங்க வீடாயிருக்கலாம்! ஆனால் அதுக்காக நீங்கள் ஆட்களை அடிச்சுக் கொல்றதைப் பார்த்துக்கிட்டு அக்கம் பக்கத்தாரும் சும்மா இருக்க முடியாது."

"சும்மா இருக்காமெ டொனேஷனை அள்ளிக் கொடுத்து விலைக்கு வாங்கிடறதுக்கு இது காலனி அஸோஸியேஷன் இல்லே மேடம்! என் வீட்டிலே நான் நெனைச்சதைப் பண்ணுவேன்."

"நிங்களோட பார்யை ஒரு தப்பும் பண்ணலே. நான் தான் வீடியோப்பார்க்க அவளைக் கூப்பிட்டேன். அவளையோ குழந்தையையோ தயவு செய்து அடிக்காதீங்க..."

"இது கௌரவமான குடும்பம். தப்புப் பண்றவங்களைத் தண்டிச்சுத் திருத்தறதுதான் இந்த மாதிரி மானமுள்ள குடும்பங்களில் வழக்கம். உங்க வீடு மாத்ரி மான ரோஷம் எல்லாம் வித்து முதல் பண்றவங்க எப்பிடி வேணுமானு இருக்கலாம். நாங்க அப்படி இருக்க முடியாதே?"

இதைக் கேட்டு அம்மிணியம்மாள் கோபப்படவில்லை யானாலும் கூட இருந்த அவளது மகள் நந்தினி கடுங் கோபத் தோடு, "மிஸ்டர்! கொஞ்சம் நாக்கை அடக்கிப் பேசுங்க! சுகன்யா அக்காவுக்காக உங்களுக்கும் மரியாதை குடுத்துத் தொலைக்க வேண்டியிருக்கு. இல்லாட்டி நடக்கறதே வேறே" —என்று பதில் கொடுத்தாள்.

கண்ணன் சீறினன். அம்மிணி அம்மாள் தன் மகளின் வாயைப் பொத்தித் தடுக்க முயன்றாள்.

"ஐ ஸே கெட் அவுட். போங்க வெளியிலே...உங்களை இங்க யாரும் கூப்பிடலே"—என்று அவர்கள் முகத்தி லடித்த மாதிரி வாயிற் கதவை அறைந்து சாத்தினன் கண்ணன்.

தன் மேல் பாய்ந்த கோபம் வீடு தேடித் தன்னைக் காப் பாற்றும் நல்லெண்ணத்தோடு வந்தவர்கள் மேல் திரும்பியது கண்டு சுகன்யா வருத்தப்பட்டாள். தனிப்பட்ட முறையில் ஏங்கல் தாங்கலில் தனக்கு எத்தனையோ உதவிகள் செய்திருக்கக் கூடிய அம்மிணி அம்மாளையும் நந்தினியையும் வெளியே போகச் சொல்லிக் கணவன் கதவை அடைத்தது கண்டு அவள் பொறுமை இழந்தாள்.

"என்னைத் திட்டுங்க, அடியுங்க, உதைங்க...ஏத்துக்கி றேன். வீடு தேடிப் படியேறி வந்த அவங்களை ஏன் கன்னு பின்னுன்னு பேசினீங்க? இது உங்களுக்கே நல்லா இருக்கா?"

"அவங்க என்னடீ அவங்க? இந்த மாதிரிப் பொழைப்பு நடத்தற ஜன்மங்களுக்கு மரியாதை ஒரு கேடா?"

“எந்த மாதிரிப் பொழைப்பு நடத்தருங்க? உங்களுக்கு அவங்களைப் பத்தி என்ன தெரியும்? எவனோ பொறுமைக் காரன் சொன்னதை நம்பி நாக்கிலே நரம்பில்லாமப் பேசாதீங்க... அவங்க அளவு தாராள மனசு யாருக்கும் கெடையாது...”

“ஆங்... தாராளம்...... பெரிய தாராளம்தாண்டா... ஏன்னு எந்த ஆம்பிளை வந்தாலும் பணத்தை வாங்கிக்கிட்டு ரொம்பத் தாராளமா...”

வாயிற் கதவை யாரோ பலமாகத் தட்டினார்கள். கண்ணன் திறந்தால் நாகசாமி பாகவதர் நின்றுகொண்டிருந் தார். கதவு திறக்கப்பட்டதும் அவன் ‘வாங்க’ என்று சொல்லாமலிருந்தும் கூட அவராகவே உள்ளே வந்தார். அவராகவே ஆரம்பித்தார்:

“கண்ணன்! இதென்ன இப்பிடித் தெருவிலே போறவங்க வர்றவங்கள்ளாம் உங்க வீட்டு வாசல்லே கூட்டமா நின்னு வேடிக்கை பார்க்கிற மாதிரிப் பண்ணிட்டீங்க? இதெல்லாம் என்ன?”

“உங்களை யாரு தூது அனுப்பிச்சாங்க? அந்த மலையாளத்துப் பொம்பிளை தான் அனுப்பிச்சாளா? நீங்க யாரு என் வீட்டு விஷயத்துலே வந்து தலையிடறதுக்கு?”

“நியாயமான கேள்விதான் கண்ணன்! ஆனா நீங்க என்னை விரோதியா நெனைக்கிற அளவு நான் உங்களை இன்னும் என் விரோதியா நெனைக்கலே. அதுனாலே உங்களைச் சமாதானப்படுத்த வந்திருக்கேன்னுதான் வச்சுக்குங்களேன்.”

“இங்கே உங்க சமாதானத்தை யாரும் தேடலே. நீங்க உங்க வேலையைப் பார்த்துக்கிட்டுப் போகலாம்.”

“நீங்க இப்படிப் பேசறதுனாலே மனசு வருத்தப்பட்டு உடனே வெளியேறிப் போயிடறவன் நான் இல்லே. இதோ

பாருங்க மிஸ்டர் கண்ணன்! ஒருத்தர் நல்லது சொல்றதுக்காகத் தேடிவர்றப்போ மத்தவங்க வெத்தலை பாக்கு வச்சு அழைச்சுத்தான் வரணும்னு அவசியமில்லே. நீங்க அழைக்காமலே நான் தேடிவந்து உங்களுக்கு நாலு நல்லதைச் சொல்லலாம். நீங்க விரும்பாட்டாலும் கூடச் சொல்லலாம். இதிலே நான் மான அவமானம் பார்க்கிறவன் இல்லே''

''அடுத்தவங்களுக்கு நல்லது சொல்றதுக்கோ செய்யறதுக்கோ முதலில் உங்களுக்கு ஒரு யோக்கியதை வேணும் பாகவதர்வாள்!''

''மிஸ்டர் கண்ணன்! நீங்க இதைவிடக் கடுமையா என்னை விமர்சிச்சாலும் நான் திரும்பிப் போயிட மாட்டேன். கவலைப்படாதீங்கோ. யோக்யதை, ஒழுக்கம், நன்னடத்தை இதெல்லாம் இன்னொருத்தர் மெச்சறதுக்காகவோ இன்னொருத்தர் திருப்திக்காகவோ கடைப்பிடிக்கிற வஷயங்கள் இல்லே. நம்ம திருப்திக்காக நாமே மனப்பூர்வமாகக் கவனித்துக் கொள்ள வேண்டிய விஷயங்கள்.''

''அதான் தெரியுதே! நீங்க எல்லாத்தையும் உங்க திருப்திப்படிதான் செய்துக்கிறீங்க'' என்று கூறிவிட்டு விஷமத்தனமாகச் சிரித்தான் கண்ணன்.

பாகவதர் அதைக் கேட்டு எதுவுமே பாதிக்கப்படவில்லை.

''மிஸ்டர் கண்ணன்! உண்மையில் நமக்கிடையே எந்த விரோதமும் இல்லை. நீங்களாகக் கற்பித்துக் கொண்ட கற்பனை விரோதங்களாலே வீணுக்குச் சிரமப்படுகிறீர்கள்! ஒரு மனிதனைப் போதுமான அளவு அழுகச் செய்வதற்கு அவன் மனத்தில் தேங்கும் கற்பனை விரோதங்களும், குரோதங்களுமே போதுமானவை. இதற்கு உங்கள் மனைவியும், குழந்தையும் என்ன செய்வார்கள்? பாவம்! அவர்களை ஏன் கஷ்டப்படுத்துகிறீர்கள்? எங்கள் மேலுள்ள விரோதனமப்பான்மையால் சுகன்யாவையும், குழந்தை கலாவையும்

சிரமப்படுத்தாதீர்கள். அதைச் சொல்லிவிட்டுப் போகத்தான் இப்போது வந்தேன்.''

''இந்த பிலாஸபியை எல்லாம் ஏதாச்சும் கதையிலே சொல்லுங்க. ஜனங்க கைதட்டுவாங்க.''

''கதையிலும் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறேன். வாழ்க்கைக்குப் பயன்படாத எதையும் கதையில் நான் சொல்லுவதில்லை. என்னைப் பொறுத்தவரை நல்லதை எங்கேயும், எதிலும், யாரிடமும், எப்போதும் சொல்றதுலே தப்பில்லேன்னு நினைக்கிறவன் நான்.''

''அப்படி நெனைச்சுத்தான் காலனி அஸோஸியேஷன்லே ருந்து என்னை வெளியேத்தச் சதி பண்ணினீங்கல்லே?''

''வீண் கற்பனை! அஸோஸியேஷன் மெம்பர்ஸ் உங்க மேலே நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்தாங்க. நீங்க வெளியேறினீங்க. அப்பக்கூட உங்களை வெளியேத்தக் கூடாதுன்னு நானும் அந்தம்மாளும் முடிஞ்சவரை வாதாடிப் பார்த்தோம். யாரும் கேட்கலே. யானை தன் தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுக்கிட்ட மாதிரி நீங்களே உங்க எதிர் காலத்தைக் கெடுத்துக்கிட்டீங்க மிஸ்டர் கண்ணன். எங்களாலே எதுவும் நடக்கலே!''

''இதெல்லாம் சும்மாக் கதை விடறீங்க, உங்களைப் பத்தி நான் ரொம்ப நல்லாவே தெரிஞ்சுக்கிட்டிருக்கேன்.''

''நிச்சயமா இல்லே மிஸ்டர் கண்ணன்! 'துாஷணம் ஞான ஹீனம்' பாங்க. துவேஷம் அறிவைக் கெடுத்துடறது. நல்லது கெட்டது பகுத்தறிய முடியாத துவேஷத்தாலே யாரையும், எதையும் ஒருத்தராலே சரியா அறிய முடியாது. ஆனா எனக்கு நம்பிக்கை இருக்கு. உங்க மனசிலே தேங்கிப் போயிருக்கிற துவேஷம் சிறிது வடிஞ்சு விலகிப் போறப்போ நீங்க சரியா என்னைப் புரிஞ்சுப்பீங்க. அப்போ நான் யார் எப்படிப்பட்டவன்னு சரியா உங்களாலே கவனிச்சுப் பார்க்க

முடியும். அதுவரை நான் உங்களைப் பார்க்கலே. பேசலே. வரேன்.''

பாகவதர் அவன் வெளியே போகச் சொல்லிக் கூப்பாடு போடுமுன் தானாகவே வெளியேறிச் சென்று விட்டார்.

அன்று மாலையில் மகிழ்மாறன் கண்ணனைத் தேடி வந்து மறுபடி பாகவதரையும், அம்மிணியம்மாளையும் பற்றி ஒரு வண்டி புகார்களை அளந்து விட்டுப் போனார். லேசாகச் சிந்திக்க ஆரம்பித்திருந்த கண்ணனுடைய மனம் எனும் வேதாளம் மறுபடி முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது. அங்கு ஏற்கெனவே தேங்கி நாற ஆரம்பித்திருந்த துவேஷம் என்ற பழைய வெள்ளம் வடியாததோடு புதிதாகவும் வெறுப்பு ஊறித் தேங்க ஆரம்பித்திருந்தது.

# 14

கண்ணனுக்கு அது ஒரு ஃபோபியா ஆகிவிட்டது. அம்மிணி அம்மாளையும் பாகவதரையும் பதிலுக்கு அவமானப் படுத்திவிட அவன் முயன்ற எந்த வகை முயற்சியுமே வெற்றி பெறவில்லை. எல்லாம் தோல்விதான்.

அம்மிணி அம்மாள் லைசென்ஸ் இல்லாமல் இரட்டை நாய்கள் வளர்ப்பதாகவும் அவை போடும் சத்தத்தில் பக்கத்து வீட்டுக்காரனாகிய தான் இராப் பகல் தூக்கமன்றி அவஸ்தைப் படுவதாகவும், அந்த நாய்கள் தான் உட்படத் தெருவில் போவோர் வருவோரை எல்லாம் கடிக்க முற்படு தாகவும் அவன் எழுதிய புகாரை யாரும் பொருட்படுத்தவே இல்லை. நீண்ட நாட்களுக்குப்பின் அவன் புகாரில் உண் மையில்லை எனக் கூறி நாய்களுக்கு லைசென்ஸ் பெறப்பட்டி ருப்பது— அவை கட்டிப் போடப்பட்டிருப்பது முதலிய விவரங்களைத் தெரிவித்து ஒரு பதில் மட்டும் கார்ப்பரேஷன் ஹெல்த் டிவிஷனிலிருந்து அவனுக்கு வந்தது. ஆகவே

அந்த முயற்சியும் பலிக்கவில்லை. கண்ணனுக்குக் கடைசியில் ஏமாற்றம் தான் மிஞ்சியது.

சாதாரணமாக வெறும் நாட்டியம், துணை நடிகை என்ற நிலைகளிலிருந்து அம்மிணி அம்மாளின் பெண்கள் எல்லாருக்குமே கதாநாயகி அந்தஸ்து வந்து லகரக் கணக்கில் பணம் குவிய ஆரம்பித்திருந்தது. அடையாறிலும், போயஸ் கார்டனிலும் வேறு இரண்டு பெரிய பங்களாக்கள் கட்டிய பின்பும் முதலில் குடியேறிய இந்த ஐயப்பன் நகர் வீடுதான் தனக்கும் பெண்களுக்கும் ராசி என்பதனால் இதிலேயே தொடர்ந்து வசித்து வந்தாள் அம்மிணி அம்மாள். பாகவதருக்கு நிறைய உதவினாள். அவரைத் தன் குடும்பத்துக்கே குரு ஸ்தானத்தில் வைத்துக் கொண்டாடினாள். இஞ்சிக்குடி பாகவதர்தான் அம்மிணி அம்மாளின் குழந்தைகளுக்கு அப்பா மாதிரி என்று குறும்பாகப் புலவர் மகிழ்மாறன், உண்மை விளம்பி போன்ற சில நண்பர்கள் 'ஒரு தினுசாகப்' பொடி வைத்துப் பேசக்கூடச் செய்தார்கள். பாகவதரோ, அம்மிணி அம்மாளோ, அவள் அருமைப் பெண்களோ இதை எல்லாம் பொருட்படுத்தவில்லை. யாராவது கேட்டால் அவளே, 'ஆமாம்! என்னுடைய குழந்தைகளுக்கு அவர் அச்சன் மாதிரின்னே வச்சுக்கலாம். அதாவது ஞான பிதாவாக்கும்'—என்று தைரியமாகப் பதில் சொன்னாள். அதைக் கேட்டுச் சிணுங்கிக் கூசவில்லை.

அவள் பெண்கள் மிகமிக வசீகரமாகவும், கவர்ச்சியாகவும் இருந்ததனால் திரையுலகில் அதிவேகமாக முன்னேறினார்கள். ஒரே ஒருத்தி மட்டும் எப்படியோ 'செக்ஸ் அணுகுண்டு' என்று பெயர் வாங்கிவிட்டாள். இதுபற்றி அம்மிணி அம்மாளை யாரோ கேட்டபோது, "எல்லாம் இந்தத் தமிழ்ப் பத்திரிகைக்காரன்மார் வச்ச பேருதானே? இவங்க மன விகாரத்தை இப்பிடிப் பேரு சூட்டினதிலேர்ந்து நீங்க புரிஞ்சுக்கணும். என்டெ மோளை மேல எந்தத் தோஷமும் சொல்றத்துக்கில்லா"—என்று பதில் சொல்லியிருந்தாள்.

ஆனால் இந்த வம்பு இந்தக் குதர்க்க விசாரணை எல்லாம் சிறுபான்மைதான். பணத்திலும் புகழிலும் விரோதங்கள் மெல்ல மெல்லக் கரைந்து வந்தன.

பாகவதருடைய யோசனையின் பேரிலும், தானாகவும் நிறையத்தான தருமங்கள் செய்ததால் அம்மிணி அம்மாளுக்கு நல்ல பெயர்தான் பெரும்பான்மையாக இருந்தது. ஐயப்பன் நகர் காலனியைத் தன் நன்கொடைகள் மூலம் அம்மிணியம்மாள் சுவர்க்கபுரி ஆக்கியிருந்தாள். காலனிவாசிகள் அவளைக் கையெடுத்துக் கும்பிடாத குறையாக மதித்தார்கள். அடையாறு, போயஸ் கார்டன் போன்ற ஆடம்பரப் பகுதிகளில் பிரமாதமாக அரண்மனை போன்ற புதுப் பங்களாக்களைக் கட்டியபின்பும் அம்மிணி அம்மாள் தங்களோடு தங்கள் காலனியிலேயே வசித்தது காலனிவாசிகளுக்குப் பெருமையாயிருந்தது. வீட்டில் பென்ஸ், டயோட்டா என்று ஏ.சி. செய்த கார்கள் இரண்டு மூன்று இருந்தும் அம்மிணி அம்மாள் இன்றும் அதிகாலையில் நெற்றியில் சந்தனக் கீற்றும் சிறிதுகூட நரைக்காமல் கன்னங்கரேலென்று முதுகில் புரளும் ஈரக் கூந்தலும், கையகலச் சரிகைக் கரையுடன் கூடிய நேரியலுமாக நடந்தே காலனிக் கோயிலுக்குச் சென்று வழிபட்டுத் திரும்புவதை மக்கள் அதிசயமாகப் பார்த்தார்கள்.

''பகவான்தான் நம்மைப் போல ஜீவாத்மாக்களுக்கு எஜமானன். நம்ம ஆடம்பரத்தையோ, வசதிகளையோ அவனுக்கு முன்காட்டிச் செருக்கு அடையப்பிடாது. உயர உயரப் பறந்தாலும் ஊர்க் குருவி பருந்தாக முடியாது. ஆலய தரிசனத்துக்குப் போறப்போ பயபக்தியோடு போகணும். எளிமையாப் போகணும். மனசையே தாமரைப் பூவாக்கி அவனோட பாதார விந்தங்களிலே சமர்ப்பிச்சுடணும்கிற மாதிரிப் போய் வழிபடணும்''—என்று பாகவதர் அடிக்கடி தம் கதாகாலட்சேபங்களில் சொல்லும் உபதேசத்தை அம்மிணி அம்மாள் அப்படியே கடைப்பிடித்தாள்.

அம்மிணி அம்மாளின் 'பொன் குன்னம்' வீட்டில் பாகவதருக்குத் தனி மரியாதை. அவர் உள்ளே நுழைந்து விட்டால் வேலைக்காரர்கள் முதல் வீட்டிலிருப்பவர்கள் வரை, "அ சாமி வந்திருக்கு"—என்று பவ்யமாக ஒருவருக்கொருவர் அறிவித்துக் கொள்வார்கள். சாமிக்கு அத்தனை மரியாதை அந்த வீட்டில். ஒரு பிரபல மலையாள வாரப் பத்திரிகை 'என்டெ அயல்கார்' (எனது பக்கத்து வீட்டுக்காரர்) என்ற தலைப்பில் சினிமா நட்சத்திரங்கள், முக்கியக் கலைஞர்கள், பிரமுகர்களுடைய பேட்டிகளை வெளியிட்டு வந்தது. அவர்கள் பக்கத்து வீட்டுக்காரர்களையும் அவர்களையும் தனித் தனியே பேட்டி காண்பது ரசமாயிருந்தது.

இதே வரிசையில் செக்ஸ் அணுகுண்டு நந்தினியின் பேட்டியும் வந்தது. இந்த மலையாளப் பத்திரிகை மிகவும் தந்திரமாகவும் ஒருவருக்கு ஒருவர் தெரியாமலும் இரு பக்கத்து வீட்டுக்காரர்களிடம் இந்தப் பேட்டிக்கு ஏற்பாடு செய்வது வழக்கம். இப்படிச் செய்வதால் ஒருவர் என்ன சொல்லியிருக்கிறார் என்பது இன்னொருவருக்குத் தெரியாது. அதனால் முற்றிலும எதிர்பாராத அபிப்பிராயங்கள் கிடைப்பது உண்டு.

இந்தப் பத்திரிகை அதன் சென்னை நிருபரிடம் இவ் வேலையை ஒப்படைத்திருந்தது. நிருபர் தனித் தனியே செக்ஸ் அணுகுண்டு நந்தினி, கண்ணன, பாகவதர் ஆகிய மூவரையும் சந்தித்திருந்தார். கண்ணனை வீட்டில் சந்திக்காமல் விவரம் விசாரித்து அலுவலகத்துக்குப் போய்ச் சந்தித்த நிருபர் பெருத்த ஏமாற்றமடைந்தார். கண்ணனுக்குத் தன் பக்கத்து வீட்டுக்காரர்களைப் பற்றி நல்லெண்ணம் இல்லை. திட்டினான். வசைமாரி பொழிந்தான. குறைகளைச் சொன்னான். குற்றங்கள் சாட்டினான். "சாிங்க! நீங்க இப்ப சொன்னதைஎல்லாம் அப்படியே போட்டுக்கலாம் இல்லையா? இதுவரை யாரும் தங்க 'நெய்பரை'ப் பற்றி 'டோங்கா' இப்படிச் சொன்னதில்லை. உங்க இது ரொம்பப் புதுமையாக்

கூட இருக்கும்''—என்று நிருபர் கூறவே, கண்ணனுக்குத் தயக்கம் வந்து விட்டது.

உடனே அதைப் பூசி மெழுகி மறுத்தான். ''நீங்க எதுக்கும் நாளைக்கு வாங்களேன். நான் கொஞ்சம் யோசனை பண்ணி வைக்கறேன்! இப்பச் சொன்னதெல்லாம் ஆஃப் த ரெக்கார்டாக இருக்கட்டும்! நாளைக்குப் பேசலாம்''—என்றான்.

கண்ணனைப் பார்ப்பதற்கு முன்பே நிருபர் மற்றவர்களையும் பார்த்து முடித்திருந்ததைக் கண்ணனிடம் சொல்லவில்லை. இதுவரை இருதரப்பாருமே பரஸ்பரம் ஒருவருக்கொருவர் நற்சான்றிதழ் கொடுத்துப் பாராட்டிக் கொண்ட பக்கத்து வீட்டுக்காரர்களையே சந்தித்துத் தான் அலுத்துச் சலித்துப் போயிருந்ததற்கு மாறாகக் கண்ணனிடம் தன் பக்கத்து வீட்டுக்காரர்களைப் பற்றிக் கொஞ்சம் வித்தியாசமான அபிப்பிராயம் கிடைக்கும் போல் இருக்கவே, நிருபர் அவன் பேட்டியை வாங்குவதில் இன்னொரு முறை அலையக் கூடத் தயாராயிருந்தார். இந்தப் பேட்டி விஷயத்தில் முதலில் பக்கத்து வீட்டாரைப் பற்றி மனத்தில் பட்டதை எல்லாம் பேசிவிட்டாலும் அப்புறம் கண்ணனுக்கே ஒரு சந்தேகம் ஏற்பட்டது. எதற்கும் சினிமா உலகிலும் பத்திரிகை உலகிலும் அறிமுகம் உள்ள நண்பன் உண்மை விளம்பியையும் புலவர் மகிழ்மாறனையும் கலந்து பேசியபின் பேட்டி கொடுப்பது நல்லது என்று இப்போது இரண்டாம் எண்ணமாகக் கண்ணனுக்குத் தோன்றியது.

அலுவலகம் முடிந்ததும் நேரே வடபழநி போய் உண்மை விளம்பியைக் கூட்டிக்கொண்டு வீடு திரும்பிப் புலவருக்குச் சொல்லியனுப்பினான் கண்ணன். அவன் முன்பே நினைத்தது சரியாயிருந்தது. உண்மை விளம்பிக்குச் சரியான கிரிமினல் மூளை. புலவருக்குச் சரியான பொலிடிகல் பிரெய்ன். இரண்டையும் கலந்து யோசித்தபோது தற்காலத்துக்குத் தேவையான பக்கா அறிவு கண்ணனுக்குக் கிடைத்தது.

"இது ரொம்பத் தந்திரமான முயற்சிங்க! அதிகம் பாப்புலரா இருக்கிற பக்கத்து வீட்டுக்காரங்களோட எந்த விதமான பாப்புலாரிட்டியும் இல்லாத உங்களையும் மாட்டி வைக்கிறாங்கன்னு இதிலே ஏதாவது சூழ்ச்சி இருக்கணும்! அதுனாலே நீங்க யோசிச்சு அவங்களை மாட்டி வைக்கிற மாதிரிப் பேட்டியைக் கொண்டு போகணும். அதே சமயத்திலே உங்க பேட்டியைப் படிச்சிட்டு லீகலா அவங்க உங்க மேலே 'டேமேஜ்' கிளெய்ம் அது இதுன்னு போறதுக்கும் பிடி குடுத்துடப்படாது"—என்றான் உண்மை விளம்பி. அவன் குரலில் ஆவேசமே இருந்தது.

"ஆமாங்க! அவரு சொல்றது நூறு விழுக்காடு சரியான கருத்துங்க! அவங்க நம்மைப் பத்தி மோசமான அபிப்ராயம் தான் சொல்லியிருக்கப் போறாங்க. நாம மட்டும் அவங்களை ஏன் விட்டு வைக்கணும்? மானம் போற மாதிரி விளாசித் தள்ளிப்புடணும். நான் தந்திரமான வாக்கியங்களிலே எழுதியே குடுத்துடறேன். அதை அப்படியே எடுத்திட்டுப் போயி, 'இதுதான் பக்கத்து வீட்டுக்காரங்களைப் பத்தி என் அபிப்ராயம்னு' குடுத்திடுங்க"— என்று பேட்டியை எழுதித் தருவதற்கே முன் வந்தார் புலவர்.

கண்ணனுக்கும் அவர்கள் இருவரும் சொல்வதுதான் சரி என்று பட்டது. இதுமாதிரிப் பேட்டி கொடுக்கிற அளவு தான் பெரிய மனிதன் இல்லை என்று அவன் நினைத்தாலும் அவர்களுக்குப் பக்கத்து வீட்டுக்காரனை தன்னைப் பற்றி அவர்கள் மோசமான கருத்துக்களைச் சொல்லியிருப்பார்களே யானால் அதற்குப் பதிலாகவாவது இந்தப் பேட்டி பயன் படட்டும் என்று புலவரையும் நண்பனையும் அதைத் தயாரிக்குமாறு அந்த வேலையை அவர்களிடம் ஒப்படைத்தான். நண்பன் தலையைச் சொறிந்தான்:

"மன்னிக்கணும் கண்ணன்! இதுமாதிரி அசைன்மெண்ட்டுக்கு எனக்குக் கொஞ்சம் ஒரு தினுசான இன்ஸ்பிரேஷன் தேவைப்படும்..."

"அப்படீன்னு...?"

"கொஞ்சம் 'பட்டை' அடிச்சிட்டு உட்கார்ந்தாத்தான் இதெல்லாம் எழுத வரும்."

"அதுக்கென்ன? அதோ அந்தப் பிறையிலே இருக்கு! வேணுங்கற மட்டும் எடுத்து அடிச்சிக்க. புலவர் ரேஷனலிஸ்ட்— அதெல்லாம் அடிக்கமாட்டார்" என்றான் கண்ணன். நண்பன் பிறையைத் தேடிச் சென்றான்.

"ஓஹோ! நீ கூட இதெல்லாம் வீட்டிலேயே வைச்சிருக்கியா?"—என்று கேட்டபடியே பிறையைப் போய்ப் பார்த்துவிட்டு, "அட போப்பா! நான் விபூதிப் பட்டை அடிக்க விபூதி கேட்கிறேன்னு நெனைச்சிட்டியா? கேலிக் கூத்துத் தான்ப்பா...இந்தப் பட்டை அடிச்சா 'ஆஸ்தீக தர்மவர்த்தினிக்கு'த் தான் எழுத முடியும்! உண்மை விளம்பிக்கு எழுத முடியாது. நான் கேட்கிறது வேற பட்டை. ஒரு ஐம்பது ரூபாய் எடு! புலவர் முன்னாடியே எட்கிட்டச் சொல்லிட்டாரு. அவருக்குப் பழக்கம் உண்டாம். 'தேறல் அருந்துதல் பழந்தமிழர் வழக்கம்'னு ஆய்வுக் கட்டுரையே எழுதியிருக்கிறாராம் அவர்."

கண்ணனுக்கு அப்போதுதான் அவர்கள் நெற்றியில் பட்டையடிக்க விபூதி கேட்கவில்லை. பட்டைச் சாராயம் கேட்கிறார்கள் என்று புரிந்தது. கையில் இருந்ததைத் திரட்டி அவர்களுக்கு முப்பது ரூபாய் கொடுத்துத் தொலைக்க வேண்டியிருந்தது.

"நாளைக்குக் காலையில் நீ ஆபீஸ் புறப்படறத்துக்குள்ளே 'ஸ்கிரிப்ட்' உன் கைக்கு வந்து சேரும். பயப்படாதே"— என்று கூறிவிட்டுப் புலவருடன் நண்பன் கிளம்பிப் போனான். தெண்டத்துக்கு முப்பது ரூபாய்க்குச் சாராயம் வாங்கக் காசு கொடுத்தாவது இந்தப் பேட்டியைத் தரவேண்டியது தன்னளவில் அவசியம்தானா என்று கண்ணனுக்கு இப்போது மனத்துக்குள் தோன்றியது. மறுபடி மறுபடி நைப்பாசை காரணமாகப் புதுப் புது வம்பில் தான் சிக்கிக் கொள்

கிரேமோ என்று கூடத் தன்னைப் பற்றியே அவனுக்குச் சந்தேகமாக இருந்தது. ஆனால் பாகவதர் மேலும் அம்மிணி அம்மாள் மீதும் அவனைக் கற்பித்துக் கொண்ட விரோதம் அவனை அவ்வப்போது தூண்டியது. செயற்படச் செய்தது. வேகப்படுத்தி முடுக்கி விட்டுக் கொண்டிருந்தது.

# 15

சொல்லியபடி நண்பன் மறுநாளே கண்ணனைத் தேடி வந்து பேட்டிக்காகத் தயாரித்த கையெழுத்துப் பிரதியைக் கொண்டு வந்து கொடுத்து விட்டான். புலவரும், உண்மை விளம்பியுமாகச் சேர்ந்து பிரமாதமாகப் பொடி வைத்துத் தயாரித்திருந்தார்கள் அதை. கண்ணனே தயாரித்திருந்தால் இவ்வளவு சாமர்த்தியமாகச் செய்திருக்க முடியாது. பட்டைச் சாராயச் செலவுக்கு முப்பது ரூபாய் செலவழித்தாலும் பரவாயில்லை விஷயம் கண்ணன் எதிர் பார்த்ததை விடப் பிரமாதமாக வந்திருந்தது. கண்ணன் அதை இரண்டாவது தடவையாக மறுபடியும் படித்துப் பார்த்தான்.

"அக்கம்பக்கத்தில் இருப்பவர்கள் பற்றிப் பேட்டி கொடுக்கிற அளவு நான் ஒன்றும் அத்தனை பெரிய மனிதன் இல்லை. சர்க்கார் உத்தியோகம் பார்க்கும் ஒரு கௌரவமான குடும்பத்தலைவன். அவ்வளவே. அதோடு தன்மானமுள்ள நல்ல தமிழன்.

நகர வாழ்க்கையில் அக்கம்பக்கத்திலே உள்ளவர்கள், ஒழுக்க சீலர்களா, கௌவரமானவர்களா என்றெல்லாம் சரி பார்த்து அப்புறம் குடியேறுவது சாத்தியமில்லை. யார் வேண்டுமானாலும் உங்கள் பக்கத்து வீட்டுக்காரராக இருக்கலாம். இருக்க முடிகிறது. நம் கௌரவத்தை மட்டுமே நாம் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

எங்கே எந்த வீட்டில் விபசாரம் நடக்கும், யார் எங்கே கள்ளச் சாராயம் காய்ச்சுவார்கள், யார் எங்கே மஸாஜ் பார்லர் என்ற பெயரில் தசை வியாபாரம் செய்வார்கள் என்றெல்லாம் தெரியாமல் அவற்றிற்கு நடுவே அல்லது அவற்றிற்கு மிகமிக அருகிலேயே ஒரு கௌரவமான குடும்பஸ்தன் குடியேறிவிடும் அபாயம் நகர வாழ்வில் இருக்கிறது. எங்கள் அய்யப்பன் நகர் காலனியில் ஒரு அஸோஸியேஷன் இருக்கிறது. இதன் காரியதரிசியாகக் கொஞ்ச நாள் நான் இருந்தேன். அப்போது இந்தக் காலனிக்குப் பெயர் எதுவும் வைக்கப்படவில்லை. வெறும் ஹவுஸிங் யூனிட் எக்ஸ்டென்ஷன் நெம்பர் 64 என்று மட்டும் தான் இருந்தது. இதற்குக் கற்பின் பெருமையும், நல்லொழுக்கத்தின் சிறப்பையும் வற்புறுத்துகிறாற் போலக் 'கண்ணகி நகர்' என்று பெயர் வைக்கவேண்டும் என்பதாக என் நண்பரும் காலனிவாசியுமான புலவர் மகிழ்மாறன் அபிப்ராயப்பட்டார்.

உடனே நான் அதிர்ச்சியடையத் தக்க விதத்தில் என்னுடைய இரு பக்கத்து அண்டை வீட்டார்களாகிய இஞ்சிக்குடி பாகவதரும், செக்ஸ் அணுகுண்டு நந்தினியின் தாயாகிய அம்மிணி அம்மாவும் அதை ஆட்சேபித்தார்கள். என்னடா கற்பு கண்ணகி ஒழுக்கம் என்கிற மாதிரிப் பெயர்களைக் கேட்டாலே இந்த இருபக்கத்து வீட்டாருமே எரிச்சலடைகிறார்களே என்று நான்கூட ஆச்சரியமும் திகைப்பும் அடைந்தேன். என்னுடைய பக்கத்து வீட்டார்களைப் பற்றி நான் புரிந்து கொண்டு அதிர்ச்சியும், திகைப்பும் அடைய இந்தச் சந்தர்ப்பம் எனக்கு உதவியது என்றுதான் சொல்ல வேண்டும்.

இன்னொரு சமயம் இரவு பன்னிரண்டு மணி இருக்கும். யாரோ என் வீட்டு வாசற்கதவைத் தட்டினார்கள். போய்த் திறந்தால் குடிவெறியோடு தள்ளாடும் ஓர் ஆள் வாயில் புகையும் சிகரெட்டுடன் 'அந்த டான்ஸ் காரிங்க வீடு இது

தானேப்பா?'ன்னு கேட்டுக்கிட்டே உள்ளே நுழையப் பார்த்தான். நான், 'பக்கத்து வீடுதான்! அங்கே போய்க் கதவைத் தட்டு. திறப்பாங்க'ன்னு அனுப்பி வச்சேன். இது மாதிரி வெளியிலே சொல்லவே கூச்சப்பட வேண்டிய பல தர்மசங்கடங்கள் பக்கத்து வீடுகளாலே ஏற்படறதாலேதான் அவங்களை நம்மாலே மறக்கமுடியறதில்லே. செக்ஸ் ஸ்டார்-ரிகார்ட் டான்ஸ்காரிங்கன்னெல்லாம் பேர் வாங்கிடற நடிகைங்க நம்ம வீட்டுப் பக்கத்திலே குடியிருக்கிறதிலே இன்னொரு ஆபத்து என்னன்னா, நீ செக்ஸ் ஸ்டார் ...வீட்டுக்குப் பக்கத்து வீட்டுலேதானே குடியிருக்கே?-ன்னு நாக்கைப் பிடுங்கிட்டுச் சாகிற மாதிரி மத்தவங்க நம்மை விசாரிப்பாங்க.

இன்னொரு சமயம் ஒரு ஞாயிற்றுக்கிழமை ஒரு பட்டுப் புடவைக் கடைக்காரர் என்னைத் தேடி வந்தார். 'சார் இது தானே பாகவதர் வீடு? நிறையப் பட்டுப்புடைவை சரிகை வேஷ்டி எல்லாம் விலைக்கு இருக்குன்னு பாகவதர் வரச் சொன்னாருங்க'-என்றார். கதாகாலட்சேபத்திலே இராமாயண பட்டாபிஷேகம் போன்ற சமயங்களில் கிடைக்கிற பட்டுப் புடைவை, பட்டு வேஷ்டிகளைச் சேர்த்து வைத்து விலைக்கு விற்கிற பாகவதர் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுலே நாம இருக்கோம்னு அப்பத்தான் எனக்குப் புரிஞ்சுது.

நம்ம அக்கம்பக்கத்து வீடுகளிலே இருக்கிறவங்களை விடத் தள்ளி இருக்கிற நல்லவங்க யாரையாவது அண்டை வீட்டாராகப் பெற்றிருக்கக் கூடாதான்னு நான் அடிக்கடி ஏக்கம் அடைவதுண்டு''—

என்று முடிந்திருந்தது கண்ணனின் பேட்டிக் கட்டுரை. வக்கீலிடம் காட்டி இந்தப் பேட்டியைப் படித்துவிட்டுப் பாகவதரோ அம்மிணி அம்மாளோ எந்தச் சட்ட நடவடிக்கையும் எடுக்க வழியில்லை என்பதை உறுதி செய்து கொண்டு விட்டதாக உண்மை விளம்பியும், புலவரும் உறுதி கூறி விட்டுப் போயிருந்தார்கள். பரவாயில்லை! அவர்கள் வாங்கித்

சாப்பிட்ட பட்டை நன்ருகத்தான் வேலே செய்திருக்கிறது. ரொம்பத் தந்திரமாக அக்கம் பக்கத்து வீட்டார் மட்டமான ஆட்கள் என்பதைப் பேட்டியில் சுட்டிக் காட்டி எழுதிவிட்டார்கள். என்ன இருந்தாலும் உண்மை விளம்பி பெரிய கில்லாடிதான் என்று நினேத்து மனத்துக்குள் பாராட்டிக் கொண்டான் கண்ணன். காலனிக்குப் பெயர் சூட்டும்போது அஸோஸியேஷனில் ஏற்பட்ட தகராறை வைத்துப் பாகவதருக்கும் அம்மிணி அம்மாவுக்கும் கற்பில் நம்பிக்கை இல்லே என்பதை நாசூக்காகக் கொண்டு வந்த யோசனே புலவர் மகிழ்மாறனுடையதாக இருக்க வேண்டும் என்று கண்ணனே ஊகித்துக் கொண்டான்.

அவர்கள் 'கண்ணகி நகர்' என்பதற்குப் பதில் 'சாஸ்தா நகர் எக்ஸ்டென்ஷன்' எனப் பெயர் வைக்க விரும்பினுர்கள் என்பதைச் சொல்லியிருந்தால் அவர்களேப் பற்றி நல்லபிப்ராயம் வந்துவிடும் என்று நயமாக அப்பகுதி உண்மைக்கு இருட்டடிப்புச் செய்து 'கண்ணகி நகர் என்ற பெயரை அவர்கள் இருவரும் சேர்ந்து எதிர்த்தார்கள்' என்பதை மட்டும் கூறிய புலவரின் சாமர்த்தியம் கண்ணனுக்கு மிகவும் பிடித்திருந்தது. பாகவதரும், அம்மிணி அம்மாளும் கொடுத்த யோசனையை ஏற்று அதில் சிறிது மாறுதலுடன்தான் 'ஐயப்பன் நகர்' என்ற பெயரே வைக்கப்பட்டது என்ற உண்மையைக் கூடப் புலவர் தந்திரமாக மறைத்திருந்தார். தன்னே அவமானப்படுத்திய இவர்கள் பெயர் பத்திரிகைகளில் நாறட்டும் என்ற ஆத்திரத்தோடு கண்ணன் காத்திருந்தான்.

சொல்லிவிட்டுப் போனபடி பத்திரிகை நிருபர் கண்ணனே மறுபடி தேடி வந்தார். வந்த நிருபருக்குத் தமிழும் மலேயாளமும் நன்ருகத் தெரிந்திருந்தது. கண்ணன் தமிழில் படிக்கப் படிக்க அவர் அதை மலேயாளத்தில் உடனே மொழிபெயர்த்து எழுதிக்கொண்டுவிட்டார்.

“இதுவரை வந்த இந்த சீரிஸ்லியே இதுதான் டாப்பா இருக்கப் போகுதுங்க. எல்லாருமே இதுவரை எங்க நெய்பர் இந்திரன் சந்திரன்னுட்டாங்க. அதனாலே ரொட்டீன் ஆகப் போயிடிச்சுங்க. இப்ப முதமுதலா நீங்க ஒருத்தர்தான் உங்க நெய்பர்ஸைப் பற்றி வாழைப்பழத்திலே ஊசி இறக்கிற மாதிரி நைஸாச் சாடியிருக்கீங்க. அதுனாலே நெறைய ரீடர்ஸ் இதைப் பத்திப் பேசப்போறாங்க. பெரிய காண்ட்ர வர்ஸி வரப்போகுது. தமிழ்ப் பேப்பருங்ககூட இதை மொழி பெயர்த்துப் போட்டாலும் போடுவாங்க”—என்று அவனைப் பாராட்டி விட்டுப் போனார் நிருபர். ‘காண்ட்ரவர்ஸி’ என்றதும் கொஞ்சம் தயக்கமும் பயமும் ஏற்பட்டாலும் அந்தப் பேட்டி பாகவதரையும் அம்மிணி அம்மாவையும் வாசகர்கள் மத்தியில் சின்னாபின்னப் படுத்தி நாற அடிக்கப் போகிறது என்கிற ஒரு குரூர எதிர்பார்த்தலில் அவன் மனம் மகிழ்ந்தது.

இந்தக் குரூர சந்தோஷத்தில் திளைத்திருந்த அவன் அவர்கள் பேட்டியில் தன்னைப் பற்றி என்ன சொல்லியிருக் கிறார்கள் என்பதை நிருபரிடம் விசாரிக்கவும் இல்லை. ஆவலோ பரபரப்போ காட்டவும் இல்லை. நிருபர் அசகாய சூரனாக இருந்ததனால் கண்ணனைப் புகழ்ந்து தள்ளிய வேகத் தில் வேறெதையும் பற்றித் தன்னிடம் அவன் விசாரிக்கிற ஞாபகமே அவனுக்கு எழாதபடி செய்துவிட்டுப் போயிருந் தான்.

அதேசமயம் தன்னைப் பற்றிப் பாகவதரோ, அம்மிணி அம்மாளோ குறை சொல்ல எதுவும் இல்லை என்பதையும் அவன் தனக்குத் தானே நினைவு கூர்ந்தான். “இனவெறியர். கடவுள் நம்பிக்கை இல்லாத ஆள். முசுடு. பழகத் தெரி யாது. காலனி அஸோஸியேஷன் செயலாளராக எதுவுமே செயல்படாமல் சோம்பேறியாகக் காலம் கழித்துவிட்டார். ஆயிரம் ரூபாய் பணம் செலவழித்துக் காலனியில் எல்லார் வீட்டிலும் தாறுமாறாகத் தாரில் எழுதத் தூண்டினார்”—என்று இப்படி ஏதாவது குறைகளை அவர்கள் தன்னைப்பற்றி அடுக்க

முடியுமே ஒழிய, 'கோரக்டர் அஸாஸிநேஷன்' போல எதுவும் செய்ய முடியாது என்ற நம்பிக்கை கண்ணனுக்கு உறுதியாக இருந்தது. தான் அவர்களைப் பற்றிக் கொடுத்திருக்கும் மேட்டியிலோ சட்டப்படி தன் மேல் நடவடிக்கை எடுக்கமுடியாத ஆனால் 'கோரக்டர் அஸாஸிநேஷன்' போலவே தெளிவாகத் தெரியக் கூடிய விஷயங்கள் அடங்கியிருப்பதை அவன்புரிந்து கொண்டுதான் இருந்தான். அதை அவ்வளவு சாதுரியமாகத் தயாரித்த தன் விஷமக்கார நண்பர்களுக்கும் அவர்களுக்கு ஊக்கமளித்திருந்த நாட்டுச் சரக்குக்கும் கூட நன்றிசெலுத்தினான் கண்ணன். 'உண்மை விளம்பி' என்கிற பத்திரிகையேகூட இந்த நாட்டுச் சரக்கின் அபார உற்சாகத்தில்தான் வெளிவந்து கொண்டிருக்கிறது என்கிற பரம இரகசியம் கண்ணனுக்கு இப்போதுதான் புரிய ஆரம்பித்திருந்திருந்தது.

கூடவே இன்னொரு தயக்கமும் இருந்தது. 'இப்படிப்பட்ட செய்திகள் நாட்டில் இப்போதெல்லாம் எந்த அதிர்ச்சியையும் ஆச்சரியத்தையும் உண்டாக்கி யாரையும் பாதிப்பதில்லை. மாறாகச் சர்ச்சைக்கு ஆளாகிறவர்களின் பப்ளிஸிடிதான் அதிகமாகும்'— என்று எப்போதோ பாகவதர் தன்னிடம் கூறியிருந்ததை இன்று மீண்டும் நினைத்தான் கண்ணன். ஒருவகையில் பார்த்தால் இன்றைய மனிதர்களையும், சமூகத்தையும் பற்றிய பாகவதரின் கணிப்புத் துல்லியமானதும் சரியானதும் ஆகும் என்றே அவனுக்குத் தோன்றியது. ஒழுக்கமாயிருக்கிறோம் என்ற சுயதிருப்தி தனிமனிதனுக்கு ஆத்ம சந்தோஷத்தைத் தரலாமே ஒழிய சமூகம் அவனை ஒரு வாட்ச்மேனைப் போலவோ போலீஸ்காரனைப் போலவோ கவனித்துக் கொண்டிருப்பதை விட்டு அதிக காலமாயிற்று. தனக்கு உதவுகிறவர்கள், தன்னை ஆதரிப்பவர்கள், தனக்குப் பயன்படுகிறவர்கள் எப்படி இருந்தாலும் பரவாயில்லை என்று அவர்களை ஏற்றுக் கொண்டு விடுகிற ஃபிளெக்சிபிலிட்டி சமூகத்துக்கு வந்து ரொம்ப நாளாகியிருக்கவேண்டும். அது அம்மிணி அம்மாளின்

ஆரம்ப கால வாழ்வையோ இன்றைய தனி வாழ்வையோ கவனிக்கத் தயாராயில்லை. பொது வாழ்வில் எப்படி நடந்து கொள்கிருள் என்பதை மட்டுமே கவனித்துப் பாஸ் மார்க் போட்டு விடுகிறது. அதேமாதிரித்தான் பாகவதர் விஷயத்திலும் நடக்கிறது. 'அவருக்குக் கிடைக்கிற பட்டுப் புடைவை, சரிகை வேஷ்டிகளைத் தேவைக்கு வைத்துக் கொண்டு மீதியை விற்கிருர். இதிலென்ன தவறு?'—என்றுகூட விவாதம் புரிய முடியும். ஐரோப்பாவிலோ அமெரிக்காவிலோ அம்மிணி அம்மாள் வயதிலும் கட்டு விடாத ஓர் அழகிய முதியவள் அப்படி அழகிய முதியவர் ஒருவரிடம் சபலத்தோடு பழகுவது பெரிய சமூகக் குற்றமாகக் கருதப்படப் போவதில்லை. மனம் பெரிதாகப் பெரிதாகச் சிறிய குற்றங்களைப் பூதக் கண்ணுடி வைத்துப் பெரிசாக்குகிற மனப்பான்மை தானே கரைந்து போய்விடுவது சகஜம் என்கிருர்கள். அப்படியானுல் தனக்கு இன்னும் மனம் விசாலமடையவில்லையா என்ற கேள்வியைத் தனக்குத்தானே கேட்டுக் கொண்டான் கண்ணன். இன்ஞென்றையும் அவனே அநுமானித்துக் கொள்ள முடிந்தது.

இன்றுள்ள நிலையில் அம்மிணி அம்மாளோ அவள் பெண்களோ நினைத்தால் உண்மை விளம்பியை அல்லது மகிழ்மாறனைப் போன்றவர்களை ஒரு விலை பேசி வாங்கிக் கொண்டுவிடமுடியும். கொஞ்சம் சுமாரான விலையே கிடைத்தால் கூட இந்த நண்பர்கள் எல்லாம் விற்றுப் போய்விடச் சம்மதிப் பார்கள் என்பது கண்ணனுக்கே தெரிந்த விஷயம் தான், ஏற்கெனவே உண்மை விளம்பி அம்மிணி அம்மாளின் பெண்களிடம் தேடிப் போய்ப் பணம் கேட்டிருக்கிருன். புலவர் விஷயம் சொல்லவே வேண்டாம், அவர் நன்கொடை என்று கொண்டுபோய் நீட்டுகிற ஏதாவது ஒரு நோட்டில் பத்து ரூபாய் நன்கொடை எழுதி அம்மிணி அம்மாள் கையெழுத்துப் போட்டுவிட்டால் அதையே ஆயிரம் ரூபாயாகத் திருத்திக் கொண்டு மற்றவர்களிடம் கறக்கப் போய்விடுவார். இருந்தும் இவர்களை நம்பித் தான் ஒரு

போரில் இறங்கியிருப்பது அவனுக்கே நினைக்க நினைக்க வேடிக்கையாகத்தான் இருந்தது. ஒழுக்கமுள்ளவர்கள் அடுத்தவர்கள் ஒழுக்கம் பற்றிக் கவனிப்பதே இல்லை. அடுத்தவர்களின் ஒழுக்கத்தை அணு அணுவாகக் கவனித்து அதை விமரிசிப்பதையே பிழைப்பாகக் கொண்டிருப்பவர்கள் அதிலேயே தங்கள் சொந்த ஒழுக்கத்தைக் கோட்டைவிட்டு விடுகிறார்களோ என்றுகூட யோசித்தான் கண்ணன். மகிழ் மாறனுக்கும், உண்மை விளம்பிக்கும் பட்டை அடித்தால் தான் மோசமாக எழுத 'மூட்' வருகிறது. சுய நினைவை மறக்காமல் மோசமாக எழுத வரமாட்டேனென்கிறது. அம்மிணி அம்மாள்—பாகவதர் ஆகியவர்களுடைய ஒழுக்கத்தைப் பற்றி விமரிசிக்க இவர்களுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது என்றுகூட யோசித்தான் கண்ணன். மனம் போன போக்கில் அவனுடைய கட்டுக்கே அடங்காமல் அவனுடைய சிந்தனை எங்கெங்கோ போயிற்று.

# 16

சில நாட்களுக்குப் பின் தபாலில் அவனுக்கு அந்த மலையாளப் பத்திரிகை வந்தது. கட்டுக்கடங்காத ஆவலுடன் காலனியிலிருந்த மலையாளமும் தமிழும் அறிந்த நண்பர் ஒருவரிடம் அதை எடுத்துச்சென்று தனக்குப் படித்துக்காண்பிக்கச் சொன்னான். புரியாததை மொழிபெயர்க்கச் சொன்னான். படிக்குமுன் அதில் தன் மனைவியின் படத்தையும் பக்கத்து வீட்டு செக்ஸ் ராணியின் படத்தையும் சேர்த்துப் பார்த்ததில் அவனுக்கு ஒரே அதிர்ச்சி. 'பக்கத்து வீட்டைப் பற்றிக் கண்ணனின் திடுக்கிடும் தகவல்கள். 'குடிவெறியோடு நள்ளிரவில் வந்து கதவைத் தட்டினார்களாம்.' 'பட்டுப் புடைவை விற்கும் பாகவதர்'—என்கிற மாதிரித் தலைப்புக்களுடன் அவன் கூறிய விவரங்களோடு அப்படியே இருந்தன. எதையும் மாற்றவில்லை. சொல்லியதைக் குறைக்கவோ குலைக்கவோ கூட இல்லை.

ஆனால் கண்ணனைப் பற்றி அவனது இரு பக்கத்து வீட்டுக்காரர்களும் கூறிய அபிப்ராயங்களும் சேர்ந்தே பிரசுரமாகியிருந்தன. அம்மிணி அம்மாளின் பெண் ஸெக்ஸ் நந்தினி சொல்லியிருந்தாள்:

'பக்கத்து வீட்டில் ஆண்கள் யாரையும் நான் பார்த்துப் பழக நேர்ந்ததே இல்லை. பக்கத்து வீடு என்றாலே சுகன்யா அக்கா நினைவுதான் எனக்கு வரும். அவங்க குழந்தை கலா ரொம்ப ஸ்வீட் கேர்ள். சுகன்யா அக்கா மாதிரிப் பொறுமையே உருவமான ஹவுஸ் வொய்ஃப் மிகவும் அபூர்வமானவங்க என்கிறது என் அபிப்ராயம். அந்த அக்காவோட சிரிச்சமுகத்தை என்னாலே மறக்கவே முடியாது. அவங்க கணவர் ரொம்ப முன் கோபக்காரராம். ஒரு 'ஸினிக்'னு அவங்க சொல்றதிலே இருந்து நான் அந்த ஆளைப்பற்றிப் புரிஞ்சுக்க முடிஞ்சது. பாவம்! அக்காவும் அவங்க குழந்தையும் தங்க கணவனுக்குப் பயந்து பயந்து புருஷன் ஆபீஸுக்குப் போயிருக்கறப்ப, வெளியிலே போயிருக்கிற அப்போன்னு பார்த்து எங்க வீட்டுக்கு இரகசியமா வந்து பழகுவாங்க. வீடியோவில படம் பார்ப்பாங்க. நான், என் அக்கா எல்லாரும் நடிச்ச பல படங்களை அவங்க தியேட்டர்ல போய்ப் பார்த்ததே இல்லை. எங்க வீட்டிலே வீடியோவிலேதான் பார்ப்பாங்க. அவங்க புருஷன் வேலையாள் யாரும் போடாததாலே அக்காவுக்கு வீட்டு வேலை வேறு அதிகம். அத்தினி வேலையையும் பொறுமையாச் செய்வாங்க. அவங்களுக்கும் எனக்கும் ஒரு ஒற்றுமை. ரெண்டு பேருக்கும் பச்சை மிளகு ஊறுகாய்னாக் கொள்ளைப் பிரியம். கேரளாவிலிருந்து எங்களுக்கு வர்றப்ப அம்மா அவங்களுக்கும் மிளகு ஊறுகாய் குடுத்து அனுப்புவாங்க. எனக்கு எத்தனையோ லட்சக்கணக்கான இரசிகர்கள் இருந்தும் இந்தப் பக்கத்து வீட்டுச் சுகன்யா அக்காதான் முதல் ரசிகைங்கிறது என் அபிப்ராயம். அவங்களை ரசிகைங்கிறது கூடத் தப்பு. சிநேகிதி, அக்கா,ன்னுசொல்றதுதான் மிகவும் பொருத்தம்'—

என்ற பேட்டியுடன் பாகவதரின் பேட்டியும் சேர்ந்து பிரசுரமாகியிருந்தது.

பாகவதர் தன் பக்கத்து வீட்டுக்காரனை கண்ணனைப் பற்றி எதுவும் சொல்லாமல், சமாளித்திருந்தார்.

"என்னோட உடனடியான பக்கத்து வீட்டுக்காரருக்கும் எனக்கும் அத்தனை சுமுகமான உறவு இல்லே. அதனாலே அவரைப் பற்றி நான் புகழ்ந்தாலும் தப்பா இருக்கும். நிந்திப்பதும் முறையாக இருக்காது. ஆகவே அந்த வீட்டை விட்டுவிட்டுப் 'பொன்குன்னம்' அம்மிணி அம்மா வீட்டைப் பத்தியே சொல்லிடறேன்.

அந்த வீட்டார் என்னைத் தங்கள் 'காட்ஃபாதர்' மாதிரி நினைக்கிறுங்க. நானும் அவாளை என் குழந்தைகள் மாதிரிப் பாவிச்சுப் பிரியமாப் பழகறேன். அம்மிணிக்குப் பூமாதிரி மனசு. நிறைய தர்மம் பண்ரு அவளுடைய பெண்கள் சினிமாவிலே எப்பிடி எப்பிடி நடிக்கிருளோ, வீட்டிலே அவா எதுவும் நடிக்கிறதில்லே. பக்தி சிரத்தை, பெரியவர்களிடத்திலே மரியாதை எல்லாம் உள்ள குடும்பம் அது. இப்படிப்பட்ட ஒரு பெரிய கலைக் குடும்பத்துக்குப் பக்கத்திலேயே குடியிருக்க நேர்ந்ததை என் பாக்கியம்னே சொல்லணும்"—என்பது போல் சொல்லியிருந்தார். அருகே பாகவதரை அம்மிணி அம்மாள் வணங்குவது போல ஒரு படமும் பிரசுரமாகியிருந்தது.

மூன்று விஷயங்களிலும் தன்னுடையதில்தான் காரம், சுரம் எல்லாமே, அதிகமென்று அவனுக்கே தோன்றியது. சுகன்யாவின் மேல் ஆத்திரம் மூண்டது அவனுக்கு. அம்மிணி அம்மாளின் மகள் செக்ஸ் ராணி நந்தினி தான் இப்படி ஒரு பேட்டியளித்திருப்பதைச் சுகன்யாவிடம் சொல்லிவிட்டுத்தான் செய்திருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. சொல்லாமலும் செய்திருக்கலாம். அப்படியானால்

அவளும் சுகன்யாவும் சேர்ந்து கட்டிக் கொண்டிருப்பது போல் பிரசுரமாகி இருக்கும் புகைப் படம் ஏது? எப்போது எடுத்தது? என்ற சந்தேகம் கண்ணனுக்கு வந்தது. பாகவதர் பரவாயில்லை. 'பக்கத்து வீட்டுக்காரரோடு எனக்குச் சுமுகமான உறவு இல்லை. ஆகவே அவரைப் பற்றி நான் சொல்ல விரும்பவில்லை' என்று தப்பித்துக் கொண்டுவிட்டார். இந்த அம்மிணி அம்மாளின் பெண் நந்தினிதான் கொஞ்சம் நம்மைப் பற்றித் தாறுமாறுகச் சொல்லியிருக்கிருள். செக்ஸ் ராணி அடங்காப் பிடாரி என்பதை நிரூபித்து விட்டாள். நான் கோபக்காரன் என்று கேள்விப் பட்டிருக்கிருளாம். கொடுமைக்காரன் என்று தெரிந்து கொண்டிருக்கிருளாம். ஸினிக்காம். வரட்டும். இவளை இப்படிப் பேசுவதற்குத் துணியச் செய்த சுகன்யாவைத்தான் மடக்கவேண்டும். இந்தக் கோளாருன குடும்பத்தோடு இரகசியமாக எனக்குத் தெரியாமல் சுகன்யா பழகப் போகத்தானே இவ்வளவும் வந்து தொலைத்திருக்கிறது! சுகன்யாவுக்கு உடனே பாடம் புகட்டியாக வேண்டும் என்று மனத்திற்குள் தன் மனைவியைக் கறுவிக் கொண்டான் கண்ணன்.

அம்மிணி அம்மாவையும் பாகவதரையும் பற்றித் தான் பத்திரிகைப் பேட்டியில் கொடுத்த தகவல்கள் எவ்வளவு தூரம் அவர்களைக் கேவலப் படுத்துமோ அந்த அளவுக்குத் தன்னைக் கேவலப்படுத்திப் பாகவதரோ, நந்தினியோ எதுவும் சொல்லி விடவில்லை என்பது கண்ணனுக்கு ஆறுதலாக இருந்தது. வீணுக எதை எதையோ கற்பனை செய்து கொண்டு தான் அவர்களைப் பற்றி இத்தனை கேவலமாகச் சொல்லியிருக்க வேண்டாமோ என்று கூட இப்போது நினைத்துக் கழிவிரக்கப்பட்டான் கண்ணன். பாகவதரோ, அம்மிணியோ அந்த மலையாளப் பத்திரிகையைப் படித்தது பற்றி எதுவும் காட்டிக் கொள்ள வில்லை.

அன்றே தன் மனைவியிடம் அந்த மலையாளப் பத்திரிகை

யில் பிரசுரமான புகைப்படத்தைக் காட்டிக் கூப்பாடு போட்டான் கண்ணன்.

"இதெல்லாம் என்ன கூத்து?"

"எனக்கு எதுவும் தெரியாதுங்க. ரொம்ப நாளைக்கு முன்னாடி இப்பிடி ரெண்டு வீட்டுக்கும் சண்டை எல்லாம் வர்ரத்துக்கு முன்னாலே மாலா பாலா சிங்கப்பூர்லேருந்து வாங்கிட்டு வந்த புதுக்காமிராவிலே என்னையும் நந்தினியை யும் பிடிச்ச படம் இது. அது மட்டும்தான் இப்ப ஞாபகம் இருக்கு. இதை அவங்க வீட்டிலேருந்துதான் இந்தப் பேப்பர்க்காரன் வாங்கிக்கிட்டிருக்கணும். சத்தியமா எனக்கு வேற எதுவும் தெரியாது..."

"இந்தப் பத்திரிகையிலே வந்திருக்கிற பேட்டியைப் பற்றி...?"

"என்ன பேட்டி? யாரோட பேட்டி?"

"அதான் உன்னோட ஃப்ரண்ட் நந்தினியோட பேட்டி..."

"அவ பேட்டி குடுத்திருக்காளா என்ன? என்னன்னு குடுத்திருக்கா?"

"நீ ரொம்பத் தங்கமானவளாம். உன் பொண் கலா ஸ்வீட் கேர்ளாம். நான்தான் கோபக்காரனும், கொடுமைக் காரனும், ஸினிக்காம்..."

"அப்படீன்னு யார் சொல்றாங்க?"

"வேற யாரு? எல்லாம் உன் சிநேகிதி நந்தினிதான்."

"அடப் பாவமே! ஏன் அப்பிடிச் சொன்னா?"

"சொல்லியிருக்காளே! எல்லாம் நீ எனக்குத் தெரியாமே அவளோடவும் அந்தக் குடும்பத்தோடவும் பழகறதாலே வந்த வினை. அங்கே வீடியோ பார்க்கப் போறே. அந்த நந்தினி மாதிரி ஒரு மட்டமான அரை நிர்வாண ஆபாச

நடிகை உன்னைத் தன்னோட முதல் ரசிகைன்னு பீத்திக்கிறா. கௌரவமான குடும்பப் பெண்ணான நீ அவளை இப்பிடிச் சொல்ல விட்டிருக்கலாமா? இதுனாலே உம் பேரு என் பேரு, நம்ப குடும்பப் பேரு எல்லாமே சீரழியறதுதான் மிச்சம்.''

''நான் ஒரு தப்பும் பண்ணலீங்க... அவ பாட்டுக்கு என்னைக் கேட்காமே ஒரு பத்திரிகைக்கு இப்பிடிப் பேட்டி கொடுத்தா அதுக்கு நான் என்ன பண்ணுவேன்?''

''பேட்டியில் என்னைப் பத்தியும் என் கணவரைப் பற்றியும் அந்த நந்தினி சொன்னதெல்லாம்பொய்னு இங்கிலீஷ்லே நான் சொல்ற மாதிரி அந்தப் பத்திரிகைக்கு ஒரு மறுப்பு உடனே எழுதிப் போடுவியா?''

''நீங்க என்ன சொல்றீங்களோ அப்பிடியே செய்யறேன். எனக்கு ஒரு பாவமும் தெரியாது.''

கண்ணன் சுகன்யாவை மிரட்டியிருந்தானே ஒழிய அந்தக் கடிதத்தை மலையாளப் பத்திரிகைக்கு எழுதி அனுப்பும்படி மீண்டும் அவளை வற்புறுத்திக் கேட்கவில்லை அவன். நந்தினி விஷயத்தை மட்டும்தான் அவன் சுகன்யா விடம் விசாரித்திருந்தான். தன் பேட்டியும் பாகவதர் பேட்டியும் அதே பத்திரிகையில் வந்திருப்பதைப் பற்றி அவளிடம் மூச்சே விடவில்லை.

அவன் அலுவலகம் சென்றபின் பாகவதரும், அம்மிணியம்மாளும் சுகன்யாவிடம் வந்து கண்ணனின் அந்தப் பேட்டியைப் பற்றிக் குறை சொல்லி வருத்தப்பட்டார்கள்.

''உன் புருஷன் இப்படிப் பண்ணியிருக்க வேண்டாம் அம்மா! நான் உன் புருஷனைப் பத்தி எதுவுமே சொல்லாமக் கௌரவமா விட்டிருக்கேன். நந்தினி ஏதோ கோபக்காரர் அது இதுன்னு கண்ணனைப் பத்தி வருத்தப்பட்டிருக்கா... ஆனா உன் புருஷன் எங்களைப்பத்தி எழுதியிருக்கிறதை அம்மிணியைப் படிச்சுக் காட்டச் சொல்றேன், கேளு. இது உனக்கே நியாயமா இருந்தாச் சரி.''

அம்மிணியம்மாள் அதைப் படித்துக் காட்டி விவரித்த போது சுகன்யாவுக்கு அதைக் கேட்கவே கூச்சமாயிருந்தது. குடும்ப கௌரவம் அது இது என்றெல்லாம் பேசுகிற தன் புருஷனு அடுத்தவர்களைப் பற்றி இத்தனை கொச்சையாகவும் பச்சையாகவும் சொல்லியிருக்கிருன் என்று எண்ணியபோதே அவளுக்கு அருவருப்பாயிருந்தது.

அப்போது பாகவதரே மேலும் சொன்னுர்: "மலையாளத் தோட போகாம இது தமிழ் சினிமாப் பத்திரிகையிலேயும் வந்திருக்கு அம்மா! நாங்க அம்மிணிக்கு மிகவும் வேண்டிய ஒரு பெரிய வக்கீலைக் கலந்து பேசினதிலே 'இந்தப் பேட்டி ரொம்பத் தந்திரமான வார்த்தைகளில் கொடுக்கப்பட்டிருந் தாலும் நீங்க விரும்பினு இந்தப் பேட்டியைக் கொடுத்தவர் மேலும் பிரசுரித்த பத்திரிகைகள் மேலும் தலா ஒரு லட்ச ரூபாய்க்குக் கேரக்டர் அஸாஸிநேஷன்னு ஸூட் போட்டுக் கேஸை ஜெயிச்சுத் தரேன். சுப்ரீம் கோர்ட் வரை போனுலும் பரவாயில்லை. ஜெயிச்சுத் தர்றது என் பொறுப்பு'ன்னுர். நானும் அம்மிணியும் உன்னைப் பத்தி நினைச்சோம். வீணு உனக்குச் சிரமம் குடுக்கப்பிடாதுன்னுதான் அதை நாங்க செய்யலே. முரடனுன உன் புருஷன் பண்ணின தப்புக்காக உன்னைப் போல ஒரு நல்ல சுமங்கலி சிரமப்படக் கூடாதும்மா!"

"உங்களுக்கு நான் ரொம்பக் கடமைப்பட்டிருக்கேன். நீங்க ரெண்டு பேரும் என்னுடை அப்பா அம்மா மாதிரி! கெட்ட சகவாசத்தாலேதான் இவர் இப்படி ஆயிட்டாரு. சுபாவத்திலே இவர் கெட்டவர் இல்லே. சீக்கிரம் கடவுள் இவருக்கு நல்ல புத்தியைக் குடுக்கணும்"—என்று அவர்கள் முன் கண் கலங்கிக் கை கூப்பினுள் சுகன்யா.

பாகவதர் அம்மிணி அம்மாள் இருவருமே அவளுடைய நல்லெண்ணத்திற்கு ஒரு குறையும் வராது என்று சொல்லி அவளை மனப்பூர்வமாக ஆசீர்வதித்து விட்டுச் சென்றுர்கள்.

# 17

இதெல்லாம் நடந்து சில மாதங்கள் ஓடிவிட்டன. ஐப்பசி மாதக் கடைசி. தீபாவளிக்கு இன்னும் சில நாட்களே இருந்தன. சென்னையில் விட்டு விட்டு மழை பெய்ய ஆரம்பித்திருந்தது.

ஒரு நாள் காலையில் பக்கத்து வீட்டு வாசலில் "எழிலரசி நந்தினி வாழ்க!" என்ற பலமான கோஷங்கள் முழங்கியதைக் கேட்டு அதில் தனக்குப் பழக்கமான குரல் ஒன்றும் கேட்கவே வியப்போடு வாசலில் வந்து பார்த்தான் கண்ணன்.

'எழிலரசி செல்வி நந்தினி இரசிகர் மன்றம்' என்ற துணி பேனரைப் பிடித்தபடி ஒரு குட்டி ஊர்வலமே பக்கத்து அம்மிணியம்மாள் வீட்டு வாயிற்படியில் நின்று கோஷங்கள் போட்டுக் கொண்டிருந்தது. இரசிகர் மன்ற பேனரை இரு புறமும் தாங்கி நின்ற நபர்களைப் பார்த்தானோ இல்லையோ கண்ணனுக்கு அப்படியே மூர்ச்சை போட்டுவிடும் போலிருந்தது. ஒருபக்கம் புலவர் மகிழ்மாறனும், மறுபக்கம் உண்மை விளம்பியும் இரசிகர் மன்றத்தைத் தூக்கிப் பிடித்தபடி கோஷம் போட்டுக் கொண்டு நின்றார்கள். செல்வி நந்தினிக்கு அணிவிப்பதற்காக ஆளுயர ரோஜாப்பூ மாலையுடன் புலவரின் மனைவி தாயம்மாளும் ஊர்வலத்தில் நின்று கொண்டிருந்தாள். அதே பழைய தமிழர் பட்டாளத்து இளைஞர்கள், சில பெண்கள், என்று ஒரு நாற்பது ஐம்பது பேர் கோஷங்கள் போட்டு நந்தினியை வாழ்த்தியபடி பக்கத்து வீட்டுத் தோட்டத்தில் அட்டகாசமாக நுழைந்து கொண்டிருந்தார்கள்.

கண்ணன் தன் வீட்டு முகப்பிலிருந்து தங்களைப் பார்ப்பதைப் புலவரும் உண்மை விளம்பியும் கண்டுவிட்டனர். உடனே கண்ணன் புலவரைச் சைகை செய்து கூப்பிட்டான்,

ஆனால் புலவர் அதைக் கவனிக்காதது போல் இருந்து விட்டார். மீண்டும மீண்டும் கண்ணன் புலவரின் கவனத்தைக் கவர முயன்றது வீணாயிற்று.

உண்மை விளம்பி பணத்துக்காக இப்படி என்றாவது ஒரு நாள் செய்யக்கூடும் என்று கண்ணன் அறிந்திருந்தான். தன்மானம் அது இது என்று பேசிப் 'பெண் நாய்கள் ஜாக்கிரதை' என்று இந்த வீட்டுச் சுவரில் தாரால் எழுதிய புலவரின் இந்தத் திடீர் மாற்றம்தான் கண்ணனால் எந்தவகை யிலும் ஜீரணிக்க முடியாதபடி இருந்தது.

வீட்டுக்குத் தேடிப் போயாவது புலவர் மகிழ்மாறனிடம் இதைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டு விடவேண்டும் என்று கண்ணன் துறுதுறுப்புக் கொண்டான். அப்போது எழுந்த ஆவலை மட்டும் அவனால் அடக்கிக் கொள்ளவே முடியவில்லை. இப்படி ஆட்களை நம்பி அக்கம்பக்கத்தாரைத் தான் பகைத்துக் கொண்டதுதான் பைத்தியக்காரத்தனமோ என்று இப்போது அவனுக்குத் தோன்றியது. மண் குதிரை களை நம்பி ஆற்றில் இறங்கி விட்டோமோ என்று எண்ணி மனம் நொந்தான். இந்த இரண்டு காரியக் கோமாளிகளும் சகல விஷயங்களையும் நந்தினியிடம் சொல்லித் தன்னைக் காட்டிக் கொடுத்து விடுவார்களோ என்றுகூடத் திடீரென்று அவனுக்கு ஒருவகைப் பயமும் பதற்றமும் தற்காப்பு உணர்ச்சியும் கூட ஏற்பட்டன.

ஊர்வலம், மாலையணிவிப்பு, வாழ்த்தொலிகள் எல்லாம் ஓய்ந்து புலவர் வீடு திரும்பியிருப்பார் என்று கண்ணனுக்குத் தோன்றியபோது வெளியே தூறலாக இருந்த மழை பெரிதா கியிருந்தது. முதல் நாள் டெலிவிஷனில், 'நாளை வானம் மப்பும் மந்தாரமுமாக இருக்கும். சில இடங்களில் இலேசான தூற்றல் இருக்கலாம்'—என்று கூறியிருந்தபோதே மறுநாள் அதற்கு நேர்மாறாகப் பலத்த மழை பெய்யும் என்பதைக் கண்ணன் தீர்மானமாய் முடிவு செய்திருந்தான்.

குடையோடு போனாலும் நனைந்து விடும் என்கிற அளவு காற்றும் மழையுமாகச் சுழற்றிச் சுழற்றி அடித்துக் கொண்டிருந்தது. புலவர் வீடு சில கெஜ தூரத்தில் அடுத்த தெருவில்தான் இருந்தது. இந்த மழையில் அவர் எங்கேயும் போயிருக்கவும் முடியாது. அன்று ஏதோ பொது விடுமுறை நாள் வேறு. தேடிப் போவதா வேண்டாமா என்ற சில நிமிஷ மனப் போராட்டத்துக்குப் பின் குடையை எடுத்துக் கொண்டு கண்ணன் புலவர் வீட்டுக்குப் புறப்பட்டபோது, "இந்த அடை மழையிலே எங்கே கிளம்பிட்டீங்க? மழை நின்னப்புறம் போகலாமே?" என்றாள் கண்ணனின் மனைவி சுகன்யா.

"இல்லே! பக்கத்துத் தெருவுக்குத்தான். அவசரமா ஒரு வேலை இருக்கு...பத்து நிமிஷத்திலே போயிட்டு வந்திடறேன்."

"மழை நின்னதும் போங்களேன். அதுக்குள்ளே அப்படி என்ன தலை போகிற காரியம்?" என்று அவள் கூறியதையும் பொருட்படுத்தாமல் கிளம்பினான் கண்ணன். பலத்த காற்று குடையை மேல் நோக்கி இழுத்தது. அந்த மழையிலும் காற்றிலும் குடை பிய்த்துக் கொண்டு போய் விடாமல் சமாளித்துக்கொண்டு நடப்பதே சிரமமாயிருந்தது.

புலவர் வீட்டு வாசலில் புதுப் பெயிண்ட் பளபளக்க ஒரு பிரம்மாண்டமான போர்டு மழையில் குளித்துக் கொண்டு நின்றிருந்தது.

'எழிலரசி செல்வி நந்தினி இரசிகர் மன்றம்.'

(தலைமை நிலையம்)

கிளைகள் தமிழகம் முழுவதும்.

தலைவர்—புலவர் மகிழ்மாறனார்.

பொதுச் செயலாளர்—உண்மைவிளம்பி.

போர்டைக் கடந்து உள்ளே போனால் புலவர், உண்மை விளம்பி இருவருமே ஒரே சமயத்தில் அவனை எதிர்கொண்டு

வந்தனர். புலவர் உடனே கண்ணனைக் கடிந்து கொள்ளத் தலைப்பட்டார்:

"அதென்னங்க நீங்க அங்கேயே அவங்க விட்டு வாசல்லேயே என்னை ஜாடை பண்ணிக் கூப்பிடறீங்க? கொஞ்சங் கூடக் குறிப்பறிதல் இல்லாம நடந்துக்கறீங்களே? நீங்களும் அவங்களும் எதிரி. நான் அங்கேயே உங்களோட வந்து பேசினு அவங்க என்னைப் பத்தி என்னை நெனைப்பாங்க?"

"அது சரி நீங்க எப்போது இப்படி நண்பரானீங்க? 'மன்றம் ஒண்ணு ஸெட் அப் பண்றோம். கவனியுங்க'ன்னு போய் நீங்களே நந்தினி கிட்டப் போய் நின்னீங்களா?"

"எப்படி உங்களுக்கு இதெல்லாம் தெரிஞ்சது? கரெக்டா சொல்றீங்களே?" என்றுன் உண்மைவிளம்பி.

புலவர் தொடர்ந்து சொல்லத் தொடங்கினார்: "தாரணி ஸ்டுடியோவில் அவங்களைப் போய்ப் பார்த்தோம். ஆப்பிள் ஜூஸ் குடுத்து உபசரிச்சு ரொம்பப் பண்பா நடந்துக்கிட்டாங்க. 'மன்றம்'னு நாங்க பேச்சை எடுத்ததுமே, 'நல்லாச் செய்யுங்க! பணம் எவ்வளவு வேணும்?'னு நேரடியாவே வந்துட்டாங்க."

"அடேடே! ரொம்ப லிபரலா இருக்கே? அப்புறம்?"

"தமிழ்நாடு முழுவதும் கிளை அமைச்சு ஊரூரா உங்க படம் ரிலீஸாகிற தேதியிலே படப் பெட்டிக்குச் சூடம் காட்டி மாலை போட்டு ஊர்வலம் விடறோம். பேனர் கட்டறோம். மாமூலா உள்ள மத்ததும் செய்யறோம்னோம்."

"பலே! ரொம்பத் தேறிட்டீங்க புலவரே! இந்தச் சூடம் காட்டறதுலே கூட இப்போ நம்பிக்கை வந்திடிச்சா உங்களுக்கு?"

"வராமப் பின்னே? சாமி படத்துக்கா சூடம் காட்டறோம்? படப் பொட்டிக்குத்தானே காட்டப் போறோம்?"

"சரி, மேலே சொல்லுங்க."

"பத்தாயிரம் ரொக்கமா நன்கொடை கொடுத்தாங்க. ரிலீஸ் படத்துக்கெல்லாம் எல்லா ஊர்லியும் எல்லா முதல் காட்சியிலியும் அம்பது டிக்கெட் மன்றத்துக்கு முன்னுரிமையாத் தரச் சொல்லி ஏற்பாடு செய்யறேன்னுங்க."

"ரொம்பப் பெரிய சாதனைதான்."

"உடனே நான் தலைவராயிட்டேன். உங்க நண்பரைச் செயலாளராக்கி இதை செட்அப் பண்ணியாச்சு. இன்னிக்குத்தான் மன்றத் தொடக்க விழா. அவங்க பிறந்த நாள் வேற. அதான் ஊர்வலமா வந்து ரசிகருங்க அவங்களுக்கு மாலை அணிவிக்கிறதுன்னு ஏற்பாடு பண்ணினோம்."

"ரொம்ப சந்தோஷம். அப்ப நான் வரட்டுமா புலவரே?"

"சரி, போயிட்டு வாங்க. இனிமே நம்ம நட்புப் பழையபடி தொடர வழியே இல்லே. ஆனா உள்ளத்தளவிலே நாம இன்னும் சிநேகிதருங்கதான். மறந்துடாதீங்க."

"உதட்டளவிலே வேண்டாம்கிறீங்க! அப்படித்தானே?"

ஆற்றில் கரைந்து போகும் என்று கண்ணன் நினைத்த மண் குதிரைகள் பத்தாயிரம் ரூபாய்ப் பணத்தில் கரைந்து போயிருந்தன. குச்சுக்காரி, தேவிடியா, ரோட்ஸைட் கிராக்கி என்றெல்லாம் நந்தினி வகையறுக்களைத் திட்டிக் கொண்டிருந்த புலவரும், உண்மை விளம்பியும் இப்போது அவள் பெயரை உச்சரிப்பது கூட மரியாதைக் குறைவு என்று தயங்கி வாய்க்கு வாய் 'அவங்க' போடுவதைக் கண்டு கண்ணனுக்குத் தாங்க முடியாத வியப்பு.

அவனுள் இன்னும் ஒரே ஒரு சந்தேகம் மட்டும் மீதமிருந்தது. நீண்ட நாட்களுக்கு முன் அம்மிணி அம்மாளையும் பாகவதரையும் பற்றித் தாறுமாறுகச் செய்தி பிரசுரித்து விட்டு ஏதோ ஒரு ஸ்டுடியோவில் போய் அவள் பெண்ணைச் சந்தித்து அதைக் காட்டிப் பணம் கேட்டபோது உண்மை

விளம்பியிடம் துணிந்து பணம் தர முடியாது என்று அவள் மறுத்ததாகக் கண்ணன் மனைவி மூலமாகக் கேள்விப்பட்டிருந்தான். அப்படிப்பட்டவளா இப்போது இப்படிப் பத்தாயிரம் ரூபாயைத் தூக்கிக் கொடுத்து மன்றம் தொடங்கச் சொன்னாள் என்று நம்ப முடியாமல் இருந்தது கண்ணனுக்கு.

வீடு திரும்பியதும் மனைவியிடம் இதைச் சொல்லி விசாரித்தான். சுகன்யா அவனுடைய சந்தேகத்தைத் தெளிவு செய்தாள். ''அது இவ இல்லே! அம்மிணியம்மாவோட இன்னொரு பொண்ணிட்ட அந்த உண்மைவிளம்பி பிளாக்மெயில் பண்ணினப்போ அவள் அவன்கிட்டே போடா போன்னுட்டா! இது நந்தினி. பண விஷயத்திலே இவ போக்கு வேற மாதிரி. 'மலிவாக் கிடைச்சா நம்ம விரோதியை விலைக்கு வாங்கி நாய் மாதிரி நம்ம வீட்டு வாசற்படியிலேயே கட்டிப் போட்டு நம்மைப் பார்க்கிறப்பல்லாம் வாலைக் குழைக்கிற மாதிரிப் பண்ணிடணும் அக்கா!' என்பாள் இவள். இந்தப் புலவர் விஷயம்கூட எங்கிட்டே சொன்னுள். எனக்கு முன்னலேயே தெரியும். உங்ககிட்டே நானுச் சொன்னு நீங்க கோபிச்சுப்பீங்களோன்னுதான் சொல்லலே'' என்ருள் சுகன்யா.

அதைக் கேட்டுக் கண்ணன் மனைவியின் முகத்தை நிமிர்ந்து ஏறிட்டுப் பார்க்க முடியாமல் தலைகுனிந்தான்.

அவனுக்கு வெட்கமாக இருந்தது. மனிதர்களை எடை போடுவதில் தன்னைவிடத் தன் மனைவி கெட்டிக்காரியாயிருப்பதாய் மிகவும் காலதாமதமாக இப்போதுதான் புரிந்து கொண்டான் அவன்.

''இந்த மாதிரி மன்றம் அது இதுன்னெல்லாம் தொடங்க அம்மிணி அம்மா எப்படிச் சம்மதம் கொடுத்திருக்க முடியும் சுகன்யா? அவளுக்குத்தான் இதெல்லாம் ஒண்ணும் பிடிக்காதே?''

''பிடிக்காதுதான்! ஆனுல் இது அம்மாவைக் கேட்காமல் நந்தினி தானுகப் பண்ணிக் கொண்ட ஏற்பாடு. அவளைக்

கேட்டா 'ஸேல்ஸ் பிரமோஷன்'னு சுலபமாகச் சிரித்துக் கொண்டே பதில் சொல்கிருள்.''

''அம்மாக்காரி கூடாதுன்னு தடுக்க மாட்டாளா?''

''அம்மிணி அம்மாவுக்கு வயசாச்சு. முன்னே மாதிரிப் பொண்கள் விஷயத்திலே அவ தலையிடறதில்லே. ஒதுங்கிக் கிருள். மாலா கூட யாரோ பிரேம்குமார்னு ஒரு ஹீரோவாமே, அவனைக் காதலிக்கிரு. அவள் இஷ்டம்னு ஒண்ணும் கண்டுக் காம விட்டுட்டா அம்மிணியம்மா. ஆனு ரொம்பத் தங்கமான மனுஷி. அடுத்தவங்களுக்குக் கெடுதலே நினைக்கிறதில்லே. நீங்க அவங்களைப் பத்தியும் பாகவதரைப் பத்தியும் அந்த மலையாளப் பத்திரிகையிலே கொடுத்த பேட்டியை வச்சே உங்க மேலேயும், பத்திரிகை மேலேயும் லட்ச ரூபாய்க்கு டாமேஜிங் சூட் போட்டு ஜெயிச்சுத் தர்றதுக்கு நாஞைச்சுன்னு ஒரு வக்கீல் முன்வந்து அவங்ககிட்ட வற்புறுத்திஞராம். மாட்டேன்னுட்டாளாம்.

'சுகன்யா! உன்னைப் போல ஒரு நல்ல சுமங்கலியோட குடும்ப வாழ்க்கையை நான் கெடுக்க மாட்டேன்'னு இங்கே வந்து அந்தம்மாவும் பாகவதருமா இந்த விஷயத்தை எங்கிட்டச் சொல்லிட்டு உங்களைப் பத்தி ரொம்ப வருத்தப் பட்டுட்டுப் போனுங்க.''

''என்னிக்கு?''

''கொஞ்ச நாளைக்கு முன்னே நீங்க அந்த மலையாளப் பத்திரிகையிலே என் படம் வந்திருக்கிறதைக் காட்டிக் கூப்பாடு போட்டீங்களே அன்னிக்குத்தான்.''

''ஏதோ போருத வேளை! எல்லாரையும் அநாவசியமா விரோதிச்சுக்கிட்டாச்சு சுகன்யா.''

''நீங்கதான் விரோதம் விரோதம்னு வாய்க்கு வாய் சொல்றீங்க. அவங்க யாரும் உங்களையோ என்னையோ விரோதியாகவே நினைக்கல்லே.''

"இந்த உண்மைவிளம்பியும் புலவரும் கோள் சொல்லிக் கோள் சொல்லியே என்னைப் பாழாக்கிட்டாங்க. என் புத்தியைச் செருப்பாலேதான் அடிக்கணும்."

"அவங்க ரெண்டு பேரும் நீங்க சிநேகிதம் பாராட்டிப் பழகற மாதிரிக் கௌரவமானவங்க இல்லே. ஏதோ உங்க கெட்ட காலம் அவங்க ரெண்டு பேரிட்டவும் ரொம்ப நம்பிப் பழகிட்டீங்க."

"இன்னிக்கோட அந்தப் பழக்கத்துக்குத் தலைமுழுகியாச்" என்றான் கண்ணன். பேசிக்கொண்டே இருந்தவன் இரண்டு மூன்று தடவை அடுத்தடுத்துத் தும்மினான்.

"மழையிலே நனைஞ்சது உங்க உடம்புக்கு ஆகலே! பேசாம அமிர்தாஞ்சனத்தைத் தடவிட்டுத் தூங்கணும் நீங்க."

கண்ணன் மனைவி சொன்னபடியே செய்தான். வெளியே மழை இன்னும் விடவில்லை. முன்னைவிட அதிகமாகியிருந்தது. காற்றும் புயலும் அதிகமாகவே மின்வாரியம் தானாகவே மின்சார சப்ளையை முன்னெச்சரிக்கை நடவடிக்கையாகத் துண்டித்து விட்டது. மாலையில் இரவில்—நள்ளிரவில் மழை விடவே இல்லை. வானமே பொத்துக் கொண்டுக் கொட்டுவது போலக் கொட்டித் தீர்த்துக் கொண்டிருந்தது. மின்சாரமும் போனது போனதுதான்.

அன்று இரவில் கண்ணனுக்கு நல்ல ஜுரமே வந்து விட்டது. உடம்பு அனலாய்க் கொதித்தது.

# 18

கண்ணனும் குழந்தை கலாவும் கட்டிலில் போர்த்திக் கொண்டு படுத்திருந்தார்கள். சுகன்யா கீழே தரையில் ஜமுக்காளத்தை விரித்துப் படுத்துக் கொண்டிருந்தாள்.

வெளியே மழை கொட்டிக் கொண்டிருந்ததால் கனத்த ஜமுக்காளத்தையும் மீறித் தரையின் ஜில்லிப்பு உறைத்தது. கட்டிலோ சிறியது. இருவர் படுக்க முடியாது. மின்விளக்கு இல்லை. மெழுகுவத்தி டார்ச்சை வைத்துச் சமாளிக்க வேண்டியிருந்தது. ஜுர வேகத்தில் கண்ணன் அயர்ந்து தூங்கிவிட்டான். சுகன்யா ஆழ்ந்த உறக்கமின்றித் தரையின் ஜிலுஜிலுப்பு உறைத்ததால் சும்மா புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தாள்.

அதிகாலை மூன்று மணி இருக்கலாம். திடீரென்று ஜமுக்காளமே தண்ணீரில் நனைந்தது போல் உணர்ந்து பதறியடித்துக் கொண்டு எழுந்து டார்ச் லைட்டைப் போட்டால் தரையில் தண்ணீர் பரவிக் கொண்டிருந்தது. வீட்டுக் கூடம் சமையலறை எல்லாம் தண்ணீர் மயமாயிருந்தது. வெளியே பேய் மழை இன்னும் விட்டபாடில்லை. ஜன்னல் வழியாக டார்ச்சை அடித்துப் பார்த்தால் வெளியே தெருவில் தரையே தெரியவில்லை. கண்ணுக்கெட்டிய தூரம் ஆறுபோல் நீர் ஓடிக் கொண்டிருந்தது. ஜன்னலில் ஏறிப் பின் பக்கம் ஓடிக் கொண்டிருந்த வழக்கமான கால்வாயைப் பார்த்தபோது அது காட்டாறு போல இரு கரையும் தெரியாமல் பொங்கிப் பெருகியிருந்தது. பின்புறம் வீட்டுக் கழிவு நீர் வெளியேறி அந்தக் கால்வாயில் கலப்பதற்காகச் செய்யப்பட்டிருந்த வழியாகக் கால்வாய்த் தண்ணீர் எதிர்த்துக் கொண்டு உள்ளே வந்து காம்பவுண்டில், வீட்டிற்குள் என்று தாராளமாக நுழைந்து கொண்டிருந்தது. தரையில் வைக்கப்பட்டிருந்த பிரம்புக் கூடை, பிளாஸ்டிக் வாளி முதலிய பண்டங்கள் ஒவ்வொன்றாக வீட்டுக்குள்ளேயே மிதக்க ஆரம்பித்திருந்தன.

அந்தக் காலனியில் வீடு அலாட் ஆகி அவர்களும் மற்றவர்களும் குடிவந்து பல ஆண்டுகள் ஆகிவிட்டன. எந்த ஆண்டிலும் இப்படி நடந்ததில்லை. தெருவில் முழங்கால் அடி, ஓர் அடி தண்ணீர் தேங்கும், பின்புறம் கால்வாயில்

இரு கரையும் நிமிர நீர் ஓடும். அதிகப்பட்சமாக அவர்கள் பார்த்திருந்தது இவற்றைத்தான். இதுவோ புதுமையான அனுபவம், முதல் பயங்கர அனுபவம். அந்தக் காலனிக்குள் ஓடிய கால்வாய் அடையாறில் போய்க் கலக்கின்றது. அடையாறில் அதிக வெள்ளமாக இருந்து, மழைநீர் போதா தென்று அந்தத் தண்ணீர் வேறு எதிர்த்துக் கொண்டு கால்வாய் வழியே காலனிக்குள்ளும் மற்றத் தாழ் வான பகுதிகளுக்குள்ளும் புகுந்திருப்பதைச் சுலபமாகவே ஊகித்து உணர முடிந்தது. மின்சாரம் இல்லாததால் எங்கே எதைத் தேடி எடுப்பது என்று தெரியவில்லை. தண்ணீர் அளவு விநாடிக்கு விநாடி மேலே ஏறிக் கொண்டிருந்தது. சுவரில் அடையாளம் பார்த்தாலே அது தெரிந்தது.

பாத்ரூம் கதவைத் திறந்தால் ஒரே கோரம். ப்ளஷ் அவுட்டிலிருந்து சகலமும் பொங்கிக் கொண்டு தண்ணீர்ப் பரப்பிற்கு வந்து மிதக்கத் தொடங்கியிருந்தது. சுகன்யாவுக்குக் கையும் ஓடவில்லை காலும் ஓடவில்லை.

பதறிப் போய்க் கணவனை எழுப்பினாள். அவன் உடம்பு நெருப்பாய்க் கொதித்தது. தன் நினைவே இல்லாமல் அடித்துப் போட்ட மாதிரி தூங்கிக் கொண்டிருந்தான். கீழே நீர்ப்பரப்பில் காலை வைத்து விடாமல் தடுத்து அவனுக்கு அவள் நிலைமையை விளக்கிப் புரிய வைக்கச் சில நிமிஷங்கள் பிடித்தன. கண்ணனுக்குக் கால்கள் தள்ளாடின.

வீட்டிற்குள் நீர் மட்டம் கிறுகிறுவென்று ஏறிக் கொண்டிருந்தது. கட்டில் முழுக இன்னும் ஓர் அடி தண்ணீர் அதிகமானாலே போதும், ஜுரத்தையும் பொருட்படுத்தாமல் அவன் கீழிறங்கி நனைந்தபடி தள்ளாடித் தள்ளாடி ரேடியோ, டெலிவிஷன், அரிசி மூட்டை என்று முடிந்தவற்றைத் தரையிலிருந்து ஏணியைச் சாத்திப் பரணுக்கு மாற்றினான். அவனால் முடியவில்லை. அதிகமாகத் தள்ளாடியது. இருட்டு வேறு. டார்ச்சில் செல் வீர்யம் குன்றி ஒளி மங்கிக்

கொண்டே வந்தது. இருட்டில் தீப்பெட்டி வைத்திருந்த இடத்தைத் துழாவியபோது அது நழுவித் தண்ணீரில் விழுந்து விட்டது. கைவிளக்கோ, மெழுகுவத்தியோ கொளுத்த வழி இல்லை.

இருட்டில் ஒன்றும் நினைத்த வேகத்துக்கு நடக்க வில்லை. குழந்தையும் கட்டிலும் தண்ணீரில் நனைவதற்கு இன்னும் கால் அடி தண்ணீர்தான் பாக்கி. சுகன்யா பதறிப் போய்க் குழந்தையை எடுத்துத் தோளில் சாத்திக் கொண் டாள். வேறு எதுவும் தோன்றவில்லை. வாசலிலிருந்து தண்ணீரில் யாரோ நடந்து வரும் ஓசையும் டார்ச்சுகளின் ஒளியும், "சுகன்யா! சுகன்யா! சீக்கிரம் குழந்தையை எடுத்துக்கிட்டு வெளியே ஓடி வாங்க. செம்பரம்பாக்கம் ஏரியை உடைச்சு விட்டிருக்காங்க. காலனியிலே வெள்ளம் பூந்திடிச்சு. எங்க வீட்டு மாடிக்குப் போயிடலாம் வா" என்று அம்மிணி அம்மாளின் குரல் மங்கலாகக் கேட்டது.

மழை ஓசை, தண்ணீர் பாயும் ஓசை எல்லாம் பயங்கர மாக இருந்ததால் அந்தம்மாள் மிக அருகிலே இருந்து கத்தி யும் அது பெரிதாகக் கேட்கவில்லை. "இதோ வந்திட் டேம்மா" என்று அந்தம்மாளுக்குப் பதில் குரல் கொடுத்துக் கொண்டே,

"ஏங்க... கூப்பிடறுங்களே, என்ன செய்யட்டும்?" என்று சுகன்யா மெதுவாகக் கணவன் காதருகே கேட்டாள்.

அப்போதே இருவரும் முழங்காலளவு தண்ணீரில் நின்று கொண்டிருந்தார்கள். தண்ணீர் ஏறியபடி இருந்தது. வீட்டுக் குள் நீர் அலை மோதியது. அவன் முகம் கடுமையாகியது.

"நான் வரலே. வர மாட்டேன் நீ வேணும் போய்க்க."

"என்னங்க இது? இந்த ஜுரத்திலே இப்படி அடம் பிடிக்காதீங்க. ஆபத்துக்குப் பாவமில்லே. உங்க பழைய விரோதத்தை எல்லாம் வெள்ளம் வடிஞ்சப்புறம் வெச்சுக்க லாமே?"

"முடியாதுன்னு முடியாதுதான். நான் மானஸ்தன்."

இப்படி விவாதம் நடந்து கொண்டிருந்த போதே அம்மிணி அம்மாளும், பாகவதரும் கூப்பாடு போட்டு அவளை அழைத்தபடி வாசல் தகவைத் தட்ட தொடங்கியிருந்தார்கள்.

"அப்படிப் பார்த்தாலும் நீங்கதான் அவங்களுக்கு நெறையக் கெடுதல் பண்ணியிருக்கீங்களே ஒழிய, அவங்க உங்களுக்கு ஒரு கெடுதலும் பண்ணலியே? இந்த ஆபத்திலே விரோதம் பார்க்காமே அவங்க உங்களைத் தேடிவந்து கூப்பிடறாங்க, நீங்க இப்படி நேரங் காலம் தெரியாம முரண்டு பிடிச்சா எப்படி?"

"என்னை எதுவும் கேட்காதே! செத்தாலும் நான் அங்கே வரமாட்டேன்."

கட்டில் மூழ்கிவிட்டது. அதிக நீர்மட்டத்தில் அவள் குழந்தையின் சுமையும் சேர்ந்து நிற்க முடியாமல் தள்ளாடினாள்.

"நீ போயிடு......கோபமாகச் சொல்லலே. நிஜமாவே சொல்றேன்."

அவள் தண்ணீர்ச் சுழிப்பில் கீழே தடுமாறி விழுந்து விடாமல் குழந்தை கலாவோடு அடையாளமாக நடந்து போய் வாயிற் கதவுத் தாழ்ப்பாளைத் திறந்தாள்.

"அவர் எங்கேம்மா? எல்லாருமா வாங்க. எங்க வீட்டு மாடிக்குப் போயிடலாம்." இப்படிப் பாகவதரும் அம்மிணியம்மாளும் ஒரே சமயத்தில் சுகன்யாவிடம் கேட்டதை உள்ளே ஏணியில் ஏறி நின்றபடி அவனும் கேட்க முடிந்தது. ஒரு சண்டையை அல்லது தர்மசங்கடத்தைத் தவிர்க்கக் கருதி, "நாம முதல்லே போயிடலாம்! அவர் பரண் மேலே நனையாமல் சில சாமான்களை ஏத்திட்டு வரேன்னார்" என்று சுகன்யா வெளியே பொய் சொல்லிச் சமாளிப்பதை அவனும் ஏணிப் படியில் நின்று கேட்டுக் கொண்டுதான் இருந்தான்.

உள்பக்கமாக உடனே டார்ச் அடித்துப் பார்த்த பாகவதர் கண்ணன் ஏணியில் நின்று கொண்டு பரணில் என்னவோ எடுத்து வைப்பதுபோல் தோன்றவே அதை நம்ப முடிந்தது. குழந்தை கலாவைப் பாகவதர் வாங்கிக் கொள்ள, சுகன்யாவை அணைத்தபடி அம்மிணி அம்மாள் அழைத்துச் சென்றாள். நீரில் ஆட்கள் நகரும் களகள ஓசையைக் கேட்டபடி கண்ணன் ஏணியில் நின்றான். இன்னும் சிறிது நேரத்தில் ஏணி கீழே தரையில் தரிக்காமல் மிதக்க ஆரம்பித்து விடுமோ என்றுகூடப் பயமாக இருந்தது.

அதை அவன் அவமானமாக எண்ணினான். அவர்களைப் பற்றி இத்தனை எழுதி இத்தனை பேசி இவ்வளவு கேவலமாக எல்லாம் செய்துவிட்டு இப்போது இந்த மழைக்கும் வெள்ளத்திற்கும் அவர்கள் வீட்டிலேயே அடைக்கலமாவதைப் போல் கேவலம் வேறில்லை என்று எண்ணினான். புலவரைப்போல் அந்த உண்மை விளம்பியைப்போல் பணத்துக்காகத் தானும் மானங்கெட்டுப் போய்விடக் கூடாது என்று பிடிவாதமாக இருந்தான் கண்ணன். முதல் நாள் மழையில் நனைந்ததால் சளியும் தும்மலுமாக ஏணியில் நிற்க முடியாதபடி அவன் உடல் நடுக்கி எடுத்தது. ஜுர உடம்பு தகித்தது. ஆனாலும் பிடிவாதம் தளரவில்லை. சிறிது நேரத்தில் பாகவதர் டார்ச்சுடன் வந்து அவனிடம் மன்றாடப் போவதையும் எதிர்பார்த்து அவரிடம் அதை எப்படிக் கடுமையாக மறுப்பது என்பதையும் இப்போதே யோசிக்க ஆரம்பித்திருந்தது அவன் மூளை.

பாகவதர் மிக மிக இங்கிதமான ஆள். எப்படியும் அவனை மனம் மாற்றி வசியப்படுத்தி அம்மிணி அம்மாள் வீட்டு மாடிக்கு அழைத்துப் போகத்தான் பார்ப்பார். அவரை எதிர்த்து வாதிட்டுப் பிடிவாதம் பிடிப்பது கொஞ்சம் சிரமமான காரியம்தான் என்று நினைத்து உஷாராயிருந்தான் கண்ணன். பித்தக் கிறுகிறுப்புப் போல் தலை சுற்ற ஆரம்பித்தது. பரணியிலேயே ஏறி உட்கார்ந்து விடலாமா என்று

அவன் மேலே ஏற ஆரம்பித்ததும் ஏணி எதிர்பாராத விதமாக இடறியது. அவன் அப்படியே தண்ணீரில் மட்டமல்லாக்க விழுந்தான். அதுவரைதான் அவனுக்கு நினைவு இருந்தது. அம்புறம் நடந்ததை எதையும் அவனறியான்.

# 19

மறுபடி கண்ணன் கண் விழித்தபோது விடிந்து வெகு நேரமாகியிருந்தது. தான் அம்மிணியம்மாள் வீட்டு மாடியில் கட்டிலில் படுத்திருப்பதை அவன் உணர்ந்தான். பக்கத்தில் மனைவி சுகன்யாவும் குழந்தை கலாவும் இருந்தார்கள். தன் முன் நெற்றியில் ஒரு கட்டுப் போட்டிருப்பதையும் கண்ணன் உணர்ந்தான். சுகன்யா பதறினாள்.

"என்னங்க இது? நான் சொல்லியும் கேட்காம நீங்க பாட்டுக்கு ஏணியிலிருந்து விழுந்து தண்ணியிலே கிடந்தீங்க. ஏணி அடிபட்டு முன் நெத்தியிலே காயம் வேறே. நல்ல வேளையாப் பாகவதர் உங்களைத் தேடிக்கிட்டு அங்கே வந்திருக்கலேன்னு உங்கபாடு என்ன ஆகியிருக்கும்?"

"இதைவிட மோசமாக எதுவும் ஆகியிருக்காது. இங்கே கொண்டாறத்துக்குப் பதிலா நான் செத்துத் தொலைஞ்சு என்னைக் கண்ணம்மாப் பேட்டையிலே கொண்டுபோய்ப் பொசுக்கியிருந்தால் கூட நல்லா இருந்திருக்கும்!"

—அவனுடைய வெறுப்பும் விரக்தியும் ஒரு சிறிதும் தணியவில்லை என்பது சுகன்யாவுக்குப் புரிந்தது. அவள் அவசர அவசரமாக அவன் மேலும் இப்படி உளறவிடாமல் வாயைப் பொத்தினாள்.

பாகவதரும் அம்மிணி அம்மாளும் உள்ளே வந்தார்கள். அவனைக் கனிவாக விசாரித்தார்கள். காலனியில் அந்தத் தெருவில் மாடி இல்லாத அத்தனை வீட்டுக்காரர்களும் தங்கள் தங்கள் வீட்டைப் போட்டது போட்டபடி வெள்ளத்தில் விட்டு

விட்டு அந்த வீட்டு மாடியில் அடைக்கலம் புகுந்திருந்தார்கள். முகம் கோணாமல் அங்கே எல்லாருக்கும் உபசாரம் நடந்தது. பாகவதர். வீட்டார்கூட அங்கேதான் வந்து தங்கியிருந்தார்கள். அன்று பால் சப்ளை இல்லை. காய்கறி, பல சரக்குக் கடைக்குப் போகப் பாதை கூட கிடையாது. தெருவில் இடுப்பளவு வெள்ளம். வீட்டில் ஸ்டாக்கில் இருந்த 'கண்டென்ஸ்ட் மில்க்' டப்பாக்கள், பால்பவுடரை வைத்து அத்தனை பேருக்கும் டீ, காப்பி, குழந்தைகளுக்குப் பால் என்று சமாளித்தார்கள் அம்மிணி அம்மாள் வீட்டார்.

காய்கறி இல்லாத குறையை வீட்டில் ஸ்டாக் இருந்த பப்படம், மரச்சீனி அப்பளம், கூழ்வடாம், நேந்திரங்காய் வறுவல் ஆகியவற்றை வைத்துச் சமாளிக்க முடிந்தது. அம்மிணி அம்மாளின் பெண்கள் தங்கள் நட்சத்திர அந்தஸ்தை எல்லாம் மூட்டை கட்டி வைத்து விட்டுச் சர்வ சாதாரணமாக நர்ஸுகளைப் போல் அங்கே எல்லாருக்கும் ஓடியாடிச் சேவை செய்தது புதுமையாயிருந்தது.

அந்த நந்தினி வந்து கண்ணனுக்கு டெம்பரேச்சர் பார்த்து, "இன்னும் கொஞ்சங்கூட ஜுரம் இறங்கலே. ஜாக்கிரதையாப் பார்த்துக்கணும்'—என்று சுகன்யாவை அன்புடன் எச்சரித்து விட்டுப் போனாள்.

கண்ணன் மூள் மேலிருப்பதுபோல் அங்கே இருந்தாலும் வேறெங்கும் போக முடியாதபடி சுற்றி வெள்ளம் சூழ்ந்திருந்தது. யாருக்கும் தெரியாமல் எழுந்து ஓடிவிடுவது கூட முடியாத காரியம். அம்மிணி அம்மாளின் விசாலமான மாடி ஓர் அகதி முகாம் மாதிரி ஆகியிருந்தது. மின்சார சப்ளை அறவே கிடையாது. பால் சப்ளை நிறுத்தப்பட்டிருந்தது. ரொட்டி, காய்கறி, பல சரக்கு எதுவுமே கிடைக்கவில்லை. இன்னும் மூன்று நாட்களுக்கு மழை நீடிக்கும் என்று வேறு பேசிக் கொண்டார்கள். மாடியில் நின்று தெருவைப் பார்த்தால் எது எதுவோ நீர்ப்பரப்பில் மிதந்து வந்தது. மரச் சாமான்கள், செத்த நாய்கள், பிளாஸ்டிக் பண்டங்கள் என்று

கீழே ஒரே தண்ணீர்ப் பிரவாகம். நகரில் கிரவுண்ட் ஃப்ளோர் மட்டுமே உள்ள வீட்டுக்காரர்கள் எல்லாருமே இப்படி அங்கங்கே இருந்த மாடிகளில் அடைக்கலம் புகுந்திருக்க வேண்டும். அல்லது வேறு மேடான பகுதிகளுக்குக் குடியேறியிருக்க வேண்டும். அல்லது கார்ப்பரேஷன் ஸ்கூல்களுக்குப் போயிருக்க வேண்டும். தொடர்ந்து சில நாட்களுக்கு மழையோ வெள்ளமோ வடிகிற வாய்ப்பில்லை என்றும் மக்கள் தாழ்வான பகுதிகளை விட்டு வெளியேறுமாறும் ரேடியோ அறிவித்தது. மாறுநாள் காலை பத்திரிகைகளில் வெள்ளச் சேதங்களைப் பற்றிய படங்களையும், போலீஸார் படகுகளில் மக்களை மீட்கும் காட்சிகளையும் பார்த்த போது பயங்கரமாயிருந்தது. சேதம் மிக மிக அதிகம் என்பதும் புரிந்தது.

நிதானமாய்க் கண்ணன் யோசித்தபோது தோன்றியது: 'இந்த அம்மிணி அம்மாளுக்கு என்ன தலையெழுத்து? வீட்டையே வெள்ள நிவாரண அகதி முகாம் மாதிரி மாற்றிக்கொண்டு இத்தனை பேருக்குச் சோறு தண்ணி தங்க இடம் எல்லாம் கொடுத்துச் சிரமப்பட்டு என்ன ஆகப் போகிறது? வெள்ளத்தினால் சிறிதும் பாதிக்கப்படாத நகரின் நடு மைய மேட்டுப் பகுதியான போயஸ் கார்டனில் இவளுக்குச் சொந்தமாகக் கோட்டை மாதிரி ஒரு பெரிய பங்களா இருக்கிறது. வெள்ளத்திலிருந்து தப்புவதற்குத் தானும் தன் பெண்களுமாகப் பேசாமல் அங்கே போயிருக்கலாம். அப்படிச் செய்யாமல் இங்கேயே தங்கி இந்த ஜனங்களோடு ஜனங்களாகக் கஷ்டங்களைப் பங்கிட்டுக் கொண்டு இவர்களுக்கு உதவிச் சிரமப்படுவதில்தான் அம்மிணி அம்மாள் போன்ற சூப்பர் ஸ்டார்களின் தாய் மகிழ முடிகிறது என்றால் அவள் வாழ்வில் தான் கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்ததை இன்னும் மறக்கவில்லை என்றுதான் தெரிகிறது. கண்ணனுக்கு இந்த விஷயம் பெரிய ஆச்சரியமாகவே இருந்தது.

"அந்தப் பேட்டையிலே ஏழை எளியவர்களுக்கு நம்ம ரசிகர் மன்றத்தின் சார்பில் உணவுப் பொட்டலம் வழங்கணும். இந்தப் பாக்கத்திலே துணிமணி எல்லாம் வெள்ளத்திலே அடிச்சிட்டுப் போயிடிச்சு. தாய்மார்களுக்குச் சேலையும் ஆண் மக்களுக்கு வேஷ்டியும் வாங்கித் தாணும்"—என்று புலவர் வந்து அவ்வப்போது பணம் வாங்கிப் போய்க் கொண்டிருந்தார்.

கண்ணன் பார்க்க அவன் கண் முன்னாலேயே இந்தக் கொள்ளை நடந்தது. சாதி வித்தியாசம், ஏழை பணக்காரர் வித்தியாசம் பாராமல் தன் வீட்டு மாடியில் வந்து தங்கியிருந்த அத்தனை பேரையும் கவனித்தாள் அம்மிணி அம்மாள். மற்ற இடங்களில் மழை வெள்ளத்தால் நிறைய டெலிஃபோன் வேலை செய்யாமற் போயிருந்தாலும் அம்மிணி அம்மாள் வீட்டு டெலிபோன் மட்டும் அதிர்ஷ்ட வசமாக ஒரு குறையுமின்றிச் சரியாயிருந்தது. அம்மிணி அம்மாளின் மகள் நந்தினி அவளுக்கு மிகவும் வேண்டிய ஒரு டாக்டருக்கு ஃபோன் பண்ணி வரவழைத்தாள். டாக்டர் எங்கேயோ காரை நிறுத்திவிட்டுப் படகில் ஏறி வீட்டு வாசலில் வந்து இறங்க வேண்டியிருந்தது. வேறு யாராவது கூப்பிட்டிருந்தால் டாக்டர் வந்திருக்கவே மாட்டார். அத்தனை சிரமம்.

"இவரை மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ளவேண்டும். இந்தச் சூழ்நிலையில் 'வைரஸ் இன்புளுயன்ஸ்' ஜாஸ்தியாகி ஆபத்தில் கொண்டுபோய் விடமுடிகிற வாய்ப்பு உண்டு. லிக்விட் டயட்தான். பார்லி அல்லது புழுங்கரிசிக் கஞ்சி மட்டும் கொடுங்கள். முழு ஓய்வு வேண்டும்"—என்று சொல்லிக் கண்ணனுக்கு ஓர் ஊசி போட்டு விட்டு மேற்கொண்டு மருந்துகள் சில எழுதிக் கொடுத்துவிட்டுப் போனார் அந்த டாக்டர்.

பயங்கர வெள்ளம் காரணமாக அந்த வட்டாரத்தில் எந்தக் கடைகளும் திறக்கப் படவில்லை. யாரோ ஆளைப் பிடித்துப் பணம் கொடுத்து அனுப்பி மவுண்ட்ரோடு

வட்டாரத்திலிருந்து கண்ணனுக்காக மருந்துகள் வாங்கிவர ஏற்பாடு செய்தாள் நந்தினி. பார்லிக் கஞ்சியும் வேளை தவருமல் அவனது அறையைத் தேடிவந்தது.

கண்ணனுக்கு அந்த உபசாரணைகளின் இடையே இருந்து அவற்றை அநுபவிப்பதற்குப் பதில் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போலிருந்தது. யாரைப் பற்றித் தான் நாக்கில் நரம்பில்லாமல் பேசியும், எழுதியும், வதந்திகளைப் பரப்பியும் வந்தாளோ அவள் கையாலேயே தன்னை உபசரிக்கும்படி இப்படி ஆகிவிட்டதே' என்று நினைக்கும் போதே உடம்பு கூனிக்கூசிக் குறுகியது.

ஆஸ்பத்திரி ஜெனரல் வார்டு போல் மாடிக் கூடத்திலும் வராந்தாவிலும் ஆட்கள் விழுந்து கிடந்த அந்தச் சூழ்நிலையிலும் கண்ணனின் உடல் நிலை கருதித் தனது குளியலறையிணைத்த படுக்கை அறையைத் தனியே விட்டுக் கொடுத்திருந்தாள் நந்தினி. அந்த அறையில் சுகன்யா, குழந்தை கலா, கண்ணன் ஆகிய மூவர் மட்டுமே தனியாகத் தங்கியிருந்தனர். தாங்கள் மட்டும் அப்படித் தனிக் கவனிப்பையும் வசதியையும் அடைவது கண்ணனுக்கு என்னவோ போலிருந்தது. அம்மிணி அம்மாளுடைய குடும்பத்தின் மிக உயர்ந்த குரு ஸ்தானத்திலிருந்த பாகவதரே தமது மனைவி மக்களுடனும் மற்றவர்களுடனும் மாடிக் கூடத்தில் நடுவாக ஒரு பாயை விரித்து எல்லாருடனும் உட்கார்ந்திருக்கும்போது தான் மட்டும் இப்படித் தனியறையில் சொகுசாக அங்கே இருப்பது உறுத்தியது. ஏற்கவும் மனமில்லை, மறுத்து வெளியேறவும் முடியவில்லை. மழை நிற்காததால் மேலும் நீர் மட்டம் உயர்ந்துவிட்டது.

குழந்தைகள் கடைசி மாடிப்படியில் மேலே இருந்தபடியே காகிதக் கப்பல் செய்து கீழே மிதக்க விடுகிற அளவு தண்ணீர் அதிகமாயிருந்தது. நீச்சல் தெரியாதவர்கள் மாடியிலிருந்து கீழே இறங்கவே வழியில்லாமல் போயிற்று. இறங்கி நீந்தி எங்காவது ஓடிவிடலாம் என்றால்கூடக்

கண்ணனுக்கு நீந்தத் தெரியாது. இத்தனை கஷ்டத்திலும் எதுவும் உறைக்காமல், எதுவும் புரியாமல் நிச்சலனமான திருப்தியுடன் காகிதக் கப்பல்களை மிதக்கவிட்டுக் கை தட்டிச் சந்தோஷப்படும் சிறு குழந்தைகளைப் பார்த்துக் கண்ணனுக்குப் பொறுமையாயிருந்தது. ஒருவண்டி பழைய காகிதங்களை எடுத்துக் குவித்து வைத்துக் கொண்டு அந்தக் குழந்தைகளுக்குக் கப்பல் செய்து கொடுத்து அவர்களை உற்சாகப் படுத்திக் கொண்டிருந்த பாகவதரையும் அம்மிணி அம்மாளையும் பார்த்தபோது இன்னும் பொறுமையாக இருந்தது அவனுக்கு. இவ்வளவு பெரிய சிரமங்களுக்கு நடுவில் இந்தக் குழந்தைகளோடு குழந்தைகளாக உட்கார்ந்து இவர்களுக்குக் காகிதக் கப்பல் செய்து கொடுத்துத் திருப்திப் பட்டுக் கொண்டிருக்கும் இவர்கள் மனம் எத்தனை தூரம் அகந்தையின்றிக், களங்கமின்றி, ஆசாபாசமின்றித் தூயதாய் இருக்க வேண்டும் என்பதை நினைத்தபோது இதுவரை அவர்களைத் தப்பாக எடை போட்டுத் தப்பாகவே கருதிய தன் கீழ்மைக் குணத்துக்காக வெட்கப்பட்டான் கண்ணன். மூன்று பகல் மூன்று இரவுகள். மழை விடவும் இல்லை. வெள்ளம் தணியவும் இல்லை. சூரியன் வெளியே முகத்தைக் காட்டவுமில்லை. எங்கும் ஒரே பிரளயம்தான்.

# 20

மின்சாரம் இல்லாததால் மாலையில் ஐந்து ஐந்தரை மணிக்கே இருட்டியது போலாகியது. வீட்டுக்குள் அடைந்து கிடந்தவர்களுக்கு ஒரு மாறுதலாகவும், ஆறுதலாகவும் இருக்கட்டும் என்று பாகவதர் அம்மிணியம்மாள் வீட்டு மாடியில் 'சுபத்ரா கல்யாணம்' கதை சொன்னார்.

அன்று ஜுரம் கொஞ்சம் தணிந்திருந்ததனால் கண்ணனும் கூடத்தில் வந்து எல்லோரோடும் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தான். மெழுகுவத்தியின் மங்கலான வெளிச்சத்தில் அவனைப் பாகவதரும், பாகவதரை அவனும் பார்த்துக் கொள்ள முடிந்தது. கண்ணபெருமானின் விரோதிகள் கம்சன், பிற அசுரர்கள் பற்றிக் குறிப்பிடும்போது பாகவதர் கொஞ்சம் அதிகமாகவே விவரித்தார். "வெறுப்பு, துவேஷம் என்கிற குணங்கள் மனித சமூகத்தை வளர்க்க உதவுபவை அல்ல. அவை நம்மை அறியாமலே நம் மனத்தில் ஏராளமான முள்வேலிகளையும், தடைகளையும் எழுப்பி மிக அருகிலிருப்பவர்கள் மேல்கூட விரோதத்தை வளர்த்து விடுகின்றன. கம்சன் முதலியவர்களும் கண்ணனை எதிர்த்த அசுரர்களும் வெறுப்பிலேயே தங்களைத் தாங்களே முள்வேலிகள் போட்டுப் பிணைத்துக் கொண்டு அதிலேயே சிக்கி முடிவில் பயனின்றி அழிந்து போனார்கள்."

கதைக்குத் தொடர்பில்லாமலே கொஞ்சம் வெளியே விலகி வந்து தனக்காகவே பாகவதர் இந்தக் கருத்தை அழுத்திச் சொல்வது போல் கண்ணனுக்குத் தோன்றியது. அப்போதிருந்த கண்ணனின் மனநிலையில் இக் கருத்து அவனை மிகவும் பாதித்தது. உள்ளத்தை உருக்கியது. தன் இருபக்கத்து வீட்டாரையும் வெறுத்து வெளியே எடுத்த காம்பவுண்ட்டுச் சுவர்களை விடத் தான் தன் மனத்திற்குள்ளேயே தான் போட்டுக் கொண்ட துவேஷம் என்கிற முள்வேலிகள்தான் அதிகமானவை என்று இப்போது அவனுக்கே தெளிவாகத் தோன்றியது.

பாகவதரின் குரல் தொடர்ந்தது: "வெறுப்பு என்பது பாலைவனம். அதில் எதையுமே நல்லதாகப் பயிரிட்டு

வளர்க்க முடியாது! உலகிலிருந்து போகும்போது யாரும் எதையும் தலையில் கட்டி எடுத்துக் கொண்டு போகப் போவதில்லை. இருக்கிற வரை அக்கம் பக்கத்தாருக்கு உதவி செய்து—உதவிகளைப் பெற்று உபகாரியாக வாழ்வதிலுள்ள சந்தோஷம் வேறு எதனாலும் மனிதனுக்குக் கிடைக்கப் போவதில்லை. பொறுமையினால் துவேஷமும், துவேஷத்தினால் சுயநலமும்தான் மாறி மாறி உண்டாக முடியும். துவேஷம் என்பது அசுர குணம். அன்புதான் மனித குணம். கண்ணன் அன்பின் வடிவம் என்றால் கம்சன் வெறுப்பின் வடிவமாயிருந்தான். ஒரு தேவனும் அரக்கனும் அன்பாலும் வெறுப்பாலும்தான் வித்தியாசப் படுகிறார்கள்."

இதை அங்கே மேலும் உட்கார்ந்து கேட்பதற்குக் கஷ்டமாயிருந்தது கண்ணனுக்கு. கேட்டுக் கொண்டிருக்கும் போதே தான் அழுது விடுவோமோ என்றுகூடப் பயமாயிருந்தது. மெதுவாக ஓசைப்படாமல் எழுந்து தன் அறைக்குப் போய்விட்டான் அவன்.

அப்போது அந்த வீட்டில் யாருமே அவன் செய்த கெடுதல்களையும் தீமைகளையும் குத்திக் காட்டிப் பேசவில்லை. அவனை விருந்தினனாக மட்டுமே ஏற்று உபசரித்தார்கள். இது அவனைப் பெரிதும் சங்கடப்படுத்தியது. மனத்தைப் பாதித்து வேதனைக்குள்ளாக்கியது.

மூன்றாவது நாள் மழை ஓரளவு குறைந்து வெள்ளம் சிறிது வடிய ஆரம்பித்தபோதுகூடக் கண்ணனின் வீட்டுக் காம்பவுண்டில் மட்டும் வந்து தேங்கிய வெள்ளத் தண்ணீர் அப்படியே நின்றது. அணை எடுத்துத் தடுத்த மாதிரி அளவு குறையாமல் அது இருந்தபடியே இருந்தது.

காலையில் பாகவதர் வந்து கண்ணனிடம் சொன்னார்: "நீர் நாலு பக்கமும் அணை வச்ச மாதிரி அவுட் லெட் இல்லாமச் சுவரெடுத்துப்பிட்டீர்! வந்த தண்ணி கொஞ்சம் கூட வெளியேறாமல் உம்ம காம்பவுண்டிலே மட்டும் அப்படியே நிக்கறதுக்குக் காரணம் இதுதான்! இப்ப யாராவது ஆள்விட்டு நாலு சுவர்லேயும் கீழாகத் துவாரம் பண்ணி விட்டால்தான் உம்ம காம்பவுண்டிலேயிருந்து தேங்கின தண்ணி வெளியேறும். உம்ம கிட்டக் கேட்டு அனுமதி வாங்கிக்காம அதுக்கு நான் ஏற்பாடு பண்ண முடியாது."

"தாராளமாச் செய்யுங்கோ. எனக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லை" என்றான் கண்ணன்.

பாகவதர் கடப்பாரையும் கம்பியுமாக நாலு கூலி ஆட்களை வரவழைத்துச் சுவர்களில் தண்ணீர் வெளியேற ஓட்டை போட முயலுகையில் எதிர்பாராத விதமாக ஈரத்தில் ஊறியிருந்த அந்தச் சுவர்களே டமாலென்று சரிந்து விழுந்து விட்டன. மட்டமான சிமெண்டில் நல்ல ஆழமான அஸ்திவாரம் இல்லாமல் கட்டப்பட்டிருந்த அந்தச் சுவர்கள் விழுந்ததும் பாகவதர் பதறிப்போனார். கண்ணனிடம் ஓடி வந்து, "என்னைத் தப்பா நெனைக்காதீங்கோ மிஸ்டர் கண்ணன்! ஆட்கள் தொட்டதுமே சுவர் விழுந்துடுத்து. நீங்க கோவிச்சுக்கறதா இருந்தால் அதைத் தொட்ட குத்தத்துக்காக என் செலவிலே நானே புதுச் சுவர் வேணா எடுத்துக் குடுத்துடறேன்."

"பரவாயில்லை! சுவர் விழுந்ததைப் பத்தி ஒரு வருத்தமும் பட வேண்டாம். நம்ம வீடுகளுக்கு நடுவில் இனிமேல் சுவர்களே வேண்டாம்னு நினைக்கிறேன்."

“நீங்க கஷ்டப்பட்டுப் பணம் கடன் வாங்கிக் கட்டின சுவர்களாச்சே?”

“என்ன செய்யறது? கஷ்டப்பட்டுத்தான் ஒவ்வொரு கெட்ட காரியத்தையும் கூடத் தெரியாமச் செய்துடறோம்.”

பாகவதருக்கு அவன் மனநிலை புரிந்தது.

“இடித்து ஓட்டை பண்ணினாலொழியத் தண்ணி வெளியேற வழியில்லை. தேங்கி நாறப் போறதேன்னு இதைப் பண்ணச் சொன்னேன். அது இப்படி ஆயிப் போச்சு. பிள்ளையார் பிடிக்கக் குரங்காகப் போயிடுத்து” என்று மீண்டும் வருத்தப்படத் தொடங்கிய பாகவதரைக் கண்ணன் தன் நிதானமான, சாந்தமான பதிலால் மெல்ல ஆறுதலடையச் செய்தான்.

“இதிலே வருத்தப்படறதுக்கு ஒண்ணுமே இல்லை! நானே ஒரு வீம்புக்காக அவசர அவசரமாகக் கட்டின சுவர் அது. இப்போ நினைச்சா எனக்கே பைத்தியக்காரத்தனமாப் படறது.”

“வெள்ளம் வடிஞ்சப்புறம் என் செலவிலேயே வேணும்னு ரெண்டரை அடி உயரத்துக்கு ஒரு சுவர் எடுத்து மேலே பாரர்ப்பட் வயர் கட்டித் தடுத்துக் குடுத்துடறேன். ரெண்டு பேருமே கவலையை விடுங்கோ” என்று சிரித்துக் கொண்டே அவர்களிடம் வந்து சொன்னாள் அம்மிணி அம்மாள்.

“இருக்கிற முள் வேலியையே அகற்றணும்னு பாகவதர் கதையிலே சொன்னார். நீங்க என்னடான்னா புதுசு புதுசா முள் வேலி போடணும்கிறீங்களே?” இது கண்ணன்.

இதைக் கேட்டுப் பாகவதர், அம்மிணி அம்மாள், சுகன்யா மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்து அர்த்தபுஷ்டியோடு சிரித்துக் கொண்டனர்.

"அது தண்ணியோ, பழைய விரோதமோ, அவுட்லெட் இல்லாம ரொம்ப நாள் உள்ளேயே தேங்கினா அழுகி நாறத்தான் நாறும்" என்று கண்ணன் தனக்குள் முணு முணுத்துக் கொண்டான்.

வெளியே மாடிப்படி அருகில் குழந்தைகள் தண்ணீரில் காகிதக் கப்பல்கள் செய்துவிட்டுக் கொண்டு கும்மாளம் அடித்துக் கொண்டிருந்தன.

நான்கு நாட்களாக வராமலிருந்த மின்சாரம் வந்து திடீரென்று எல்லா விளக்குகளும் பளிச்சென எரிந்தன. ரேடியோ திடுதிப்பென்று பாட ஆரம்பித்தது. கண்ணன் ஜன்னல் வழியே தன் வீட்டை எட்டிப் பார்த்தான்.

காம்பவுண்டுச் சுவர்கள் விழுந்து நாலு பக்கமுமே வழி ஏற்பட்டிருந்ததால் தண்ணீர் முற்றாக வடிந்து கீழே தரை தெளிவாகவும் நன்றாகவும் தெரிய ஆரம்பித்திருந்தது.

★

# சுலட்சணா காதலிக்கிறாள்

## 1

பட்ட மேற்படிப்புக்காகத் தனியே ஏற்படுத்தப்பட்டிருந்த பல்கலைக் கழக நூல் நிலையத்தில்தான் சுலட்சணாவை அவன் முதல் முதலாகச் சந்திக்க நேர்ந்திருந்தது. அந்தப் பல்கலைக் கழகத்தில் இரண்டு தனித்தனி நூலகங்கள் இருந்தன.

எல்லாருக்கும் எல்லாவகையிலும் எப்போதும் பயன் படுகிற பொதுவான பெரிய நூலகம் ஒன்று. மேற்பட்டப் படிப்புப் படிக்கிற மாணவர்களுக்கும் கற்பிக்கிற பேராசிரியர்களுக்கும் மட்டும் பயன்படுகிற 'போஸ்ட்-கிராஜுவேட்ஸ் லைப்ரரி' என்னும் சிறப்பு நூலகம் மற்றொன்று. குளுகுளுவென்று ஒரு சூழ்நிலை நிலவும் அங்கே.

இந்தச் சிறப்பு நூலகம் மரங்களடர்ந்த சோலை போன்ற பகுதியில் ஓர் ஏரிக்கரையிலே அமைந்திருந்தது. எந்நேரமும் ஜிலு ஜிலு என்று காற்று வரும். வெளி உலகின் சத்தங்களும் ஆரவாரச் சந்தடிகளும் கேட்காத இடம் அது. போய் உட்கார்ந்தால் கண்களைச் சொருகிக்கொண்டு தூக்கம் வரும்.

இதனால் மாணவர்கள் இந்த நூல் நிலையத்துக்கு 'வசந்த மண்டபம்' என்று செல்லமாகப் பெயர் வைத்திருந்தார்கள். மற்றொரு நூலகம் அரை வட்டவடிவில் மூன்றடுக்கு மாளிகையாகக் கட்டப்பட்டிருந்தாலும் அங்கே காற்று மருந்துக்கும் கூட வராது. சுற்றி மரம் செடி கொடிகளும் அறவே இல்லை.

அதற்குச் 'சுண்ணும்புக் காளவாய்' என்று கடுமையாகப் பெயர் சூட்டப் பட்டிருந்தது.

எதற்கும் விரைந்து மனத்தில் பட்டதை அப்படியே பிரதி பலிக்கும் வகையில் உடனே பெயர் வைத்து அழைத்து விடுவது என்பது மாணவப் பருவத்துக்கே உரிய உற்சாகங் களில் ஒன்று. பேராசிரியர்கள், கட்டிடங்கள், ஹாஸ்டல் உணவுப் பண்டங்கள், சக மாணவ மாணவியர் எல்லாருக்கும் எல்லாவற்றிற்கும் பகிரங்கமாகவோ இரகசியமாகவோ காரண-இடுகுறிப் பெயர்கள சூட்டி அப்பெயர்களை வழக்க மாக்கியும், பிரபலப்படுத்தியும் மகிழ்வது அந்த வயதின் உற்சாகங்களிலே தலைசிறந்ததாயிருக்கும்.

உதயா பல்கலைக்கழக மாணவர்களும் அப்படி ஓர் உற்சாகத்தோடுதான் பெயர்கள் சூட்டியிருந்தார்கள். அந்தப் பெயர்கள் வெறும் பெயர்களாக மட்டுமில்லாமல் சம்பந்தப் பட்டவற்றைப் பற்றிய உண்மை அபிப்ராயங்களாகவும் விமர்சனங்களாகவும் சில சமயங்களில் கண்டனங்களாகவும் கூட இருந்தன. எப்படியாயினும் அநதப் பெயர்களில் அவற்றை வைத்தவர்களின் இரசனை புலப்படும்.

சுலட்சணாவும், கனகராஜூம் பொருளாதார மாணவர்கள் சனி, ஞாயிறு விடுமுறைகளில் மாணர்கள் படித்துப் பயனடைய வேண்டும் என்பதற்காக ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் பொருளாதாரப் பேராசிரியர் சில புத்தகங்களின் பெயர்களை மாணவர்களுக்குச் சொல்லுவார். மாணவர்கள் போஸ்ட் கிராஜூவேட்ஸ் லைப்ரரியில் போய் அவற்றை எடுத்துப் படிக்கவேண்டும்.

திங்கட்கிழமை வகுப்பில் மறுபடி பேராசிரியர் பரீட்சை யைப் போல இல்லாமல் பொதுவாக அந்தப் புத்தகங்களை எல்லாம் மாணவர்கள் தேடிப் படித்தார்களா இல்லையா எனபது பறறி விசாரித்தறிவார். படித்தவர்களை உற்சாக மூட்டும் வகையில் இண்டேர்னல் அசெஸ்மெண்ட் மார்க்கு

கள் உண்டு. புத்தகத்தைப் படித்த மாணவர் வகுப்பில் அதைச் சுருக்கமாக விமர்சிக்க வேண்டும்.

இப்படி ஒரு வெள்ளிக் கிழமை மாலையில் ஒரே புத்தகத்தைத் தேடிக்கொண்டு போனபோதுதான் சுலட்சணுவும், கனகராஜும் சந்தித்துக் கொண்டார்கள்.

பொதுவாகப் போஸ்ட்கிராஜுவேட்ஸ் நூலகத்தில் ஒவ்வொரு புத்தகமும் இரண்டு முதல் நான்கு பிரதிகள் வரை இருக்கும். ஆசிரியர்கள், மாணவர்கள் எல்லாருக்கும் ஒரே சமயத்தில் கொடுக்க வேண்டியிருப்பதால் இந்த ஏற்பாடு செய்திருந்தார்கள். இருந்தும் சமயா சமயங்களில் பலர் ஒரே நேரத்தில் ஒரே புத்தகத்தைத் தேடிக்கொண்டு வர அந்த ஒரே புத்தகத்தின் ஒரு பிரதி மட்டும் அங்கே இருக்க நேர்ந்து அதை யாருக்குத் தருவது என்ற தர்மசங்கடம் லைப்ரேரியனுக்கு ஏற்பட்டிருக்கிறது.

அன்றும் சுலட்சணுவும்-கனகராஜும் ஒரே புத்தகத்தைத் தேடிவந்தபோது பல்கலைக்கழக நூலகருக்குத் தர்ம சங்கடமான நிலைமைதான் ஏற்பட்டது. இருக்கிற ஒரு பிரதியை இருவரில் யாருக்குத் தருவது? இருவருமே தங்களுக்கு வேண்டும் என்பதை வற்புறுத்தினுர்கள். இருவரில் யாரும் விட்டுக்கொடுக்கத் தயாராயில்லை. 'நான் தான் நீங்கள் சொல்லிய புத்தகத்தை முதலில் படித்தேன்'-என்று பேராசிரியரிடம் போய்ப் பீற்றிக்கொள்ளும் வாய்ப்பை இருவருமே இழக்க விரும்பவில்லை.

"'லேடீஸ் ஃபர்ஸ்ட்'-னு மரபேஇருக்கு" என்று புன்னகையோடு மெல்லத் தொடங்கித் தன்னுடைய முன்னுரிமையை நிறுவ முயன்ருள் சுலட்சணு. கனகராஜும் விடவில்லை. "இருக்கலாம்! அதெல்லாம் இந்திய மரபு இல்லை. ஆங்கில மரபு. நம்ம யூனிவர்ஸிடி அமெரிக்காவிலியோ ஐரோப்பாவிலியோ இல்லை. இந்தியாவிலேதான் இருக்கு. இங்கே லைப்ரேரியனுடை டெஸ்குக்கு முன்னடி ரெண்டு பேரும் ஒரே

சமயத்துக்கு வந்தோம்னாலும் லைப்ரரிக்குள்ளே நான் நுழைஞ்சு ரெண்டுமணி நேரத்துக்கு மேலே ஆச்சு. நீங்க ஜஸ்ட் இப்பத்தான் உள்ளே நுழைஞ்சீங்க...''

உடனே லைப்ரேரியன் அவனைக் குறுக்கு விசாரணை செய்தார்:

''நீங்க ரெண்டு மணி நேரத்துக்கு முன்னாடியே லைப்ரரியிலே நுழைஞ்சதுக்கு என்ன அத்தாட்சி?''

''லைப்ரரி ரிஜிஸ்டர்லே கையெழுத்துப் போட்டிருக்கேன் சார்.''

லைப்ரேரியன் உடனே எழுந்திருந்து போய் அங்கே உள்ளே நுழைகிற முகப்பில் வைக்கப்பட்டிருந்த ரஜிஸ்தரை நோட்டம் விட்டுவிட்டு அவன் சொல்லியதை உறுதிப்படுத்திக் கொண்டு வந்தார்.

''மிஸ் சுலட்சணா! தயவு செய்து நீங்க என்னை மன்னிக்கணும்! மிஸ்டர் கனகராஜ் கையெழுத்துப் போட்டிருக்கும் ஸீரியல் நம்பர் நாற்பத்திரெண்டு. நீங்க கையெழுத்துப் போட்டிருககிற சீரியல் நம்பர் அறுபத்தி ஏழு. ரிஜிஸ்டர்படி அவர்தான் முன்னாடி லைப்ரரிக்குள் வந்திருக்கார்னு உறுதிப் படுது.'

''அதுக்காக...?''

''இந்த 'புக்'கை கிளெய்ம் பண்றதிலே மிஸ்டர் கனகராஜுக்கு ப்ரயாரிட்டி இருக்கு.'' சுலட்சணா தான் அவனுக்காக விட்டுக்கொடும்படி ஆயிற்று. விட்டுக்கொடுத் தாள். அவனுக்குத்தான் வெற்றி.

புத்தகத்தை அவன் எடுத்துக் கொண்டு போனான். அவள் வெறுங்கையோடு திரும்பினாள். போகிற போக்கில், 'ஐயாம் வெரி சாரி சுலட்சணா!'—என்று அவளிடம் நுனி நாக்கால் வருத்தம் தெரிவித்து விட்டுப் போனான் கனகராஜ்.

தன்னைப்போல் ஒரு பெண்—சக மாணவி—கெஞ்சியும் கனகராஜ் விட்டுக்கொடுக்க முன்வராததோடு பெருந்தன்மையாக நடந்துகொள்ளவும் இல்லை என்று தோன்றியது சுலட்சணாவுக்கு. இந்தச் சிறிய விரோதம் ஒரு மனத்தாங்கலாகவே அவளுக்குள் தங்கி உறைந்து போயிற்று. ஒரு பெண்ணிடம் ஆண் காட்ட வேண்டிய இங்கிதத்தை அவன் காட்டத் தவறிவிட்டதாகவே அவள் நினைத்தாள்.

பொருளாதார எம். ஏ. முதலாண்டு வகுப்பில் டேஸ்காலர்களாகப் பதினெட்டுப் பேர்தான் சேர்ந்திருந்தார்கள். இந்தப் பதினெட்டுப்பேரில் சுலட்சணா உட்படப் பெண்கள் ஏழுபேர். ஆண்கள் பதினொருவர். மாணவர்களில் மிகவும் 'ஸ்மார்ட்' என்று பெயரெடுத்தவன் கனகராஜ். பெண்களில்—அதாவது—மாணவிகளில் மிகவும் அழகானவள் என்று மட்டுமில்லாமல்—சூட்டிகையானவள் என்றும் பெயரெடுத்தவள் சுலட்சணாதான்.

எங்கும் எதிலும் தனக்கு ஒரு முகராசி உண்டு என்ற நம்பிக்கையோடு துணிந்து முயல்கிறவள் அவள். பல சந்தர்ப்பங்களில் பல காரியங்களில் அவள் நினைத்தது நினைத்தபடியே நடந்திருக்கிறது. இன்றும் அப்படி நடந்திருக்கமுடியும். ஆனால் அந்தப் பாழாய்ப்போன லைப்ரேரியன் அதற்கு ஒத்துழைக்கவில்லை. 'ஃபர்ஸ்ட் கம் ஃபர்ஸ்ட்' என்று எதையோ சொல்லிப் புத்தகத்தைக் கனகராஜிடம் எடுத்துக் கொடுத்து விட்டார். இதில் நூலகர் மேலும் அவளுக்கு வருத்தம்தான். தன்னுடைய வாய்ப்பு நழுவிப் போக முன் நின்று உதவியவர் அவர்தான் என்று நினைத்தாள் அவள்.

அந்தப் பல்கலைக்கழகத்தில் பொருளாதாரத் துறை மிகவும் புகழ்பெற்றது. நாட்டின் பொறுக்குமணிகளான பல பொருளாதார நிபுணர்கள் மாணவப் பருவத்தில் அங்கு உருவானவர்கள்தான். முதல்பட்டத்தில்—அதாவது ஃபர்ஸ்ட் டிகிரியில் பொருளாதாரத்தில் கணிசமான மதிப்பெண்கள்

பெற்ற மாணவ மாணவிகளைத்தான் போஸ்ட் கிராஜுவேட் வகுப்பில் சேர்த்துக் கொண்டார்கள்.

மாணவர்களின் அதிகபட்ச அளவு இருபது என்றிருந்தாலும் பதினெட்டுக்குமேல் சேர்ப்பதே இல்லை. பிரமாதமான புகழ் பெற்ற பேராசிரியர்கள் பொருளாதாரத்துறையில் பணிபுரிந்தார்கள். முதல் வகுப்பு, ரேங்க்—யூனிவர்ஸிடி அவுட்ஸ்டாண்டிங்—இவற்றை அடைய மாணவர்களிடையே

மாநிலத்தின் பல பகுதிகளிலிருந்தும் பெரிய பெரிய குடும்பங்களில் இருந்து மாணவர்கள் வந்து தங்கிப் படித்தார்கள். கனகராஜ் சேலத்தில் யாரோ ஒரு பெரிய தொழிலதிபரின் ஒரே மகன் என்று மட்டும் சுலட்சணு கேள்விப்பட்டிருந்தாள். கனகராஜ் பல்கலைக் கழக நேரம் தவிர முக்கால்வாசி நூல்நிலையத்திலேயே பொழுதைக் கழித்ததால் கேட்ட கேள்விக்கு உடனே பதில் சொல்கிற ஞானமும் எல்லா இண்டேர்னல் அஸெஸ்மெண்ட்டிலும் முதல் மதிப்பெண் பெறுகிற திறமையும் அவனுக்கு இருந்தது.

'இந்தக் காலத்தில் பெண்கள்தான் கெட்டிக்காரத் தனமாகப் படிக்கிருர்கள்'—என்ற பொதுமதிப்பீட்டையும் மீறி ஆண்பிள்ளையாகிய கனகராஜ் எதிலும் நம்பர் ஒன்ருக முன் நின்ருன். சுலட்சணுவுக்குக்கூட இது பெரிய ஆச்சரியமாக இருந்தது. உண்மையில் அவன் அவளுக்கு ஒரு சவாலாகவே வாய்த்திருந்தான். பல்கலைக்கழக ரேங்க்—அல்லது டிஸ்டிங்க்ஷன் அவனுக்கே போய்விடுமோ என்றுகூட அவள் இரகசியமாகக் கவலையும் பொருமையும் கொண்டிருந்தாள்.

இந்த மாதிரி அத்தியாவசியமான புத்தகங்களில் நாலைந்து பிரதிகளாவது வாங்கி லைப்ரரியில் அடுக்கி இருக்

வேண்டாமா என்று பல்கலைக்கழக நிர்வாகத்தின் மேல் கூட அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது.

அந்த முறையும் 'எக்ஸ்ட்ரா கரிகுலர் ரீடிங்'குக்கான இண்டெர்னல் மதிப்பீட்டில் கனகராஜ்தான் முதல் மாணவனாக வரப்போகிறான் என்ற குமுறலோடுதான் அன்று மேற்பட்டப் படிப்பு நூலகத்திலிருந்து அவள் வெளியேறியிருந்தாள்.

ஆனால் இந்தக் குமுறல் எல்லாம் மாலை ஆறுமணிவரைதான். ஆறு மணிக்கு மாணவர் விடுதியைச் சேர்ந்த பையன் ஒருவன் அவளைத் தேடி வந்து ஒரு சிறு கடிதத்தையும், பகலில் நூல்நிலையத்தில் அவளுக்குக் கிடைக்கவிடாமல் கனகராஜ் தட்டிக்கொண்டுபோன அந்தப் புத்தகத்தையும் கொடுத்தபோது அவளுக்கு முதலில் வியப்பும் பின்பு கனகராஜ் மேலும் அவன் குடும்பத்தினர் மீதும் அநுதாபமும் ஏற்பட்டன.

"மிஸ் சுலட்சணா! என் தாய் மிகவும் சீரியஸாய் இருக்கிறாள் என்று என்னை உடனே அழைத்து வரச் சொல்லித் தந்தை கார் அனுப்பியிருக்கிறார். நான் இந்த விநாடியே சேலம் விரைகிறேன். புத்தகத்தை நீங்களாவது படித்துப் பயன்படுத்தித் திங்கள் கிழமை இண்டர்னல் அசெஸ்மெண்ட் மதிப்பெண்களைப் பெற வேண்டுகிறேன்—" என்று கடிதத்தில் எழுதியிருந்தான் கனகராஜ்.

சுலட்சணாவுக்கு உடனே அவன் மேலிருந்த கோபம் எல்லாம் போய், பொறாமை எல்லாம் கழன்று, ஐயோ பாவம்! இத்தனை பதற்றமான சூழ்நிலையிலும் புத்தகம் கிடைக்காததால் நான் அடைந்த ஏமாற்றத்தை ஞாபகம் வைத்துக்கொண்டிருந்து தனக்குப் பயன்படாமற் போனது எனக்காவது பயன் படட்டும் என்ற எண்ணத்தோடு சிரத்தையாகக் கொடுத்தனுப்பியிருக்கிறாரே"—என்று அவன்மேல் அநுதாபமாகவும் அன்பாகவும் மாறியது. 'படிக்கிற—நன்றாகப்

படிக்கிற ஒரு மாணவரின் சிரமங்கள் கேலிக்குரியதாகப் படாமல்—நன்றாகப் படிக்கிற மற்றொரு மாணவருக்குத்தான் சீரியஸ்ஸாகப் புரிய முடிகிறது'— என்று உணர்ந்தாள் சுலட்சணா.

அத்தனை பரபரப்பிலும் ஆளைத் தேடிப் புத்தகத்தையும் கடிதத்தையும் தன்னிடம் ஒப்படைக்குமாறு சொல்லி அவன் ஏற்பாடு செய்துவிட்டுப் போயிருக்கிற பாங்கு அவளைக் கவர்ந்தது. 'சின்ன விஷயங்களைக்கூட ஞாபகம் வைத்துக் கொள்ள முடியாதவர்கள் பெரிய மனிதர்களாகும் வாய்ப்பை இழக்கிறார்கள்'—என்ற மேற்கோள் வாசகம் சுலட்சணாவுக்கு நினைவு வந்தது. அவள் கனகராஜின் சிரத்தையை நேசித்தாள்.

## 2

உதயா பல்கலைக் கழகம் ஒரு 'ரெஸிடென்ஷியல் யூனிவர்ஸிடி.' போஸ்ட் கிராஜுவேட் ஸ்டடீஸ், எம். ஃபில்., பி.எச்.டி. தவிர மற்றவற்றை அங்கே சேர்ந்துதான் படித்தாக வேண்டும் என்கிற நிர்ப்பந்தம் இல்லாமல், ஓபன் யூனிவர்ஸிடி திட்டத்தின் கீழோ, தபால் முறைக் கல்வி மூலமோ படிக்கலாம். அதனால் பல்கலைக் கழக எல்லையில் பரபரப்புக் குறைவு.

மருத்துவப் பட்டப்படிப்புப் படிக்கும் எண்பது பேர், எஞ்சினியரிங் வகையில் ஒரு நூற்றைம்பது, விவசாயப் பாடத்தில் மேற்பட்டத்துக்கான நூறு பேர், ஆர்ட்ஸ், சயின்ஸ் வகையில் ஏறத்தாழ இருநூறு என்று தங்கிப்படிக்கும் மொத்த மாணவர் எண்ணிக்கையே ஐநூறு அல்லது அறுநூறைத் தாண்டாது. மொத்தம் ஐந்து ஹாஸ்டல்கள். எண்ணூறு ஏகர் நிலப்பரப்பில் ஒரு பெரிய காம்பஸ். தென்னை, மா, பலா என்று ஒரே சோலை மயமாக இருந்தாலும்—சில பகுதிகள் உள்ளேயே வெட்டவெளியாகவும் இருந்தன.

காம்பஸுக்குள் இரண்டு மூன்று கண்மாய்களும், ஏரிகளும் தற்செயலாகச் சிக்கி இருந்தன. ஏரிகள் கண்மாய்களை ஒட்டிய பகுதி பசுஞ்சோலையாகவும், மற்ற இடங்கள் பொட்டலாகவும் இருக்கும். பல்கலைக் கழகங்களுக்குரிய போராட்டங்கள், பிணக்குகள், பூசல்களைத் தவிர்ப்பதற்காகவே காம்பஸுக்குள் ஐநூறு அறுநூறு மாணவர்களுக்கு மேல் தங்காதபடி பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனாலும் கோ-எஜுகேஷன் இருந்ததாலும், வேறு சில பிரச்னைகள் அவ்வப்போது கிளம்பியதாலும், சிறு சிறு சண்டை சச்சரவுகள் ஏற்படத்தான் செய்தன.

கலைப்பிரிவு மாணவர்களுக்கும் சயின்ஸ் பிரிவு மாணவர்களுக்கும் தகராறு. விவசாயப் பிரிவு மாணவர்களுக்கும் பொறியியல் பிரிவு மாணவர்களுக்கும் போர், மருத்துவப் பிரிவு மாணவர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நிர்வாகிகளுக்கும் போர் என்றெல்லாம் பூசல்கள் அவ்வப்போது வெடிக்கத்தான் செய்தன. காம்பஸுக்கு உட்பட்ட பிரச்னைகள் காரணமாக சில சமயங்களிலும் காம்பஸுக்கு வெளியே உண்டாகும் மாநில அளவிலான பிரச்னைகள் காரணமாகச் சில சமயங்களிலும் மாணவர்களிடையேயும் ஆர்ப்பாட்டங்கள், போராட்டங்கள், ஊர்வலங்கள் கிளம்பின.

இன்றைய மாணவன் என்பவன்—அதாவது இருபத்து ஒன்றுவது நூற்றுண்டுக்குள் அடியெடுத்து வைக்கத் தயாராகக் காத்திருக்கும் இளைய தலைமுறையைச் சேர்ந்த ஒருவன் தன்னைச் சுற்றி நிகழும் தேசிய சர்வதேசியப் பிரச்னைகளைக் கவனிக்காமலும் அவை பற்றிக் கவலைப்படாமலும் புத்தகங்களிலோ, வகுப்பறைகளிலோ மட்டுமே தன்னைப் புதைத்துக் கொண்டு பாராமுகமாக இருந்துவிட முடியாது. அவன் பிரச்னைகளைப் பாராமுகமாக இருப்பதும் சாத்தியமில்லை. பிரச்னைகள் அவனைப் பாராமுகமாக விட்டுவிடுவதும் சாத்தியமில்லை. எல்லார் மேலுமாகப் படுகிற காற்றில், மழையில், வெயிலில், பனியில் அவனும் பாதிக்கப்பட்டுத்தான் ஆக வேண்டும். இன்றைய சமூக அரசியல்

பிரச்னைகள் மழையையும் காற்றையும் போலத்தான். அவை சிலரை நீக்கிவிட்டுப் பெய்வதோ, விலக்கிவிட்டு வீசுவதோ நிச்சயமாக இயலாத காரியம். எவ்வளவோ திறமாகவும், தரமாகவும் சாமர்த்தியமாகவும் நிர்வகிக்கப்பட்டு வந்த உதயா பல்கலைக்கழகமும் அந்தத் தலைமுறையின் பிரச்னைகளான காற்று மழைகளுக்குத் தப்ப முடியவில்லை.

வெளிப் பிரச்னைகளான காற்றும் மழையும் தவிர மாணவிகள் படித்துவந்ததனால் காதல் பிரச்னைகளாலும் சிறு சிறு தகராறுகள் அவ்வப்போது மூண்டன. மாணவர்கள் சம்பந்தப்பட்ட விடுதிகள் இருந்த பகுதிக்கும் மாணவிகள் சம்பந்தப்பட்ட விடுதிகள் இருந்த பகுதிக்கும் நடுவே இரண்டு கிலோ மீட்டர் தொலைவு காம்பஸுக்குள்ளேயே இருந்தது. மாணவிகள் விடுதிகள் இருந்த பகுதியைச் சுற்றித் தற்செயலாக அகழி போல் ஒரு பெரிய வாய்க்கால் - அதன்பின் பெரிய காம்பவுண்டு மதிற் சுவர்-இரண்டரைக் கிலோ மீட்டர் தொலைவு, இத்தனையும் இருந்தும் காதல்களும் அவை பற்றிய போட்டிகள் பூசல்களும் இருக்கவே செய்தன. அவை தொடர்பான பிரச்னைகளும் எழுந்தன.

இத்தனைக்கும் பெண்கள் விடுதிகள் சம்பந்தப்பட்ட வார்டன், வாட்ச்மேன், உணவுவிடுதியில் சமைப்பவர், பரிமாறுபவர் உட்பட அனைவரும் பெண்களாகவே நியமிக்கப் பட்டிருந்தனர். ஆனாலும் என்ன? வகுப்புக்களில், நூல் நிலையங்களில், லேபரெட்டரி முதலிய ஆராய்ச்சிச் சாலைகளில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து பழகத்தானே வேண்டியிருந்தது?

ஆண்களும், பெண்களும் நெருங்கிப் பழகி அதனால் வம்புகள் வருவதை நான்கு இடங்களில் தடுத்தார்கள் என்றால் நாற்பது இடங்களில் அப்படிப் பழகுவது தவிர்க்கப் படமுடியாமல் இருந்தது. அங்கெல்லாம் காதல்கள், ஆசைகள், ஒருதலைக் காதல்கள், இருவர் பிரியத்தை எதிர்க்கும் மூன்றுமவரது அசூயை எல்லாம் ஏற்படுவதைத் தவிர்க்கவே முடியாமல் போயிற்று. மாணவர்களும் மாணவிகளும

சந்தித்துப் பழகுமிடங்களில் மிகவும் முக்கியமானதாக 'வசந்த மண்டபம்' என்று செல்லமாக அழைக்கப்பட்ட 'போஸ்ட் கிராஜுவேட்ஸ் லைப்ரரி' விளங்கியது. இந்த நூல் நிலையத்தில் ஒரு விரோதமான சூழ்நிலையில் கனகராஜும், சுலட்சணாவும் சந்தித்துக் கொண்டாலும் பின்பு மெல்ல மெல்ல அந்த விரோதம் மாறி நட்பாகியது.

திடீரென்று தன் தாய்க்கு உடல்நிலை மோசமாகி விட்டது என்று ஊர் சென்ற கனகராஜ் தாயை இழந்து பதினைந்து நாட்களுக்குப் பின்தான் மறுபடி பல்கலைக்கழகம் திரும்பினான். மொட்டைத் தலையும் அதை மறைக்கும் ஃபர் குல்லாயும், சோகம் தேங்கிய முகமுமாகத் திரும்பியவனைச் சுலட்சணா தானே தேடிச் சென்று சந்தித்து அவன் தாய் இறந்தது பற்றித் துக்கம் விசாரித்துத் தன் அநுதாபங்களைத் தெரிவித்தாள். ஊருக்குப் போவதற்குமுன் அவன் ஞாபகமாகப் புத்தகத்தைத் தனக்குக் கொடுத்து அனுப்பியதைப் பாராட்டினாள். தனக்கு அதனால் பேராசிரியரிடம் நல்ல பெயரும் இன்டேர்னல் அஸெஸ்மென்டில் மதிப்பெண்களும் கிடைத்ததை நன்றியுணர்வோடு அவனிடம் சொன்னாள்.

அதன் பின் நூல் நிலையத்திலும் பல்கலைக் கழகப் பொடானிகல் கார்டனாக விளங்கிய பூங்காவிலும் அவர்கள் தொடர்ந்து சந்தித்தார்கள். பேசினார்கள், பழகினார்கள். பாடம், வகுப்பு, அகடெமிக் விஷயங்கள் பற்றியும், திரைப் படம், அரசியல், இலக்கியம், பத்திரிகைகள் எல்லாம் பற்றியும் பேசினார்கள், விவாதித்தார்கள். சில கருத்துக்களில் ஒன்றுபட்டார்கள். பலவற்றில் வேறுபட்டார்கள்.

சிலவற்றில் இருவர் இலக்குகளும் வேறு வேறு திசையாயிருந்தன. கனகராஜும் அவளும் நெருங்கிப் பழகினாலும் அவர்களிடையே அடிப்படை வேறுபாடுகள் நிறைய இருந்தன. கனகராஜ் எல்லாவற்றிலும் ஒரு 'ஃபண்டமெண்டலிஸ்ட்' ஆக இருந்தான். பயந்து பயந்து பழகினான்.

'ஜட்காவில்' பூட்டிய குதிரைபோல் கண்களுக்கு மூடியிட்டுக் கொண்டு பாடம்—படிப்பு—மார்க்குகள்—டிஸ்டிங்ஷன் என்று ஒரே திசையில் மட்டும் பார்க்கப் பழகியிருந்தான். கவலை தெரியாமல் வளர்க்கப்பட்ட 'சுயநலத்தில் அக்கறையும் பற்றுமுள்ள' சராசரியான பணக்காரக் குடும்பத்து இளைஞனாக இருந்தான். அவனுடைய பயங்களையும் அறியாமைகளையும் பார்க்கும்போது சிலவேளைகளில் சுலட்சணாவுக்குச் சிரிப்புக்கூட வரும்.

ஒரு முறை அவள் நூலகத்தில் 'மார்க்ஸையும் ஏங்கெல்ஸையும்' பற்றிய விமர்சன நூல் ஒன்றைப் படிக்க எடுத்தபோது, "நீங்க கம்யூனிஸ்டா?"—என்று பயந்து கொண்டே தணிந்த குரலில் அவளைக் கேட்டான் கனகராஜ். "மார்க்ஸையும் அவரது நண்பர்களையும் பற்றி ஆழ்ந்த அக்கறையோடு படிப்பதற்கு ஒவ்வொரு பொருளாதார மாணவனும் கடமைப்பட்டிருக்கிறான்" என்றாள் அவள்.

அதற்கு அவன் சொன்ன பதில் இன்னும் விநோதமாயிருந்தது. "இதையெல்லாம் படிப்பது நம்ம புரொபஸருக்குப் பிடிக்காது."—

"புரொபஸருக்குப் பிடிக்காத நல்ல விஷயங்கள் பல இருக்கலாம். அவை நமக்கும் பிடிக்காமல் போக வேண்டுமென்ற அவசியமில்லை மிஸ்டர் கனகராஜ்!"

"எங்கப்பாவுக்கும் இதெல்லாம் பிடிக்காது. பாடத்தை மட்டும் படி! கண்டதைத் தொடாதே என்பார்."

"ஒருதலைப்பட்சமான ஞானம் என்பது ஃபாஸிஸத்தை விட மோசமானது. நமக்கு உடன்பாடில்லாதது நல்லதாயிருந்தாலும் அதைப் பார்க்கவே மாட்டேன் என்பது கோழைத் தனம்—"

"ஞானத்துக்காக நாம் யூனிவர்சிடிக்குள்ளே வரலே. ஃபர்ஸ்ட் கிளாஸ்லே டிஸ்டிங்ஷனோடே பாஸ் பண்ணி நல்ல

ஸ்டூடென்டுன்னு பேர் வாங்கி முன்னேறுவதற்காகத்தான் வந்திருக்கோம்''—

''நீங்க இப்பிடிச் சொல்றதைக் கேட்டு உங்களுக்காக அநுதாபப்படறேன் மிஸ்டர் கனகராஜ்! எம். ஏ. படிக்கிற கிணற்றுத் தவளைகளும் நம்ம நாட்டிலே இருக்காங்கன்னு தெரியறப்ப ரொம்ப வருத்தமாத்தான் இருக்கு.''

''கிணறுதான் தவளைக்குப் பாதுகாப்பான இடம். கிணறுகளில் இருக்கிறவரை சுகம்தான். கிணறுகளை விட்டு வெளியே வந்து உயிரிழக்கும் ஆபத்துகளைச் சந்திக்க நேர்வதைவிடக் கிணறுகளே பாதுகாப்பானவை.''

''தவளைகளுக்கு அது சரியாகக்கூட இருக்கலாம். மனிதர்களுக்குப் பொருந்தி வராது. ஆபத்துக்களைச் சந்திக்கவும், எதிர் கொள்ளவும், போராடவும், வெற்றி பெறவும் மனிதர்கள் தயாராயிருக்க வேண்டும். அந்தத் துணிவுதான் மானுட இலட்சணம்''—

''நன்றாகப் பேசுகிறீர்கள் மிஸ் சுலட்சணா! நீங்கள் பொருளாதாரத்துக்குப் பதில் எம். ஏ. பிலாஸபி எடுத்துக் கொண்டிருக்கலாம். உங்களுக்கு பிலாஸபி நன்றாகப் பேச வருகிறது.''

இதைச் சொல்லிவிட்டு தன் அரும்பு மீசையின் கீழே ஒழுங்கான வரிசையான அழகான வெண்பற்கள் தெரியச் சிரித்தான் கனகராஜ். அசப்பில் சராசரி சினிமாக் கதாநாயகன் போலிருந்த அவனிடம் அழகு இருந்தது. படிப்பு இருந்தது. பணம் இருந்தது. ஆனால் சிந்தனை இல்லை. துணிச்சல் இல்லை. 'ரிஸ்க்' எடுத்துக் கொள்ள முன்வரும் எந்த மனோதிடமும் இல்லை.

இந்நாட்டின் மேல்தட்டு வர்க்கத்தைச் சேர்ந்த பணக்காரக் குடும்பங்களில் வாயில் வெள்ளி ஸ்பூனுடனே பிறந்த

பல செலுலாய்ட் இளைஞர்களைப்போல்தான் கனகராஜும் இருந்தான். அவனிடம் என்னென்ன தகுதிகள் இருக்கின்றன என்பது அவனுக்குத் தெரிந்ததைவிட என்னென்ன தகுதிகள் இல்லை என்பதே முதலில் தெரிந்தன. அவன் பிறந்து வளர்ந்த பரம்பரைப் பணக்காரக் குடும்பமும், வளர்க்கப்பட்ட சூழ்நிலையுமே அதற்குக் காரணமாயிருக்கலாம். சிலவற்றை நினைக்கவே பயப்படும்படி வளர்ந்திருந்தான்.

ஆனால் சுலட்சணா நேர்மாறான சூழ்நிலையில் வளர்ந்து உருவானவள். அவள் தந்தை ஒரு டிரேட்யூனியன் லீடர். முப்பது ஆண்டுகளுக்கும் மேலாகத் தொழிலாளர்களின் நியாயமான உரிமைகளுக்காகவும் தொழிற்சங்கங்களின் உரிமைகளுக் காகவும் போராடி வருபவர். தொழிலாளர் வழக்குகளுக்காக லேபர் கோர்ட் படிகளில் ஏறி ஏறிக் கால்கள் தேய்ந்தவர்.

ஆவடி, அம்பத்தூர் வட்டாரங்களில் இருந்த பல தொழிற்சாலைகளில் அவரது தொழிற்சங்கம்தான் பெரிய சக்தியாக விளங்கியது. மகளை பி. ஏ. வரை சென்னையில் படிக்கவைத்திருந்த அவள் தந்தை மேற்படிப்பு வெளியூரில் விலகி இருந்து படிக்கட்டும்; புதிய சூழ்நிலைகளைத் தனியே எதிர்கொள்ளக் கற்கட்டும் என்றுதான் அவளை உதயா பல்கலைக் கழகத்திற்கு அனுப்பியிருந்தார்.

பெண்ணுரிமை இயக்கத்திலும் பெண்விடுதலையிலும் அதிக நம்பிக்கையுள்ள அவர் சிறுவயதிலிருந்து சுலட்சணாவை எதற்கும் கட்டுப்படுத்தியதில்லை. கண்டித்த தில்லை. அடக்கி வைத்ததில்லை. ஒடுக்கி வைத்ததுமில்லை.

அவருடைய போராட்டங்கள் நிறைந்த வாழ்வை அருகிலிருந்து ஒவ்வொரு நிமிஷமும் பார்த்ததால் பிரச்னைகளை எதிர்கொள்ளும் அச்சம் அவளுக்கு எதிலுமே ஏற்பட்டதில்லை. ‘நைட் ஷிப்ட்’ வேலைக்குப் போன தொழிலாளியைக் கைக் கூலிகள் அடித்துப் போட இரத்தக் காயத்தோடு தூக்கிக் கொண்டு சக தொழிலாளர்கள் தலைவர் வீட்டைத் தேடி

வருவார்கள். முகம் சுளிக்காமல் எழுந்து முதலுதவி செய்து அவர்களோடு ஆஸ்பத்திரிக்கும், போலீஸ் நிலையத்திற்கும் அலைவார் அவள் தந்தை.

தொழிலாளிகள் விஷயமாகச் சலிப்போ, தளர்ச்சியோ அவருக்கு வருவதேயில்லை. அவர்களுக்காகக் கோர்ட்டுக்கும், காவல் நிலையத்துக்கும், ஆஸ்பத்திரிக்கும் அலைவதையே ஒரு வாழ்க்கை முறையாகக் கற்றுப் பழகித் தேர்ந்திருந்தார் அவர். அவரோடு கூடவே இருந்து பார்த்துப் பழகி அநுபவித்திருந்த காரணத்தால்—பிறருக்காகச் சிரமப்படுவதிலுள்ள மகிழ்ச்சிகள் சுலட்சணவுக்கு நன்கு புரிந்திருந்தன. அவள் எந்தப் பிரச்னையிலும் அப்படிச் சிரமப்பட ரிஸ்க் எடுத்துக் கொள்ளத் தயாராயிருந்தாள். சமூகப் பிரச்னைகளிலிருந்து ஒதுங்கிப் போகிறவர்களும், விலகிப்போகிறவர்களும் கோழைகள் என்று அவள் நம்பினள். உணர்ந்தாள். செயல்பட்டாள்.

பல்கலைக்கழக எல்லையில் கனகராஜும் அவளும் சந்திப்பது மழகும்விதம் இவற்றால் அவர்கள் காதலர்கள் என்று புரிந்து கொள்ளப்பட்டிருந்தாலும் இருவருக்கும் நிறைய வேறுபாடுகள் இருந்தன.

அவன் கருதினன்: ‘சமூகம், பிரச்னை, போராட்டம் எல்லாம் மாணவர்கள் சம்பந்தப்படாத பிரச்னைகள். படிப்பில் அக்கறையில்லாத மாணவர்கள் சிலர் இப்படிப்பட்டவற்றைக் கட்டிக்கொண்டு அழுவதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை. படிக்கிற மாணவனுக்குப் படிப்பு ஒன்று மட்டுமே முக்கியப் பிரச்னை. மற்றவை எல்லாம் படிப்பைத் தட்டிக் கழிக்கிறவர்கள் செய்கிற காரியங்களே’

ஆனல் அவனது இந்த இலக்கணத்தில் அடங்காதவளாக இருந்தாள் சுலட்சணு. அவள் படிப்பில் படு கெட்டிக்காரியாக இருந்தாள். மற்றப் பிரச்னைகளிலும் அதிக அக்கறை காட்டினள்.

"விதிவிலக்காகச் சிலர் இருக்கலாம். ஆனால் வெளி விவகாரங்களிலும் மாணவர் போராட்டாங்களிலும் ஈடு படுகிற பலர் படிப்பைத் தட்டிக் கழிக்கவே அவற்றில் ஈடு படுகின்றனர். இல்லையானால் பரீட்சை நேரங்கள் பார்த்து ஏன் போராட்டங்கள் தொடங்கப்படுகின்றன? பரீட்சைகளை ஒத்திப்போடும் முயற்சியில் தானே அப்படிச் செய் கிறார்கள்?" என்று வாதிடுவான் கனகராஜ்.

சுலட்சணா அதை ஒப்புக்கொள்ள மாட்டாள். சில மாணவர்கள் கனகராஜ் சொல்கிற மாதிரியும் இருக்கிறார்கள் என்பது அவளுக்குத் தெரியும். என்றாலும் கனகராஜின் பத்தாம் பசலிக் கொள்கையை மறுக்க வேண்டும் என்ற பிடிவாதத்தில் அவள் உறுதியாக வாதிடுவாள்.

"நீ ஒரு போராட்டக்காரரின் மகள்! அதனால் இப்படித் தான் பேசுவாய்! உன்னைத் திருத்தக் கடவுளாலும் ஆகாது"— என்றுதான் கனகராஜ் அப்படி நேரங்களில் அந்த விவாதத்தை முடிப்பான்.

# 3

அந்த ஆண்டின் தொடக்கத்தில் உதயா பல்கலைக் கழக லேடீஸ் ஹாஸ்டலில் ஒரு பிரச்னை ஏற்பட்டது.

விடுதி அறைகளிலிருந்த பாத்ரூம்களுக்குத் தண்ணீர் சப்ளை சரியாக இல்லை. வழக்கமாக ஜூன் கடைசியிலோ ஜூலை தொடக்கத்திலோ பெய்யும் கோடை மழைகள் தவறி விட்டதனால் லேடீஸ் ஹாஸ்டல் ஓவர்ஹெட் டேங்குக்குத் தண்ணீர் மேலேறவில்லை. ஹாஸ்டலின் பின்புறமுள்ள இரு கிணறுகளுக்கு வந்துதான் எல்லாப் பெண்களும் நீர் இறைத்துக் குளிக்க வேண்டியிருந்தது. முன்புறம் மதிற் சுவர் இருந்தது போல் பின்புறம் மதிற்சுவர் இல்லாததனால் மைதானத்தில் விளையாடும் மாணவர்கள், காலையில் வாக்

போகும் பேராசிரியர்கள் இவர்கள் காணும்படி திறந்த வெளியில் கிணற்றடியில் மாணவிகள் குளிக்க நேர்ந்தது.

ஒருநாள் இரண்டு நாள் இந்த ஏற்பாடு என்றால் எப்படியோ சமாளித்து விடலாம். ஆனால் பலநாள் இதே நிலை நீடித்தது. மோட்டார் மூலம் ஓவர்ஹெட் டேங்குக்குத் தண்ணீர் இறைக்கும் கிணறுகளை இன்னும் கொஞ்சம் ஆழப்படுத்தினால் பிரச்னையைச் சமாளித்துவிட முடியும். ஆயினும் அதைச் செய்யாமல் பல்கலைக் கழக நிர்வாகம் காலதாமதப்படுத்தியது. வி. சி., வார்டன், ரிஜிஸ்திரார் எல்லாரையும் போய்ப் பார்த்துப் பார்த்து அலுத்துப் போனார்கள் மாணவிகள். காரியம் ஒன்றும் நடக்கவில்லை.

சுலட்சணா உடனே விடுதி மாணவிகளை ஒன்று திரட்டினாள். 'ஆர்கனைஸ்' செய்வதில் எப்போதுமே அவள் கெட்டிக்காரி.

"நமது உரிமையை நாம் அடைய ஒவ்வொருவராகப் பார்த்துக் கெஞ்சிக் கூத்தாடிக் கொண்டிருப்பானேன்? ஒரு போராட்டத்தைத் தொடங்கினால்தான் நம் கஷ்டத்தை அவர்களுக்குப் புரிய வைக்க முடியும்."

சில மாணவிகள் ஒப்புக்கொண்டார்கள். வேறு சிலர் நமக்கேன் வம்பு என்று ஒதுங்கினார்கள். கால வரையறையற்ற உண்ணாவிரதத்துக்குத் தலைமை ஏற்று நடத்த முன்வந்தாள் சுலட்சணா.

அந்தப் பல்கலைக்கழக வி. சி. அயல் நாட்டுப் பிரயாண வெறியர். மெக்ஸிகோ, ஜப்பான், ஜெர்மனி என்று சதா பறந்து கொண்டேயிருப்பார்.

ஆக்டிங் வி. சி. வம்பில் சிக்காமல் பதில் சொல்லி மழுப்புவதையே ஒரு கலையாகப் பயின்றவர். அப்போதும் துணைவேந்தர் பொறுப்பில் தற்காலிகமாக இருந்த ஆங்கிலத் துறைத் தலைவர் டாக்டர் ஆடல் வல்லான் பிள்ளை

ஒரு முடிவும் எடுக்கமுடியாமல் திணறினார். இவருக்குக் (கையா)டல் வல்லான் பிள்ளை என்றும் 'டல் பிள்ளை' என்றும் விதவிதமான பெயர்கள் ஏற்பட்டிருந்தன.

இவருடைய வகுப்புகள் பெரும்பாலும் 'டல்' அடிப்பதால் மாணவர்களிடம் டல் பிள்ளை என்று தந்தி விலாசம் போல் ஒரு பெயராகவும் பிரபலமாகியிருந்தது. டல் பிள்ளை தன் பெயருக்கேற்ப லேடீஸ் ஹாஸ்டல் தண்ணீர்ப் பஞ்சத்தைப் பற்றிக் கண்டுகொள்ளாமல் 'டல்'லாக விட்டுவிட்டார். வேறு வழியின்றி மறுபடி ரிஜிஸ்திரார், யூனிவர்சிடி அட்மினிஸ்டிரேடிவ் ஆபீஸர் ஆகியோரைப் போய்ப் பார்த்தால், "கொஞ்சம் பொறுத்து அட்ஜஸ் பண்ணிக்குங்க. வி. சி. திரும்பி வந்துறட்டும்" என்றார்கள்.

"வி. சி. வந்து மட்டும் என்ன சார் பண்ணிடப்போறாரு? ஒரு வாரம் இங்க தங்கிட்டு மறுபடி ஆஸ்திரேலியாவில் காமன்வெல்த் வி. சி.ஸ் கான்ஃபரன்ஸ்னு எதுக்காவது புறப்பட்டுப் போயிடப் போறாரு" என்றாள் சுலட்சணா. அதற்கு ஒரு பதிலும் கிடைக்கவில்லை.

பல்கலைக் கழக நிர்வாக அலுவலகத்தின் முகப்பில் செக்கச் செவேலென்று பூத்துச் சொரிந்திருந்த குல்மோகர் மரத்தடியில் சுலட்சணா தலைமையில் உண்ணாவிரதம் ஆரம்பமாயிற்று. உண்ணாவிரதம் இருந்த மாணவிகளின் முன்பு ஏராளமான விளம்பர அட்டைகளில் கோரிக்கை வாசகங்கள் பல எழுதி வைக்கப்பட்டிருந்தன.

'தண்ணீர் இல்லாமல் மாணவிகளைக் கண்ணீர் சிந்த வைக்காதே!'

'பல்கலைக் கழகம் இந்தியாவில்—வி. சி. வெளி நாட்டிலே.'

'தண்ணீருக்குத் தவிக்கிறோம்! தட்டிக் கேட்க ஆளில்லை.'

'பல்கலைக் கழகமா? பாலைவனக் கலகமா?'—போன்ற அட்டைகள் பெரிது பெரிதாக எழுதி வைக்கப்பட்டிருந்தன.

முதல் நாள் உண்ணாவிரதம் வெற்றிகரமாக முடிந்தவுடன் கலைப்பிரிவு மாணவர்களில் இருபது பேர் கலைக்கு மரத்தடியில் மாணவிகளுக்குத் தங்கள் ஆதரவைத் தெரிவிக்கும் வகையில் அனுதாப உண்ணாவிரதம் தொடங்க ஒத்துழைத்தனர்.

அந்தப் பத்துப் பேரில் கனகராஜ் இல்லை என்பது சுலட்சணாவுக்கு மிகவும் ஏமாற்றமளித்தது. அவன் உண்ணாவிரதமிருக்க முன்வராதது கூடப் பரவாயில்லை. உண்ணாவிரதமிருப்பவர்களை வந்து பார்த்தால் கூடத் தனமீது கெட்ட பெயர் வந்து ஒட்டிக் கொண்டு விடும் என்று பயந்தாற்போல ஒதுங்கினான் கனகராஜ். அந்தப் பக்கம் எட்டிப் பார்க்கக்கூட முன்வரவில்லை.

மூன்றாவது நாள் மாணவிகளுக்கு ஆதரவாகப் பொறியியல் பிரிவு மாணவர்கள்—எம். டெக். படிப்பவர்கள் மற்றொரு மரத்தடியில் உண்ணாவிரதத்தைத் தொடங்கினார்கள்.

யூனிவர்ஸிடி அட்மினிஸ்டிரேடிவ் ஆஃபீஸின் முகப்பில் பெரும்பகுதி உண்ணாவிரத கோஷ்டிகளால் கேராவ் செய்யப் பட்டதுபோல ஆகிவிட்டது. சுற்றி வளைத்து உட்கார்ந்து விட்டார்கள்.

நான்காவது நாள் மெடிகல், விவசாயப்பிரிவு மாணவர்களும் சேரவே பிரச்னை பெரிதாகிவிட்டது. உண்ணாவிரதம் பெரியதாக விசுவரூபம் எடுத்தது.

சுலட்சணாவைப் பசியும் வாட்டமும் வாழை நாராக ஆக்கியிருந்தன. அவளருகே உண்ணாவிரதத்துக்கு உட்கார்ந்திருந்த மணிமேகலை என்ற சக மாணவி ஒருத்தி "சுலட்சணா! சினிமாக் கதாநாயகன் மாதிரி உங்கூட ஒரு ஸ்டூடண்ட் சதா சுத்திண்டிருப்பானே, அவன் மட்டும் உன்னை வந்து பார்க்கவே இல்லையேடி? லீவா? அல்லது அவன் ஊரில்

இல்லியா?''—என்று அவனையே கேட்டபோது சுலட்சணுவுக்கு அப்படியே நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போலிருந்தது.

கனகராஜ் ஒரு முறைக்காகக் கூட உண்ணுவிரதமிருந்த மாணவியை வந்து பார்க்காதது சுலட்சணுவுக்கு எரிச்சலூட்டியது. மற்ற மாணவர்களைப்பற்றிக் கவலை இல்லாவிட்டாலும் தனிப்பட்ட முறையில் தன்னைப் பார்க்கக் கூட அவன் வரவில்லை என்பது அவளுள் மிகவும் உறுத்தவே செய்தது. ஒரு ஒப்புக்காகக்கூட அவன் அதைச் செய்ய முன்வராதது அவளுக்கு வியப்பை மட்டுமில்லாமல் அதிர்ச்சியையும் அளித்தது.

ஸ்டிரைக், உண்ணுவிரதம், ஹர்த்தால், ஆர்ப்பட்டங்களில் ஈடுபடுகிறவர்களுக்கு 'இண்டேர்னல் அஸெஸ்மெண்ட் மார்க்கு'களை மிகமிகக் குறைத்துவிடச் சொல்லி ஆக்டிங் வி.சி. ஓர் இரகசியச் சுற்றறிக்கை எல்லா இலக்காக்களுக்கும் அனுப்பியிருக்கிருர் என்று மாணவ மாணவிகளிடையே பரவலாக ஒரு பேச்சு உண்டு. ஆனுல் அது வெறும் பூச்சாண்டி காட்டும் ஏற்பாடாகப் பரப்பப்பட்ட வதந்தியே ஒழிய உண்மையில்லை. கனகராஜ் முன்பு ஒருமுறை இதை அவளிடம் சொல்லிப் பயமுறுத்தியபோதுகூட அவள் இதை நம்பவுமில்லை. ஏற்கவுமில்லை.

''உங்களைப்போன்ற புத்தகப் புழுக்களும், பயந்தாங் கொள்ளிகளும் சுயநலத்திற்காகவே முயற்சி செய்து திட்டமிட்டுப் பரப்புகிற வதந்தி இது! உண்மையில் அப்படி எதுவும் கிடையாது''—என்று சுலட்சணுவே அப்போது அவனிடம் மறுத்திருந்தாள். இப்படி நினைத்த கனகராஜுக்காக அவள் பரிதாபப்பட்டாள்.

சுலட்சணுவின் உண்ணுவிரதத்தை உள்ளூரின் பிரமுகர் ஒருவர் வந்து பழரசம் கொடுத்து முடித்துவைத்தார். பல்கலைக்கழக நிர்வாகம் பணிந்தது. உடனடியாகக் கிணறு

களை ஆழப்படுத்தி ஓவர் ஹெட் டேங்குக்கு நீர் ஏற்ற ஒப்புக் கொண்டார்கள். மாணவர்கள் முன்னிலையில் ஆக்டிங் வி.சி. 'டல்பிள்ளை' இதற்கு உறுதி கூறினார்.

உண்ணாவிரதம் முடிந்தபின்பும்கூட கனகராஜ் அவளைச் சந்திக்க வரவில்லை. அவளுக்கும் ஒருபுறம் வருத்தமாக இருந்தாலும் பலருடைய பாராட்டுக்களிலும், மாணவ மாணவி களின் புகழிலும் அவன் வராதது‘பற்றிய ஏமாற்றம் மறந்து விட்டது. இந்தப் போராட்டம் பல்கலைக் கழகவட்டாரத்திலும், மாணவர்களிடையேயும் அவள் அந்தஸ்தை உயர்த்தி விட்டது. அவள் ஒரு தலைவியாக உயர்ந்துவிட்டாள் அங்கே.

அன்று பகலில் வகுப்பில் கனகராஜ் தவிர்க்க முடியாமல் அவளைச் சந்திக்க நேர்ந்துவிட்டது. போராட்டம் முடிந்து அப்போதுதான் முதல் முதலாக வகுப்புக்களுக்கு மாணவிகள் வருகிறார்கள். கனகராஜின் சம்பிரதாயமான அநுதாப விசாரணை ஆரம்பமாயிற்று.

"ரொம்ப இளைத்து வாடிப் போய் விட்டீர்கள் சுலட்சணா! உடம்பைக் கவனித்துக் கொள்ளுங்கள். ப்ளீஸ் டேக் கேர் ஆஃப் யுவர் ஹெல்த்."—பொது இடங்களில் அவளை நீங்க, வாங்க என மரியாதைப் பன்மையில்தான் அவன் அழைத் தான்.

"உங்கள் அநுதாபத்துக்கும் அன்புக்கும் நன்றி. நான் பொதுக் காரியங்களுக்காக உழைக்கிறபோது என் உடம்பு — என் சௌக்கியம்—என் நன்மை என்று பார்ப்பதில்லை. பொது நன்மையை மட்டும்தான் பார்ப்பது வழக்கம்! பொது நன்மையே என் இலக்கு."

"பொது நன்மை என்ற பெயரில் நமது படிப்பு, நமது உடல் நலம் எல்லாம் கெட்டுவிட்டால் நம்முடைய பெற்றோர் களுக்கு யார் பதில் சொல்வது? யோசித்தீர்களா?"

“என் பெற்ருேர்களைப் பொறுத்தமட்டில் இதற்கு அவசியமே இராது மிஸ்டர் கனகராஜ்! என் தந்தையைப் பொறுத்தவரை அவர் பொது நன்மையில் சொந்த நன்மைகளைக் கரைத்தே வாழ்ந்தவர். மற்றவர்கள் போராடும் போது மார்க்குகளுக்காகப் பயந்து ஒதுங்குகிற மகளை அவர் விரும்ப மாட்டார் என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.''

“எனக்குப் போராட்டங்கள், உண்ணுவிரதங்கள் எல்லாம் அறவே பிடிப்பதில்லை. கல்விக்கூடங்களுக்குள் அரசியலைக் கொண்டு வரும் வீண் வம்பு வேலைகள் இவை.''—

“ஹாஸ்டல் ஃபீஸ் என்று மாதா மாதம் ஏராளமாகப் பணம் கறந்துவிட்டுக் குளியலறையில் சொட்டுத் தண்ணீர் கூட வர வழியில்லாமல் கிணற்றடியில் திறந்த வெளியில் பிறர் வேடிக்கை பார்க்கும்படி குளிக்கச் சொன்ஞல் யார் தான் போராடாமல் இருப்பார்கள்? கடமைகளைச் செய்வது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் உரிமைகளுக்காகப் போராடுவதும். உரிமைகளுக்காகப் போராடாதவர்கள் மனிதர்களே இல்லை.''—

“படிக்கிறவர்களுக்குப் பணிவும் கல்வி நிறுவனத்தின் மேல் மரியாதையும் வேண்டும் என்கிறேன் நான்.''

“எந்தப் பணிவும், எந்த மரியாதையும் ஒரு வழிப்பாதையில்லை. மரியாதையற்றவர்கள் மேல் செலுத்தும் மரியாதை அவமானகரமானது என்று நினைக்கிறவள் நான்''—

“இந்தப் போராட்டத்தின் மூலம் நன்ருகப் படிக்கிற மாணவியாகிய நீங்கள் ‘ரேங்க்’ வாங்கும் வாய்ப்பை இழக்கப் போகிறீர்கள்''—

இதைக் கேட்டுச் சுலட்சணுவுக்குக் கோபமே வந்துவிட்டது.

"மிஸ்டர் கனகராஜ்! இங்கே படிக்கிற பெண்களின் மானம் மரியாதை என்பவை நான் ஒருத்தி 'ரேங்க்' வாங்கு வதைவிட மிகவும் அத்தியாவசியமான விஷயங்கள். பிறர் கூடி வந்து வேடிக்கை பார்க்கிற அளவு லேடீஸ் ஹாஸ்டல் பெண்களைத் திறந்த வெளியில் குளிக்க வைத்த நிர்வா கத்தை எதிர்ப்பது சரியா, நான் ரேங்க் வாங்குவது சரியா என்றால் எனக்கு ரேங்க் வாங்குவது பெரிய காரியமே இல்லை."

"மன்னியுங்கள்! உங்கள் மேலுள்ள பிரியத்தினால் நான் கொஞ்சம் அதிக உரிமை எடுத்துக்கொண்டு பேசிவிட்டேன் போலிருக்கிறது"-

அப்போது அவள் குரலில் சூடு ஏறியதைக் கண்டு கனராஜ் தணிந்துபோய் மன்னிப்புக் கேட்டான். அவன் இப்படி மன்னிப்புக் கேட்டதைக் கண்டு அவளுக்கு அவன் மேல் இரக்கமாகக்கூட இருந்தது. அப்பாவியாகிய அவனைப் பொதுக் காரியங்களில் அக்கறை, சமூகப்ரக்ஞை, பிறர் நலச் சிந்தனை ஆகியவை கொஞ்சமும் இல்லாத கட்டுப் பெட்டியாக வளர்த்துள்ள அவன் குடும்பத்தினர் மேல்தான் அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது.

'இவன் எடுப்பாய் இளமையாய் அழகாயிருக்கிறான். நல்ல உயரம், நல்ல நிறம், அரும்பு மீசை, புன்முறுவல் திகழும் மலர்ந்த முகம் எல்லாம் இருந்தும் இவனிடம் இருதயமே இல்லையே? இருதயமே இல்லாதவனிடம் இத் தனையும் இருந்தும் என்ன பிரயோசனம்? தான் செய்தது தவறு என்றுகூட இவனுள் உறைக்கவில்லையே! முழு யூனி வர்ஸிடியும் மாணவிகளின் உண்ணாவிரதப் போராட்டத்தில் அநுதாபம் கொண்டு அவளுக்குப பக்கபலமாக அநுதாப உண்ணாவிரதம் என்று வந்து போராட்டத்தில் கலந்து கொண்டபோது இவன் சும்மா அந்த மரத்தடிக்கு வந்து உபசாரமாக ஒரு வார்த்தை கூடச் சொல்லிவிட்டுப் போக

வில்லையே? போராட்டம் நடத்துகிற நூற்றுக்கணக்கானவர்களின் பக்கம் தலையைக் காட்டிஞல் நிர்வாகத்தினரும் மார்க் போடுகிற ஐந்தாறு பேராசிரியர்களும் என்ன நினைப்பார்களோ என்று பயந்து அவன் ஒதுங்கி ஒளிந்தது மிக மிகக் கேவலமான காரியமாக அவளுக்குத் தோன்றியது. அவள் பார்வையில் அவனுடைய 'இமேஜ்' ஒரு புழுவாகக் குறுகிச் சிறுத்தது.

அந்த வாரம் வகுப்பில் ஒரு பேராசிரியரே பேச்சு வாக்கில் அவளைக் குறிப்பிட்டுத் தம்முடைய மனப்பூர்வமான பாராட்டுக்களைத் தெரிவித்தபோது கனகராஜுக்கு அதிர்ச்சியாயிருந்தது. அவள் அவனை வெற்றிப் புன்முறுவலோடு பார்த்தாள்.

பொருளாதாரத்தில் முதல் தர மதிப்பெண் பெற்ற அவனைப் பாராட்டுவதற்குப் பதில் போராட்டம் நடத்தி வெற்றி பெற்ற அவளைப் பாராட்டிஞர் பேசிரியர். "படிப்பில் கவனக்குறைவால்தான் இப்படிப் போராட்டங்கள் வரும் என்பதை நான் ஒருபோதும் ஏற்கமாட்டேன். உரிமை உணர்வுள்ள யாரும் இப்படிப் போராடி நியாயம் பெறத்தான் முடிவு செய்வார்கள். இதில் தவருே அத்து மீறலோ சிறிதும் இல்லை. இதை 'ஆர்கனைஸ்' செய்த நேர்த்திக்காக மிஸ் சுலட்சணுவுக்கு என் பாராட்டுக்கள்"—என்ருர் அந்தப் பேராசிரியர். கனகராஜும் வகுப்பில் இருந்தான். அப்போது அங்கு எல்லாரும் எதற்காகவோ தன்னையே பார்ப்பது போல் அவன் உடம்பு கூசியது.

## 4

எல்லாரும் சுலட்சணுவை மதித்துப் புகழ்ந்தபோதுதான் கனகராஜ் அவள் தனக்கு மட்டுமே உரியவள் என்பது போல் உணரத் தலைப்பட்டான். அவள் மெல்ல மெல்ல,

அவன் உணர்வுகளைப் பாதிக்கத் தொடங்கினாள். அவனிடமிருந்து அவள் விலகிச் செல்லச் செல்ல அவன் அவளருகே நெருங்கிச் செல்ல ஆசைப்பட்டான்.

அவளால் அவனைத் தவிர்க்கவும் முடியவில்லை, விரும்பவும் முடியவில்லை. மாற்றலாம் என்று முயல ஆரம்பித்தாள். அவன் மாறுவது கடினமென்று தோன்றியது. புதிதாகச் சிந்திப்பதற்குப் பயப்பட்டான் என்பதைவிடப் புதிதாகச் சிந்திப்பவர்களையே பார்க்கக்கூடப் பயப்பட்டான் கனகராஜ். புதுமையே அவனுக்குப் பெரிய அலர்ஜியாக இருந்தது.

அவள் மாக்ஸிம் கார்க்கியின் அன்னை, ஆண்டன் செகாவின் சிறுகதைகள் என்று தனக்குப் பிடித்த புத்தகங்களை அவனிடம் சொன்னால் அவன் 'ஹெரால்ட் ராபின்ஸ்' மட்டுமே தனக்குப் பிடிக்கும் என்றான்.

பல்கலைக்கழக விவாத மன்றத்தில் இந்தியாவின் வளர்ச்சிக்கு எதிர்காலத்தில் ஏற்றது 'கலப்புப் பொருளாதாரமே' என்ற தலைப்பில் அவன் விவாதித்தான். பொதுவுடைமையே என்று அவள் விவாதித்த வேகத்தைக் கண்டு அவன் பயந்தே போனான்.

அவளுக்கு நல்ல விவாதத் திறமையும் ஆணித்தரமாக அடித்துப் பேசும் ஆற்றலும் இருந்தன. அவனிடம் துண்டு துண்டாகச் சில உதிரிக் கருத்துக்கள் மட்டும் இருந்தன. அவற்றை இணைத்துத் தொகுத்து வடிவம் தந்து கோவையாகப் பேசத் தெரியாமல் விழித்தான் அவன். பரீட்சைகளில் மட்டும் பிரமாதமாக எழுதி முதல் மார்க் வாங்கினான் அவன். பொது வாழ்விலும் மற்ற மாணவர்களிடமும் முதல் மதிப்பும் மதிப்பெண்களும் அவளுக்குத்தான் அதிகம்.

ஒரு சிறிய பிரசங்கம் அல்லது அறிக்கை மூலம் அந்தப் பல்கலைக்கழக மாணவர்களை ஒன்று சேர்த்துத் தன் முன்னால் நிறுத்திவிடும் ஆற்றல் அவளுக்கு இருந்தது. அவனோ

தானும் பிறருடன் அதிகம் பழகுவதில்லை. பிறரையும் தன்னோடு பழகவிடுவதில்லை. ஒரே விதிவிலக்கு—சுலட்சணா மட்டும்தான் அவனோடு பழகினாள். அந்தப் பழகுதலில் உள்ள முரண்பாட்டை மற்றவர்கள் விநோதமாகப் பார்த்து ரசித்தார்கள். அவனோ ஒரு தொழிலதிபரின் செல்லப் பிள்ளை. அவளோ ஒரு தொழிற்சங்கத் தலைவரின் அருமைப் பெண். இவர்கள் நெருங்கிப் பழகுவது அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது.

மேடை விவாதங்களில் அவன் அவளிடம் தோற்றான். மற்ற மாணவ மாணவிகள் முன் அவள் தலைவியாக எழுந்து நின்றாள். அவனோ அடையாளமே இல்லாத, சமர்த்தாகப் படிக்கிற யாரோ ஒரு பையனாக மட்டுமே இருந்தான். அவளிடம் தோற்கத் தோற்கத் தன்னை அவளுக்கு மிக அருகில் கொண்டு செல்லும் ஆர்வம் அவனுள் அதிகரித்தது. அவனை வெல்ல அவள் முயலவில்லை. அவளிடம் தோற்பதில் கூட அவன் மகிழ்வதற்குத் தொடங்கினான்.

அவளுடைய பிறந்தநாளை ஞாபகம் வைத்திருந்து அன்று மாலை பல்கலைக்கழகப் பூங்காவில் அவளைத் தனியே சந்தித்து ஒரு சிறிய வைரமோதிரத்தை அவளுக்கு அன்பளிப்பாக வழங்கினான் கனகராஜ்.

“தங்கம், வைரங்களை அணிவதில் எனக்கு விருப்ப மில்லை! ஆனால் எனக்கு விருப்பான ஒரு காரியத்துக்கு இதைப் பயன்படுத்தினால் உங்களுக்கு அதில் ஒன்றும் ஆட்சேபணை இராதே?”

“ஆட்சேபணை இராது. உன் இஷ்டம்போலப் பயன் படுத்தலாம்”—

“உடைமை உங்களுடையது என்பதால் கேட்டு அநுமதி பெற்று விடுவது நல்லது என்றெண்ணித்தான் கேட் கிறேன்”—

“உனக்கென்று நான் முழு மனத்தோடு கொடுத்துவிட்ட பின் அப்புறம் அதை நீ என்ன வேண்டுமானால் செய்து

கொள்ளலாம். மறுபடி அதற்கு என் அநுமதி தேவையே இல்லை சுலட்சணு!''

அடுத்தவாரமே ஊனமுற்ற குழந்தைகளின் நல்வாழ்வுக்காகத் திரட்டப்பட்டுக் கொண்டிருந்த ஒரு பொது நிதியில் சேர்ப்பதற்காக அந்த மோதிரத்தை ஒரு கூட்டத்தில் ஏலம் விட்டு மூவாயிரம் ரூபாய் திரட்டிக் கொடுத்து விட்டாள் சுலட்சணு.

அவனுக்கு அது என்னவோ போலிருந்தது. சும்மா கேட்கிருளே ஒழிய அந்த மோதிரத்தைத் தன் அன்பின் ஞாபகமாக அவளே கையில் அணிவாள் என்று எதிர்பார்த்தான் அவன். அவள் அப்படிச் செய்யாததில் அவனுக்குப் பெருத்த ஏமாற்றந்தான். அவளை அவனுல் முழுவதுமாக இன்னும் புரிந்து கொள்ள முடியவில்லை. அவளோ அவனை நன்ருகப் புரிந்து கொண்டிருந்தாள். அந்த மோதிரத்தை அவள் ஏலம் விட்ட அதிர்ச்சியிலிருந்து அவன் மீள அதிக நாளாயிற்று.

அவனுடைய பிறந்த நாள் வந்ததும், பல்கலைக்கழகப் பொடானிகல் கார்டன் முகப்பில் இருந்த மில்க் பார்லரில் ஒரு 'ரோஸ்மில்க்' வாங்கி அவனிடம் பருகக்கொடுத்தாள் அவள். அதற்கே அவன் மிகவும் மகிழ்ச்சியடைந்தான்.

''நீ பத்துப் பைசாவுக்குக் கடலை மிட்டாய் வாங்கிக் கொடுத்தால்கூட எனக்கு மகிழ்ச்சியாகத்தான் இருக்கும் சுலட்சணு!''

''ஏன்? என்ருல் அதற்கு மேல் எதுவும் முடியாது என்று சொல்கிறீர்கள்? செய்யமுடிவதற்கும் செய்யவிரும்புவதற்கும் நடுவே ஒரு வித்தியாசம் இருக்கும்.''

''புரிகிறது சுலட்சணு...நீ முடிந்ததைச் செய்கிற டைப் இல்லை. விரும்புகிறதைத்தான் செய்வாய் என்பது எனக்குத் தெரியும்.''

"என் தந்தை உங்கள் தந்தையைப்போல் தொழிலதிபரோ செல்வந்தரோ இல்லை. தொழிலாளிகளோடு தொழிலாளியாகக் குடிசையில் வசிப்பவர். முடிந்ததைச் செய்யும் வசதி எனக்கில்லை."

காதலர்களைப்போல் அவர்கள் இருவரும் பல்கலைக்கழக எல்லையில் இடையிடையே சந்தித்துக் கொண்டாலும் இப்படிக் கருத்து மோதல்கள், கொள்கை உரசல்கள் அடிக்கடி அவர்கள் மத்தியில் ஏற்படுவதுண்டு. படிப்பது, மார்க் வாங்குவது, போஸ்ட் கிராஜுவேட்ஸ் லைப்ரரிக்குப் போய் இண்டேர்னல் அஸெஸ்மெண்ட் மார்க்குகளுக்காகப் புத்தகங்களை எடுத்துக் கரைத்துக் குடிப்பது இவை தவிர வெளியே புயல் வீசினுலும், பூகம்பமே ஏற்பட்டாலும், இடி விழுந்தாலும்கூடக் கவனம் கலையக்கூடாது என்றிருந்தான் கனகராஜ். அவளோ வெளியே துரும்பு அசைந்தாலும், யாருக்கு எங்கே என்ன சிரமம் என்று விரைந்து ஓடிச் சென்று பார்க்கவும், உதவவும் தயாராயிருந்தாள். பொதுக் காரியங்கள், வேலைகள் கிடைத்தால் அவள் அதில் தன்னைக் கரைத்துக்கொண்டுவிட—தன்னை மறந்துவிடப் பழகியிருந்தாள்.

அவனே தன்னைத் தவிர மற்றெல்லாவற்றையும் பற்றி நினைத்துப் பார்க்கக்கூடப் பழகவில்லை. ஆனுலும் அவர்கள் இருவரும் நெருங்கிப் பழகிறர்கள். இவர்கள் ஆருயிர்க் காதலர்களோ என்று பார்க்கிறவர்கள் மருண்டு வியக்கிற அளவுக்குப் பழகினர்கள். சந்தித்தார்கள். பேசிக் கொண்டார்கள்.

உதயா பல்கலைக்கழக அதிசயங்களில், விநோதங்களில் இது முதன்மையானதாயிருந்தது. அரும்பு மீசையும் டி-ஷர்ட்டும், சுருள் முடியும், செலூலாய்ட் புன்முறுவலுமாக அவன் அவளைச் சுற்றிச் சுற்றி வந்தான். கொள்கைகளில், பழக்கவழக்கங்களில் அவள் அவனுக்கு நேர்மாருனவளாக இருந்தாள். அவனேடு மட்டுமில்லாமல் மற்றவர்களோடும்

தோழமையோடு பழகினாள். இந்தத் தோழமையை அவன் எப்படிப் புரிந்து கொண்டானோ, புரிந்து கொள்ளவில்லையோ, அவள் சரியாகப் புரிந்து கொண்டிருந்தாள். உணர்ந்து கொண்டிருந்தாள். உணர்ந்து தெளிந்து கொண்டுமிருந்தாள்.

ஒரு விடுமுறையின் போது பல்கலைக்கழகத்தை ஒட்டிச் சென்ற ஜி. எஸ். டி—அதாவது கிராண்ட் சதர்ன் டிரங்க் ரோடிலிருந்து ஒரு கிலோமீட்டர் உள்ளே தள்ளி இருந்த ஓர் அரிஜன கிராமத்திற்குச் சாலை போட்டுக் கொடுக்கும் இலவச சேவையைத் திட்டமிட்டாள் சுலட்சணா.

சமூக சேவைத் திட்டத்தின் கீழ் யூனிவர்சிடி நிர்வாகத்தைச் சம்பந்தப்படுத்தாமலே அவளாகப் பொறுப்பேற்று இதைமனிதாபிமான அடிப்படையில் 'ஆர்கனைஸ்' செய்தாள். நிறைய மாணவ-மாணவிகள் சேர முன்வந்திருந்தனர்.

யூனிவர்ஸிடி நிர்வாகமே இம்மாதிரி 'சோஷியல் சர்வீஸ் லீக்' என்று சமூக சேவைப் பணிகளைச் செய்யச் சொல்லி அதற்கு மார்க்குகள் போடச்செய்வது வழக்கம். ஆனால் அந்தச் சமூக சேவைப் பணி வெறும் கண்துடைப்பாகவே இருக்கும். யூனிவர்ஸிடி காம்பஸிற்குள் புதர்களை வெட்டி ஒழுங்கு செய்வது—புல்வெளிகளைச் சமன் செய்வது போன்று பல்கலைக் கழகத் தோட்டக்காரர்கள் செய்ய வேண்டிய வேலையை மாணவர்களிடம் ஓசியிலேயே வாங்கிக் கொண்டு—மார்க் போட்டு முடித்துவிடுவார்கள்.

உண்மையில் 'சோஷியல் செர்வீஸ் லீக்' என்பது வெளி உலகின் பொதுப் பணிகள் எவற்றையாவது பிரதிபலன் கருதாமல் மாணவர்களைச் செய்ய வைப்பதே ஆகும். இதற்காக மாணவர்களின் கட்டணத்திலே கூட ஒரு குறிப்பிட்ட தொகை வசூலிக்கப்படுகிறது. அந்தத் தொகை மொத்தத்தில் வேறு எதற்கோ திருப்பி விடப்படுவதோடு பல்கலைக் கழக நிர்வாகம் செலவழித்துச் செய்ய வேண்டிய காரியங்களை மாணவர்களை வைத்தே முடித்துவிடுகிற

சாதுரியமும் (கையா) டல் வல்லான்பிள்ளை போன்றவர் களிடம் இருந்தது. இதைப் பற்றிய புகார்கள் கிடைத்ததன் பேரில் யூனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷன் கூட உதயா பல்கலைக்கழகத்தை எச்சரித்திருந்தது.

ஆனால் பெரும் பண வசதியும் மத்திய மாநில ஆளும் கட்சிகளில் செல்வாக்கும் கொண்டிருந்த உதயா பல்கலைக் கழகப் புரோ-சான்ஸலர் இதற்கெல்லாம் ஒரு சிறிதும் அஞ்ச வில்லை. வழக்கம்போல் நிர்வாகம் மாணவர்களைக் கொண்டே காம்பஸுக்குள் புல்பிடுங்கவும், புதர் வெட்டவும், களை வெட் டவும் தூண்டி அதையே சோஷல் செர்வீஸாக ஆக்கி மார்க் போட்டு வந்தது. இதில் பச்சை மோசடிதான் நடந்து வந்தது.

உண்மையாகவே சோஷியல் செர்வீஸ் செய்ய விரும்பிய சுலட்சணு போன்றவர்கள் வேறு ஏற்பாடு செய்ய வேண்டிய தாயிற்று. அவள் யாராலும் கவனிக்கப்படாத— மெயின் ரோடிலிருந்து உள் விலகி இருந்த—ஓர் அரிஜன கிராமத்துக் குச் சாலை போட உழைக்க முன்வருமாறு மாணவர்களுக்கு வேண்டுகோள் விடுத்திருந்தாள். அவளுடைய வேண்டு கோளுக்கு மாணவ மாணவிகளிடையே நல்ல ஆர்வத்தோடு கூடிய வரவேற்பு இருந்தது. போட்டி போட்டுக்கொண்டு அவளிடம் மாணவர்கள் முன் வந்து பேர் கொடுத் திருந்தார்கள்.

இத்தனைக்கும் பல்கலைக்கழக டீனும் ஆக்டிங் வி. சி. யு மான (கையா) டல் வல்லான் பிள்ளையிடமிருந்து சுலட்சணு அன் அஃபீஷியலாக ஆர்கனைஸ் செய்யும் இந்த சோஷியல் செர்வீஸ் ஏற்பாட்டை டிஸ்கரேஜ் செய்வது போல ஒரு சுற்றறிக்கை வேறு வந்து பல்கலைக்கழக நோட்டீஸ் போர்டு களிலும் ஒட்டப்பட்டு விட்டது.

“பல்கலைக்கழகம் அதிகாரப்பூர்வமாக நடத்தும் சோஷல் செர்வீஸ் பணிகள் முடிந்து இந்த ஆண்டிற்கான மதிப்பெண் களும் போடப்பட்டு விட்டன. பல்கலைக்கழகம் நடத்தாமல்

தனிப்பட்ட மாணவர்களோ, வெளி அரசியல் சக்திகளோ தலையிட்டு நடத்தும் எந்தச் சமூகப்பணி முகாம்களிலும் மாணவர்களோ, மாணவிகளோ கலந்துகொள்ள வேண்டா மென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். அப்படிப்பட்ட ஏற்பாடுகளில் இந்தப் பல்கலைக்கழகம் எந்தப் பங்கும் பொறுப்பும் ஏற்காது என்பதை இதன்மூலம் அறிவித்துக் கொள்கிறோம்'' என்று 'டல் பிள்ளை' அனுப்பியிருந்த சர்க்குலர் சுலட்சணாவை எரிச்சலூட்டினாலும் அவள் அதைப் பொருட்படுத்தவில்லை. அவளுடைய சமூகப்பணி முகாமில் பங்கேற்க இசைந்து பேர் கொடுத்திருந்தவர்களும் இந்தச் சுற்றறிக்கை பற்றிச் சிறிதும் அலட்டிக் கொள்ளவில்லை.

இந்த அறிக்கை வருமுன்பே சுலட்சணாவிடம் சாக்குப் போக்குச் சொல்லித் தப்பித்துக்கொள்ள நினைத்திருந்த கனகராஜ் இந்த அறிக்கையும் வந்துவிட்டபிறகு நிச்சய மாகத் தப்பித்து ஒதுங்கிக்கொண்டுவிடவே நினைத்தான். சுலட்சணா அவனை வற்புறுத்தவில்லை.

''வர்க்க அடிப்படையில் சிந்தித்தால்கூட நீங்கள் இந்த முகாமில் உழைக்க முன்வர மாட்டீர்கள். ஏனென்றால் நீங்கள் சார்ந்திருக்கும் வர்க்க அளவு வேறு மாதிரியானது.''

''வர்க்கம் என்று ஒன்றுமில்லை சுலட்சணா! ஏர்க்காடு மலையில் எங்களுக்கு ஒரு பங்களா இருக்கிறது. இந்தக் கோடைக்கு இதமாக வெயிலே தெரியாமல் ஜிலுஜிலு என்றிருக்கும். அங்கே போய்த் தங்கிப் படிக்கலாம் என்று நினைக்கிறேன். விரும்பினால் நீ கூட என்னோடு வரலாம். உன் வருகையால் ஏர்க்காடு எனக்கு இன்னும் குளிர்ச்சியாக இருக்கும்.''

''எனக்கு வேண்டிய குளிர்ச்சி இங்கேயே இருக்கிறது கனகராஜ்! விடுமுறைக்குள் இந்த ஒரு கிலோமீட்டர் தொலைவு சாலைபோடும் வேலையை நானும் மற்றமாணவர்களும் செய்து முடிக்க வேண்டும். குட் பை! நீங்கள் போகலாம்''— என்றாள் சுலட்சணா.

# 5

கனகராஜைப் போன்ற அழகிய ஸ்மார்ட்டான இளைஞன் ஒருவன் சுலட்சணா தவிர வேறு எந்த இளம் பெண்ணிடம் அந்த மாதிரி ஓர் அன்பு அழைப்பை விடுத்திருந்தாலும் இத்தனை கடுமையாக மறுத்திருக்க மாட்டாள். அவனுடைய முகமன் வார்த்தைகளை இங்கிதமாகத் தட்டிக் கழிக்காமல் கருராக உடனே 'குட் பை' என்று அவனைக் கத்திரித்திருந்தாள் அவள்.

அலுங்காமல், குலுங்காமல், உணவு, உறக்கம், படிப்பு, சுயநலம் என்கிற நான்கு கோடுகளாலான ஒரே சதுரத்திற்குள் அடைபட்டு அழுகும் கனகராஜ் போன்றவர்களை வெறுப்பதைவிட அதிகமான அனுதாபத்தோடு பார்த்தாள் சுலட்சணா.

கண்டித்துச் சுற்றறிக்கை விட்டதோடு ஓயாமல் டீன் அண்ட் ஆக்டிங் வி. சி. என்ற முறையில் உடனே தன்னை வந்து சந்திக்கும்படி 'டல் பிள்ளை' சுலட்சணாவுக்கு ஒரு மெமோ வேறு அனுப்பியிருந்தார். மெமோவைப் பார்த்து அவளுக்கு ஆத்திரம்தான் வந்தது.

பொருளாதாரத் துறை, தமிழ் இலக்கியத்துறை போன்ற சில டிபார்ட்மெண்டுகளுக்கு நல்ல பெயர் இருந்தாலும் வேறு சில வட்டாரங்களில் உதயா பல்கலைக்கழகத்திற்கு உதவாக்கரைப் பல்கலைக்கழகம், ஊழல் பல்கலைக்கழகம், டிக்னிஃபைடு எலிமெண்டரி ஸ்கூல், டிக்னிஃபைடு ஹைஸ்கூல், க்ளோரிஃபைடு காலேஜ் என்றெல்லாம் அகடமிக் சர்க்கிளில் இருண்ட பெயர்கள் உண்டு. வி. சி., டீன் ஆகியோரின் ஊழல்களே இதற்குப் பெரிதும் காரணம். அன்று சுலட்சணாவுக்கு மெமோ அனுப்பியபோதும் இப்படி ஒரு குறுகிய நோக்கத்தோடுதான் அந்த மெமோவை அவளுக்கு அனுப்பி மிரட்டியிருந்தார் ஆக்டிங் வி. சி.

பல்கலைக்கழகத்தில் சுலட்சணாவுக்கு யாரிடமும் எதற்காகவும் அநாவசியமான பயம் கிடையாது. அதுவும் டாக்டர் கையாடல் வல்லான்பிள்ளை எம். ஏ., பிஎச். டி.யிடம் மரியாதைகூடக் கிடையாது. தைரியமாக அவரது மெமோவை வாங்கிக்கொண்டு சந்திக்கச் சென்றாள். கனமான சோடாபுட்டிக் கண்ணாடி, பிதுங்கும் குண்டு விழிகள், எந்தக் கடுங் கோடையிலும் சூட்டு, கோட்டு, டை அணிந்து பார்க்க ஆந்தை போலிருப்பார் டல் பிள்ளை. ஆந்தைமூக்குக் கண்ணாடி அணிந்து நாற்காலியில் அமர்ந்திருப்பதுபோல் சாயல் இருக்கும். குரலிலும் ஏறக் குறைய ஆந்தையின் சாயல்தான்.

"மிஸ் சுலட்சணா! வீ ஆர் ஹியர் டு ஆர்கனைஸ் சோஷியல் செர்வீஸ் லீக் ஆன் பிஹாஃப் ஆஃப் திஸ் யூனிவர்ஸிட்டி" என்று கடுமையாகச் சொல்லி நிறுத்தி விட்டு ஆந்தை விழிகளால் அவளை ஊடுருவினார்.

"இஃப் யூ ஸே லைக் திஸ் வெல் அண்ட் குட் சார். பட் அன்ஃபார்ச்சுனேட்லி ஸோ ஃபார் யூ டிண்ட் ஆர்கனைஸ் எனி சச் ப்ரொக்ராம் ஆன் பிகாஃப் ஆஃப் த யூனிவர்ஸிடி சார்!"

"நீ யாரு அதை எல்லாம் சொல்ல? சோஷல் செர்வீஸ் புரோகிராம் நடந்து ஸ்டூடன்ஸுக்கு மார்க் எல்லாம்கூட முறையாகக் குடுத்திருக்கோம்..."

"டூயிங் கார்டன் வொர்க் இன் த காம்பஸ் இஸ் நாட் அட் ஆல் எ சோஷல் வொர்க் சார்!"

"ஆர் யூ டீச்சிங் மீ வாட் இஸ் சோஷல் வொர்க் அண்ட் வாட் இஸ் நாட் சோஷல் ஒர்க்?..."

"ஸாரி சார்..."

"நௌ யூ மே கோ..."

நிமிர்ந்த நடையோடு டீனின் அறையிலிருந்து வெளியேறினாள் சுலட்சணா. திட்டமிட்டபடி விடுமுறையில் சுலட்சணாவும் அவளோடு ஒத்துழைத்த மாணவ மாணவிகளும் கிராமத்துக்குச் சாலை போட்டு முடித்தார்கள். பொதுவாக இம்மாதிரி சோஷல் சர்வீஸ் நாட்களில் ஆகும் உணவு, சிற்றுண்டிச் செலவுகளைப் பல்கலைக்கழக நிர்வாகம்தான் ஏற்கவேண்டும். முன்பே கட்டணவகைகளில் இதற்கான தொகை மாணவர்களிடம் வசூலிக்கப்பட்டிருந்தும்காம்பஸுக்குள்ளேயே களைபிடுங்கச் சொல்லியும் புதர் வெட்டச் சொல்லியும் வேலையை முடித்து விடுவதால் வழக்கமான ஹாஸ்டல் சாப்பாடு — சிற்றுண்டியிலேயே இதையும் சமாளித்து விட முடிந்தது. வேறு எக்ஸ்ட்ரா செலவு இல்லை.

சாலை போடச் சுலட்சணா செய்த ஏற்பாட்டில் பல்கலைக் கழகத்திலிருந்து பணம் எதுவும் கோரிப் பெருமல் அவரவர்கள் செலவை அவரவர்களே பார்த்துக் கொண்டார்கள்.

அவர்களது பணி நடந்த பகுதி மக்களும் வலிய முன் வந்து அவர்களுக்கு உதவினார்கள். எல்லாரிடமிருந்தும் மாணவ மாணவிகளுக்கு நல்ல ஒத்துழைப்புக் கிடைத்தது. படிக்கிற பையன்களும், பெண்களும் வெயிலில் மண்வெட்டியும் கூடைகளுமாகச் சாலை போடுவதை மக்கள் வியப்பாகப் பார்த்தார்கள்.

விடுமுறை நிமித்தம் ஊருக்குப் போகுமுன் கனகராஜ் சுலட்சணாவை வந்து பார்த்தான். சமூக சேவைத் திட்டத்திற்கு மாணவர்களை அழைக்கும் துண்டுப் பிரசுரங்கள் அச்சாகி வந்திருந்தன. சுலட்சணாவிடமிருந்து அதில் ஒரு துண்டுபபிரசுரத்தைத் தானே கேட்டு வாங்கிப் படித்துப் பார்தத கனகராஜ் அலட்சியமாகவும் ஏளனமாகவும் நகைத்தான். பின்பு சொன்னான்:

"இந்தக் கழுதை பொதி சுமக்கிற வெயிலில் நம்மாலே அலைய முடியாது. சுகமாக ஒரு மாசம் ஏர்க்காட்டிலே

இருக்கிறதைப் பத்து வருஷமாப் பழகியாச்சு. இனிமே நான் என்னை மாத்திக்க முடியாது.''

''நீங்கள் மட்டுமில்லை மிஸ்டர் கனகராஜ்! இந்நாட்டு மக்களில் பலர் தாங்களாகவே தங்களைக் காலத்துக்கேற்ப மாற்றிக்கொள்ளத் தயாராயிருக்கமாட்டார்கள். காலம்தான் அவர்களை மாற்றவேண்டும். மாற்றும் என்று நினைக்கிறேன்.''

''நீ நினைக்கிறபடி எல்லாம் அவ்வளவு சீக்கிரமாக இந்த நாட்டில் எதுவும் நடந்துவிடாது சுலட்சணா!''

''மனிதனை என்றும் மாறுமலிருக்க நிர்ப்பந்தப்படுத்தும் மதம், சடங்குகள், சம்பிரதாயங்களிலிருந்து அவனை உடனே மாற்ற முயலும் விஞ்ஞானம் வித்தியாசமானது. விஞ்ஞானத்துக்கும் மதத்துக்கும் உள்ள குளிர்யுத்தத்தில் இளைஞராகிய நீங்கள் விஞ்ஞானத்தின் பக்கமில்லை என்பதுதான் மிகவும் துயரமான விஷயம்.''

''விஞ்ஞானத்தின் பக்கத்திலும் மதத்தின் பக்கத்திலும் நான் இருக்கிறேனு இல்லையோ, நிச்சயமாக உன் பக்கம் இருக்கிறேன். உன்னைப் போல ஓர் அழகிய பெண்ணின பக்கமாக நெருங்கி நிற்பதற்குப் பெருமைப்படுகிறேன். நீ நடத்துகிற சோஷியல் செர்வீஸ் 'லீக்' முகாமில் என்னுல் கலந்து கொள்ள முடியாவிட்டாலும் என் உதவி உனக்கு உண்டு சுலட்சணு! இந்தா இதை என்னுடைய 'ஹம்பிள் டொனேஷனுக' ஏற்றுக்கொள்''—என்று சட்டைப் பையிலிருந்து ஐந்து புத்தம் புது நூறு ரூபாய் நோட்டுக்களை எண்ணி எடுத்து அவளிடம் நீட்டினுன் கனகராஜ். அவள் உதாசீனமாகச் சிரித்தாள்:

''தயவுசெய்து மன்னிக்கவும். எங்களுக்கு வேண்டியது உழைப்பு. வெறும் பணம் மட்டுமில்லை. சேவையைத் தர விரும்பாத-சேவைக்கு ப்ராக்ஸியாகத் தரப்படுகிற பணத்தை நாங்கள் வாங்குவதில்லை''—என்று நிர்த்தாட்சண்யமாக

அதை மறுத்து அவனிடமே திருப்பிக் கொடுத்து விட்டாள் சுலட்சணா.

அவன் இதை எதிர்பார்க்கவில்லை. திடீரென்று முகத்திலறைந்தாற் போலிருந்தது. 'சமூகப் பணி முகாம்' நடத்துவதற்காக அவள் மாணவ மாணவிகளிடம் நிதி வசூலிப்பதை அவன் அறிந்திருந்தான். அவளுக்கு அதில் உதவியாயிருக்கட்டும் என்றுதான் அவன் ஐநூறு ரூபாயைத் தூக்கித் தயங்காமல் கொடுத்திருந்தான். அவளோ ஒரே விநாடியில் அவனது பெருந்தன்மையைத் தூள் தூளாக்கி விட்டாள்.

அவன் சற்று ஆத்திரமடைந்த குரலிலேயே,

"எல்லாரிடமும் பணம் வசூல் செய்கிறாயே, நான் கொடுப்பதை மட்டும் ஏன் வாங்க மறுக்கிறாய்?"—என்று அவளைக் கடுப்போடு கேட்டான்.

"நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைப்பதற்கு நான் வரமாட்டேன்! பணம் வேண்டுமானால் தருகிறேனென்று முன் வருகிற ஆட்களாகப் பார்த்து வசூல் செய்தால்—இதற்குச் சமூக சேவை என்று ஏன் பெயரிட்டு அழைக்க வேண்டும்? நன்கொடை வசூல் செய்து யாராவது ஒரு சாலைக் காண்ட்ராக்ட் என்ஜினியரிடம் கொடுத்து அவரையே ரோடு போடச் சொல்லி விட்டு விடலாமே? அதுவல்ல எங்கள் நோக்கம். எம். ஏ. யும் எம். ஃபில்லும், எம். டெக். கும், எம். டி. யும் படிக்கிற மாணவர்கள் வசமும் மண்வெட்டி பிடித்து உழைக்கிற மனமும் உடலும் உண்டு என்பதை நிரூபிக்கும் முயற்சியில் இறங்கியிருக்கிறோம். இதில் பணமே மனிதனுக்கு ப்ராக்ஸியாக நின்று விட முடியாது, கூடாது என்பதுதான் என் கொள்கை"—

"இது மிகவும் விநோதமான கொள்கைதான்."

"விநோதமான மனிதர்களுக்கு எல்லா நல்ல கொள்கைகளும் கூட விநோதமாகவே தோன்றும்; இயல்பாகத் தோன்றாது"—

"திறந்த வெளியில் சட்டையில்லாத உடம்புடன் மண் வெட்டி பிடித்து வேர்க்க விறுவிறுக்கச் சாலை போடுகிற திறமையோ பழக்கமோ எனக்கு இல்லை. ஆனாலும் உனக்கு எப்படியும் உதவ வேண்டும் என்பதற்காகவே என் பாக்கெட் மணியாக அப்பா எனக்குத் தருவதில் மிச்சம் பிடித்து உன்னிடம் கொடுத்தேன்."

"எனக்கு வேண்டியது உங்கள் வேர்வையும் உழைப்புமே ஒழியப் பணம் இல்லை. வேர்வையையும் உழைப்பையும் ஏழைகளுக்காக விட்டுக்கொடுக்கிற மனம் உங்களுக்கு இருக்கிறதா இல்லையா என்று அறிய விரும்பினேன். அந்த மனம் உங்களுக்கு இல்லை. பிச்சைக்காரனுடைய திருவோட்டில் கையில் வந்த காசுகளை அவசர அவசரமாக அள்ளிப் போடுகிற பணக்காரன் போல் நீங்களும் என்னிடம் பணத்தை எடுத்து நீட்டினீர்கள். எனக்கு அது பிடிக்கவில்லை, வேண்டாமென்றேன். என் நிலையில் நான் செய்ததுதான் சரி."

அந்தச் சாலை போடும் திட்டம் மாணவ மாணவிகளின் ஒத்துழைப்போடு வெற்றிகரமாக முடிந்தபிறகும் கனகராஜ் பணம் கொடுக்க முன்வந்த இந்தச் சம்பவத்தையும், பல்கலைக்கழகடன் தன்னைக்கூப்பிட்டு மிரட்டிய அந்தச் சம்பவத்தையும் பலமுறை திரும்பத் திரும்ப இவ்வாறு நினைத்துப் பார்த்திருக்கிருள் சுலட்சணா. எதிர்ப்புக்களும் பயமுறுத்தல்களும் அவளை வளரச் செய்தனவே ஒழிய ஒரு சிறிதும் தளரச் செய்யவில்லை. தயங்கச் செய்யவில்லை.

அந்தப் பல்கலைக்கழக வட்டாரத்தில் ஆண் அழகனைத் தேர்ந்தெடுக்க ஒரு போட்டி நடத்தினால் சுலபமாகக் கனகராஜ் தேர்ந்தெடுக்கப்பட்டு விடுவான் என்பதில் சந்தேகமில்லை. அதேபோல அழகியைத் தேர்ந்தெடுக்க விரும்பினால் சந்தேகத்துக்கு இடமில்லாமல் சுலட்சணா வெற்றிபெறுவாள் என்பது சர்வநிச்சயம். இப்படிப்பட்ட இருவருமே எகனாமிக்ஸ் துறையில் ஒரே வகுப்பில் சேர்ந்து

படிப்பது அந்த டிபார்ட்மெண்ட்மேல் மற்றவர்களைப் பொருமை கொள்ளச் செய்தது. ஒரே வகுப்பில் சேர்ந்து படித்ததோடு போகாமல் அவர்கள் ஒன்ருகப் பழகவும் செய்தார்கள். ஒன்ருகத் தென்பட்டார்கள். ஒன்ருகப் பொது இடங்களில் சிரித்துப் பேசி மகிழ்ந்தார்கள். சந்தித்தார்கள். பிறர் கண்களில் பட்டார்கள்.

இதனுல் பரவலாக அந்தப் பல்கலைக்கழக எல்லையில் அவர்கள் இருவரும் காதலிக்கிருர்கள் என்று ஓர் அநுமானம் தானுகவே ஏற்பட்டுப்பரவியிருந்தது. இந்தச் செய்தியைச் சம்பந்தப்பட்ட இருவருமே முன்வந்து ஆட்சேபிக்கவும் இல்லை. ஆமோதிக்கவும் இல்லை. கனகராஜ் இதை வரவேற் ருன். நம்பினுன். இதற்காக உள்ளூர அவன் மனம் குறு குறுத்தது. மகிழ்ந்தது. அவளோடு முன்னைவிட இன்னும் அதிக உரிமை எடுத்துக்கொண்டு பழகினுன். அவளை அவனுல் இன்னும் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. நடுவில் ஏதோ நெருடியது. சிரிக்கச் சிரிக்க அவனேடு பேசினுள். விவாதித்தாள். தனியாக உணவு விடுதிகளுக்கு அழைத்தால் மறுக்காமல் வந்தாள். ஆனுல் அவனிலிருந்து தீர்மானமாக நிச்சயமாக வேறுபட்டாள். சாப்பிடும் பண்டங் களிலிருந்து சர்ச்சை செய்யும் விஷயங்கள் வரை அவள் தனித்து நின்ருள்.

அவன் "இரண்டு மசால் தோசை"—என்று ஆர்டர் கொடுத்தால் உடனே குறுக்கிட்டு "எனக்கு வெறும் டீ மட்டும்தான்"—என்பாள். 'தோசை வேண்டாம், டீ போதும்'—என்று அவன் ஆட்சேபணையைப் பொருட்படுத் தாமல் வெயிட்டரிடமே நேரில் கண்டிப்பாகச் சொல்லிவிடு வாள்.

படத்துக்கு வர ஒப்புக்கொண்டு தியேட்டர் வாசல்வரை கூடப் போவாள். அங்கே போய்ப் பார்த்ததும், "மூளையை மழுங்க அடிக்கிற இந்த மாதிரிப் படத்துக்கெல்லாம் நான்

வரமாட்டேன். ஆக்ரோஷ், அர்த்தசத்யா, தாகம், முகா முகம், தர்ட்டிசிக்ஸ் செளரங்கி லேன் மாதிரி எதாவது படங்கள் வந்தால் சொல்லுங்கள். சேர்ந்து போவோம்''— என்று திரும்பிக் கிளம்பிவிடுவாள். அவனும் வேறு வழியின்றி நிறையப்பணம் செலவழித்து ரிசர்வ் செய்திருந்த டிக்கெட்டு களைக் கிழித்தெறிந்துவிட்டு அவளைப் பின் தொடர்வான்.

''ஷீ இஸ் அன்ப்ரடிக்டபிள்'' என்று அவன் உள்ளே கறுவிக் கொள்வான். அவளோ அவனளவிற்கு அதில் உணர்ச்சிப் பாதிப்பு இல்லாமல், ''எனக்குப் பிடிக்கவில்லை என்பதற்காக நீங்கள் ஏன் டிக்கெட்டைக் கிழித்துப் போட்டு விட்டுத்திரும்பு கிறீர்கள்? உங்களுக்குப் பிடித்தால் நீங்கள் போய் உட்கார்ந்து படம் பார்த்துவிட்டு வரவேண்டியது தானே?''—என்று சர்வ சகஜமாக அவனைக் கேட்பாள்.

தன்னை அவள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையா அல்லது அவளைத்தான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையா என்று விளங்கிக்கொள்ள முடியாமல் அப்போதெல்லாம் திணறுவான் அவன். அவள் தன்மேல் இரக்கப்பட்டுப் பழகு கிறாளா, பிரியப்பட்டுப் பழகுகிறாளா என்ற சந்தேகம் அவனுள் அடிக்கடி மூண்டு மனத்தைத் திக்குமுக்காடச் செய்யும்.

ஒரு வாலிப வயதுப் பெண்ணிடமிருந்து இரக்கத் தையோ பரிவையோ அவன் எதிர்பார்க்கவில்லை. பிரியத்தை யும் காதலையுமே எதிர்பார்த்துத் தவித்தான். ஆனால் அவன் எதிர்பார்த்தது கிடைக்கவில்லை.

# 6

ஒரு முறை சுல்ட்சனுவும் கனகராஜுவும் யூனிவர்ஸிடி காம் பஸுக்கு அருகே உள்ள ஒரு கடைத் தெருவில் மாலை வேளை யில் தற்செயலாக நடந்து போய்க் கொண்டிருந்தபோது ஒரு சம்பவம் நடந்தது. கவனத்தைக் கவரும் சம்பவம் அது.

பரபரப்பான பஜாரில் காய்கறி கூறுகட்டி வைத்து விற்றுக் கொண்டிருந்த ஓர் இளம் பெண்ணை அந்தப் பக்கத்துப் பேட்டை ரவுடி ஒருத்தன் தலைமுடியைப் பிடித்து இழுத்துக் கன்னத்தில் அறைந்து கொண்டிருந்தான். மற்றவர்கள் காது கொடுத்துக் கேட்கக் கூசும் அநாகரிகமான வார்த்தைகளால் அவளைத் திட்டிக் கொண்டிருந்தான். இவ்வளவுக்கும் அது மாலை நேரமாகையினுல் பஜாரில் நல்ல கூட்டம். ஆனால் யாரும் அந்தப் பேட்டை ரவுடியை ஏனென்று தட்டிக் கேட்க முன்வரவில்லை. எதுவுமே நடக்காதது போல் எதையுமே கண்டுகொள்ளாமல் மக்கள் அந்த இடத்தைக் கடந்து போய்க் கொண்டிருந்தார்கள், வந்து கொண்டிருந்தார்கள்.

'நிராதரவான இளம் பெண் ஒருத்தியை நடுத்தெருவில் துகிலுரியாத குறையாக ஒருத்தன் இம்சை பண்ணி மானபங்கப்படுத்திக் கொண்டிருக்கிருன். ஏன் என்று கேட்பாரில்லையா?'—என்று மனக் குமுறலோடு தயங்கி நின்ருள் சுலட்சணு. கனகராஜ் அவள் காதருகே முணுமுணுத்துத் துரிதப்படுத்தினுன்:

"நேரம் சரியாயில்லை. இப்போ இங்கே நிற்க வேணும் பெரிய கலாட்டா வரும் போல இருக்கு. கண்டுக்காமப் போயிடலாம், வா."

இதைக் கேட்டுச் சுலட்சணுவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. கண் முன்னுல் நடக்கிற ஓர் அக்கிரமத்தை—அநியாயத்தை—அநாகரிகத்தை ஏனென்று கேட்காமல் 'நமக்கேன் வம்பு? கண்டுக்காமப் போயிடலாம்'—என்று உபாயம் சொல்கிற ஆண் பிள்ளையை ஏறிட்டுப் பார்க்கவே அருவருப்பாயிருந்தது அவளுக்கு.

கனகராஜின் முகத்தில் கலவரமும் பீதியும் தெரிந்தன. உடனே அங்கிருந்து ஓடிவிட வேண்டும் போன்றதொரு தப்பிப் பிழைக்கும் அவசரம் அவன் முகத்தில் தெரிந்தது. அந்தப் பெண்பிள்ளையை ரவுடி இம்சைப்படுத்திக் கொண்டிருந்த அதே பிளாட்பாரத்தில் லத்திக்கம்பு சகிதம்

உலாத்திக் கொண்டிருந்த ஒரு போலீஸ்காரன் அதைக் கண்டு கொள்ளாததுபோல் இருந்தான். சுலட்சணு அவனிடம் ஓடிப்போய்ப் புகார் செய்தாள்.

"உங்களுக்கு ஏம்மா இதெல்லாம்? அவங்க இந்த நிமிஷம் அடிச்சிப்பாங்க, அடுத்த நிமிஷமே சிரிச்சுப் பேசு வாங்க...நாம தலையிடறது சரியா இருக்காது"—என்று வேதாந்தம் பேசினுன் கான்ஸ்டபிள்.

நடந்து கொண்டிருந்த சண்டையைப் பார்த்தால் அப்படிப்பட்டதாகத் தெரியவில்லை. அந்த ரவுடியின் இடுப்பில் இளநீர் சீவுகிற அரிவாள் போல் கூர்மை மின்னும் அரிவாள் வேறு இருந்தது. கனகராஜ் உதவிக்கு வருவான் என்று நம்பிப் பயனில்லை என்கிற முடிவுக்கு வந்த சுலட்சணு அந்த ரவுடியை நோக்கி, "அடிக்கிறதை நிறுத்துப்பா... என்ன தகராறு உங்களுக்குள்ளே...?"—என்ற கேள்வியுடன் விரைந்தபோது, "சுலட்சணு! வேண்டாம் போகாதே சொன்னுக் கேளு!"—என்று அவளைத் தடுத்து அலறினுன் கனகராஜ். அவள் அவனைப் பொருட்படுத்தவில்லை. 'சிவிக் கரேஜ்' இல்லாத ஆண்பிள்ளையும் ஓர் ஆண் பிள்ளையோடு சேர்த்தியா என்று அவனைத் துச்சமாக நினைத்தாள் சுலட்சணு.

அவசர அவசரமாகப் பக்கத்துக் கடையிலிருந்த இளைஞன் ஒருவன் ஓடி வந்து சுலட்சணுவை வழிமறித்து, "இதுலே நீங்க ஏம்மா தலையிட்டு வம்பை விலைக்கு வாங்கறீங்க? இங்கே பிளாட்பாரத்துல கடை பரத்தறவங்க எல்லாம் அந்த ஆளுக்கு 'மாமூல்' குடுத்துடறது உண்டு. இந்தப் பொண்ணு புதுசு. இதுக்கு நடைமுறை தெரியாது. தெற்கே ராமநாத புரத்துப் பக்கத்திலேருந்து புதுசாப் பிழைக்க வந்திருக்கு. "பிளாட்பாரத்திலேகடைபோட நீ யாருப்பாஅதிகாரி?"ன்னு அவனை அது எதிர்த்துக் கேட்டதாலேதான் தகராறு"—என்றான்.

சுலட்சணு பதிலுக்கு அவனை வினவினுள்:- "அந்தப் பெண் கேட்டதிலே என்ன தப்பு? அவ பிளாட்பாரத்திலே

கடை போட இவனுக்கு ஏன் பணம் அழணும்? இவன் யாரு? அதுக்குத் தானா வதியா என்ன?''

''அது மாமூல்! இல்லாட்டி அவன் கலாட்டாப் பண்ணு வான். தகராறு வரும்.''

''போலீஸ்ல கம்ப்ளயிண்ட் பண்ணலாமே?''

''போலீஸ் இதெல்லாம் ஒண்ணும் கண்டுக்காது. ஏன்னா இந்த வசூல்லே அவங்களுக்கும் பங்கு உண்டு''—

அந்தப் பெண்ணின் கண்ணீரையும் அழுகையையும் காணாமலும் கதறலைக் கேளாமலும் அப்போது அந்த பஜாரில் வருவதும் போவதுமாயிருந்த அத்தனை மனிதர்களும் கபோதி களா, கை கால் இழந்த முடங்களா என்று அவர்கள் மேல் வெறுப்பும் கோபமும் அடைந்தாள் சுலட்சணா. அவள் குறுக்கே பாய்ந்து அந்தச் சண்டையைத் தடுக்க முயன்ற போது அந்த மீசைக்கார முரடனின் கோபம் முழுவதும் சுலட்சணாவின் மீது திரும்பியது. ''வாம்மா ஜான்ஸி ராணி! இவளுக்குப் பரிஞ்சுக்கிட்டு வர்ரியா நீ?''—என்று சுலட்சணா வின் பக்கம் திரும்பினான் அவன்.

பல்கலைக்கழக விவசாயப் பிரிவு மாணவர்கள் சிலர் அந்த வேளையில் தற்செயலாக அந்த பஜார்ப்பக்கம் நடந்து போய்க் கொண்டிருந்தவர்கள் சுலட்சணாவை நன்கு அடையாளம் தெரியுமாகையால் அவளுக்கு உதவியாக வந் தார்கள். அந்த முரடனைத் தட்டிக் கேட்டார்கள். சுலட்சணா வின் பக்கம் அணிவகுத்து நின்றார்கள். ஆனால் கனகராஜ் பக்கத்திலேயே வரவில்லை. பயத்தோடு தூர விலகி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தானே ஒழியப் பக்கத் திலேயே நெருங்கவில்லை அவன். அரிவாளுக்கும், அரிவாள் மீசைக்காரனுக்கும், அத்தனை பயம் அவனுக்கு. விவசாய மாணவர்கள் நால்வரும் அப்படிப் பயப்படவில்லை.

முரடன் முதலில் தாக்கிக் கொண்டிருந்த பெண்ணையும், சுலட்சணாவையும் விட்டுவிட்டுப் பரிந்து கொண்டு வந்த விவ

சாயப்பிரிவு மாணவர்கள்மேல் அரிவாளோடு பாய்ந்தான். அதை அவர்கள் முற்றிலும் எதிர்பார்க்கவில்லை. பேச்சில் ஆரம் பித்ததர்க்கத்தை உடனே அவன் அரிவாளால் எதிர்கொள் வான் என எதிர்பார்த்திராத அவர்களில் மூவர் மருண்டு சற்றே பின்வாங்கினர். அபாரமான துணிச்சலும் அரிவாளுக் குப் பயப்படாத ஆண்மையுமுள்ள ஒருவன் மட்டும் ஓங்குகிற அரிவாளோடு வந்த அந்த ரவுடியின் வலது கையை அப்படியே மறித்துத் தடுத்துப் பிடித்தான்.

அந்த மாணவனைச் சுலட்சணாவுக்கே நன்றாகத் தெரியும். அவளுடைய சமூக சேவை முகாம், ஹாஸ்டல் உண்ணா விரதம் எல்லாவற்றிலும் ஆர்வமாக முன்வந்து கலந்து கொண்டவன். வீராசாமி என்று பெயர்கூட நினைவு இருந் தது. ஊர்கூட முதுகுளத்தூர்ப் பக்கம் என்பதாகவும் நினைவிருந்தது. அப்போது அவன் காட்டிய வீரம் அவளை வியப்பிலாழ்த்தியது. "நடுத்தெருவிலே பொம்பளையைக் கை ஓங்கி அடிக்கிற நீயும் ஒரு மனுசன்தானா?"—என்று வரிந்து கட்டிக்கொண்டு அந்த ரவுடியை மடக்கிப் பிடித்து விட்டான் வீராசாமி. ஒற்றைக்கு ஒற்றையாக அரிவாளும் கையுமாக இருந்த அந்த முரடனைச் சமாளித்தான் அவன்.

ஆனால் கண் இமைக்கும் நேரத்தில் வேறுமாதிரி நடந்து விட்டது. வீராசாமி தன்னை மடக்கிவிட்டான் என்ற ஆத்திரத் திலும் அவமானத்திலும் சீறிய ரவுடி திமிறிக்கொண்டு பாய்ந் தான். உடனே ஓர் அலறல். அதைத் தொடர்ந்து அடுத்த நொடியில் இரத்தம் சொட்டச்சொட்ட ஒரு இளம் வலதுகை நடுரோட்டில் துண்டிக்கப்பட்டு வந்து விழுந்தது.

என்ன நடந்தது என்று புரியவே சில நொடிகள் ஆயிற்று. ரவுடி ஓடி விட்டான். விவசாய மாணவர்கள் அவனைத் துரத்திக் கொண்டு பாய்ந்தனர். வீராசாமி மட்டும் வெட்டுண்ட கையில் குருதி ஒழுகத் துடிதுடித்தபடி விழுந்து கிடந்தான். நடைபாதைப் பெண்ணும் சுலட்சணாவும் அவனைத் தாங்கிக் கொண்டார்கள். சுற்றிலும் கூட்டம் கூடி

விட்டது. ஆம்புலன்ஸுக்கு ஃபோன் செய்யச் சொல்லலாம் என்று சுற்றி நின்ற கும்பலில் கனகராஜின் முகத்தைத் தேடினாள் சுலட்சணா. அவனைக் காணவில்லை. கும்பலில் மட்டுமில்லை, கும்பலுக்கு அப்பாலும் கண்ணுக்கு எட்டிய தூரம்வரை கனகராஜ் தென்படவே இல்லை. பயந்து ஓடிப் போயிருப்பானோ என்று அவளுக்குச் சந்தேகமாயிருந்தது.

அங்கே பக்கத்தில் இருந்த போலீஸ் நிலையத்தில் தகவல் சொல்லி அங்கிருந்தே ஆம்புலன்சுக்கும் ஃபோன் செய்வதாகக் கூறிவிட்டு யாரோ ஒருவர் விரைந்தார். கனகராஜ் மட்டும் ஆள் அகப்படவே இல்லை. எங்கே போனானோ? சுலட்சணா துணையின்றி நிராதரவாகத் தவித்தாள். ரவுடியைத் துரத்திக்கொண்டு ஓடின அந்த மூன்று மாணவர்களும் திரும்பி வந்து சேரக் கால்மணி நேரத்திற்கு மேல் ஆகி விட்டது. வீராசாமியின் உடலிலிருந்து இரத்தம் அதிகமாக வெளியேறிவிட்டால் உயிருக்கு ஆபத்தாகி விடுமோ என்றும் பயமாயிருந்தது சுலட்சணாவுக்கு. அவனைக் காப்பாற்றப் பதறினாள்.

போலீஸ் வந்தது. ஆம்புலன்ஸ் வந்தது. அவளிடமும் நடைபாதைப் பெண்மணியிடமும் ஸ்டேட்மெண்ட் வாங்கிக் கொண்டு முடித்து ஆஸ்பத்திரியை நோக்கி விரைந்தது ஆம்புலன்ஸ். சுலட்சணாவும் ஆம்புலன்ஸில் வீராசாமியுடன் சென்றாள்.

அந்த இடத்திலிருந்து ஆம்புலன்ஸ் கிளம்புவதற்குள்ளேயே எப்படியோ தகவல் எட்டிப் பல்கலைக்கழக மாணவ மாணவிகள் கூட்டம் கூட்டமாக வர ஆரம்பித்து விட்டனர். அவர்களால் பஜாரில் ஏதேனும் கலகம் மூண்டு விடக் கூடாதே என்று போலீஸார் முன்னெச்சரிக்கை உணர்வு அடைந்தனர். கூட்டம் கூடாமல் கலைத்தனர்.

"இந்த நாளில் சர்ஜரியில் விநோதங்கள் எல்லாம் நடக்கின்றன. வலது மணிக்கட்டை அப்படியே ஒட்ட வைத்து

விடலாம். வலது கை விரல்கள் இல்லாவிட்டால் பாவம்... அவனது வாழ்க்கையே வீணாகிவிடும்'' என்று கூடியிருந்தவர்கள் பேசிக் கொண்டார்கள். 'பிளாஸ்டிக் சர்ஜரியில் முடியாதது இல்லை'-என்று மற்றொருவர் சொன்னார்.

இரண்டு மணி நேரம் வரை இந்த சஸ்பென்ஸ் நீடித்தது. அதன்பின் வெட்டுண்ட மணிக்கட்டுப் பகுதியையும் உடம்பில் எஞ்சிய கையின் நுனியையும் பரிசோதித்த டாக்டர்களும் நிபுணர்களும் - இரண்டையும் இணைப்பது இனி மேல் சாத்தியமில்லை என்று தெரிவித்துவிட்டனர். வீராசாமியின் வலது கை முளியாகத் தான் இருக்கும் என்றறிந்ததும் சுலட்சணா கதறினாள். அழுதாள். முடிவில் வேறு வழியின்றி மௌனமாகக் கண்ணீர் சிந்தினாள். மறுநாள் பல்கலைக்கழக மாணவர்கள் கருப்புச் சின்னமணிந்து பஜாரில் மௌன ஊர்வலம் சென்றார்கள். சுலட்சணா தலைமை வகித்தாள்.

'நியாயம் கேட்ட மாணவனைக் காட்டுமிராண்டித்தனமாக வெட்டிய சமூகவிரோதியைத் தேடிக் கைது செய்ய வேண்டும்' என்ற கோரிக்கை கலெக்டருக்கும் மற்றவர்களுக்கும் பல்கலைக்கழக மாணவர்களால் முன்வைக்கப்பட்டது. அந்தப் பேட்டை ரவுடி ஆளும் கட்சிப் பிரமுகர் ஒருவருக்கு வேண்டியவன் என்றும் போலீஸார் அவனைக் கைது செய்ய மாட்டார்கள் என்றும் வதந்தி பரவவே மாணவர்கள் கொதித்தெழுந்தனர்.

பிரச்னை பெரிதாகி மாணவர்கள் போராட்டம் வலுத்து விடுமோ என்று பயந்து இரண்டு தினங்கள் வரை மெத்தனமாக இருந்த போலீஸார் மூன்றாவது நாள் அந்த ரவுடியைக் கைது செய்து லாக்கப்பில் வைத்தார்கள். குற்றப்பத்திரிகையும் தயார் செய்தார்கள்.

இரண்டு மூன்று நாள் இத்தனை ரகளை நடந்தபோதும் சுலட்சணாவின் பார்வையில் கனகராஜ் தட்டுப்படவே இல்லை. 'பல்கலைக்கழகக் காம்பஸுக்கு வெளியே நடக்கும் தகராறு

களிலும் சர்ச்சைகளிலும் சண்டைகளிலும் வீணாகப் பல்கலைக் கழக மாணவர்கள் தலையிட்டுப் பல்கலைக்கழகத்திற்குள் டென்ஷனையும், விவகாரங்களையும், பதில் விளைவுகளையும் கொண்டு வராமல் இருக்க வேண்டும்' என்பதாகத் துணை வேந்தர் ஒரு சுற்றறிக்கையை அவசர அவசரமாக அனுப் பினார். நல்ல வேளையாக அவர் அயல்நாடு எதுவும் போகா மல் அப்போது ஊரிலேயே இருந்தார். டீனும் துணைவேந் தரும் சுலட்சணாவைக் கூப்பிட்டு அனுப்பினார்கள். கண்டிப்பது போன்ற குரலில் அவளிடம் பேசினார் துணை வேந்தர்.

"இந்தக் காம்பஸிலே உன்னாலே எப்பவும் வம்புதான் அம்மா! பஜார்லே நடக்கிற தெருச் சண்டையை எல்லாம் யூனிவர்ஸிடி காம்பஸுக்குள்ளே கொண்டு வந்து விட்டு எங்கள் உயிரை ஏன் வாங்குகிறாய்? ஒழுங்காய் லட்சண மாய்ப் படிப்பைக் கவனியேன்"—

"உங்க யூனிவர்ஸிடி மாணவன் ஒருத்தன் தெருவிலே நடந்த ஒரு அக்கிரமத்தைத் தட்டிக்கேட்ட உடனேயே ரவுடி அவன் கையை வெட்டியெறியறது எப்படி சார் தெருச் சண்டையாகும்? அதைப் பொறுத்துக்கொண்டு நாங்க எப்படிச் சும்மா இருக்க முடியும் சார்?"

"தகராறு யூனிவர்ஸிடி சம்பந்தமானதா இல்லையாங் கிறதுதான் இப்போ என்னுடைய கேள்வி?"

"பாதிக்கப்பட்டவர்கள் உங்களுடைய யூனிவர்ஸிடி மாணவர்கள் என்பதுதான் என் பதில்."

"வேலை கெட்டுப்போயி நீங்க இழுத்துக்கிட்டு வர்ர தெருச் சண்டையைப் பத்தி எல்லாம் இங்கே தேடி வர்ர போலீஸ்காரங்களுக்கு நான் பதில் சொல்லிக்கிட்டிருக்க முடியாது"—

"கொஞ்சம்கூட மனிதாபிமானம் இல்லாமப் பேசாதீங்க சார்! ஒரு ஸ்டூடண்ட் வலது கையை முறிச்சுக்கிட்டு

ஆஸ்பத்திரியிலே கிடக்கிறாரு. பேட்டை ரவுடிங்க கிட்டச் சிக்கி அவஸ்தைப்பட்ட ஒரு பெண்ணையும், என்னையும் துணிந்து காப்பாற்ற முன்வந்ததுக்காக அந்த ஸ்டூடண்டுக்குக் கிடைச்ச பரிசு அது!''

''தலையிட வேண்டாததுலே எல்லாம் அநாவசியமாத் தலையிடறதாலே வர்ர வம்புதான் இதெல்லாம்''—

''நீங்களோ, டீனோ ஒரு கர்டிஸிக்காகக்கூட இன்னும் ஆஸ்பிடலுக்கு விஸிட் பண்ணலே. அந்தக் கையிழந்த ஸ்டூடண்ட்டைப் பார்த்து ஆறுதலா ரெண்டு வார்த்தை சொல்லலே. மாணவர்கள் எல்லாம் நொந்து கொதிச்சுப் போயிருக்காங்க''—

''இதென்ன எங்களுக்கு மிரட்டலா?''

''நீங்க எப்பிடி வேணும்னாலும் எடுத்துக்கலாம். பூனை கண்ணை மூடிறதாலே உலகம் இருண்டு போய்விடாது சார்!''

# 7

இப்படித் துணைவேந்தரைத் தைரியமாக எச்சரித்து விட்டு அவருடைய அறையிலிருந்து வெளியேறித் தன் விடுதிக்குத் திரும்பினாள். அவள் திரும்பியபோது மாணவர்களின் விடுதி மெஸ் பையன் ஒருவன் ஒரு கடிதத்தோடு அவளுக்காக முகப்பிலேயே காத்திருந்தான். கனகராஜ்தான் கடிதத்தை எழுதியிருந்தான். கடிதம் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. கூடவே ஒரு செக் ஆயிரம் ரூபாய்க்கு எழுதி இணைக்கப் பட்டிருந்தது.

''சுலட்சணா! என்னை மன்னித்துவிடு. சிறு வயதிலிருந்தே அரிவாள், முரடர்கள், இரத்தம் என்றால் பயந்து நடுங்குகிற சுபாவம் எனக்கு. கலகம் என்றால் காததூரம் ஓடிவிடுவேன். அன்று பஜாரில் உன்னோடு இறுதிவரை

துணை நின்று உதவாமல் ஓடி வந்து விட்டதற்காகத் தவருக நினைக்காதே. வீராசாமியின் ஆஸ்பத்திரிச் செலவுகள் போன்றவற்றுக்கு உபயோகமாக இருக்குமென்று இதனுேடு ஓர் ஆயிரம் ரூபாய்க்குச் 'செக்' இணைத்திருக்கிறேன்! உன் கோபம் ஆறுவதற்கு முன் உன்னை நேரில் வந்து சந்திக்கப் பயமாயிருக்கிறது. இரண்டு நாளில் பார்க்கிறேன்''— என்று கடிதம் சொல்லியது. கடிதத்தைப் படித்ததும் தரையில் காறித் துப்பினுள் அவள்.

இதைப்படித்ததும் அவளுக்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது. அதே கடிதத்தின் பின்பக்கத்தில், ''உங்கள் அநுதாபம் எனக்கோ வீராசாமிக்கோ தேவையில்லை. அநுதாபம், செக் எல்லாவற்றையும் திருப்பி அனுப்பியுள்ளேன். அதோடு உங்களுக்குத் தினசரி பூசிக்குளிக்கவும் அணிந்து கொள்ளவும் உபயோகமாக இருக்குமென்று இரண்டு மஞ்சள் கிழங்குகளும் அரைடஜன் கண்ணுடி வளையல்களும் அனுப்பியுள்ளேன். பெற்றுக் கொள்ளவும்'' — என்று எழுதி அறைக்குப்போய் இரண்டு மஞ்சள் கிழங்கும் பெட்டியில் சொந்த உபயோகத்துக்காக வாங்கி வைத்திருந்த புது வளையல்களில் ஆறையும் ஒரு பழைய அட்டைப்பெட்டியில் அடுக்கி அழகாக கிஃப்ட் பொட்டலம் போலக் கட்டி அந்தப் பையனிடம் கொடுத்து அனுப்பினுள் சுலட்சணு.

'இவனைப்போன்றவர்கள் பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்திருக்கலாம். யூனிவர்ஸிட்டி ரேங்க் வாங்கலாம். மன்மதனைப் போல அழகாயிருக்கலாம். அழகான 'எஸ்கேப்பிஸ்ட்'டுகளைவிடக் குரூரமாகத் தோன்றும் தைரியவான்கள் எவ்வளவோ மேல். வீராசாமி அழகனில்லை, பணக்காரனில்லை. மாநிலத்திலேயே பின்தங்கிய பகுதியில், பின்தங்கிய வகுப்பில், வறண்ட பிரதேசத்தில் பிறந்தவன்; பிரைட்டான மாணவன்கூட இல்லை. மந்தமான சராசரி மாணவன். ஆனுல் ஆண்மையாளன்.

தவறு செய்கிறவன் எத்தனை வலிமையானவனுக இருந்தாலும் அவனை எதிர்த்துக் கையை ஓங்கி முஷ்டியை மடக்கிக்கொண்டு எழுகிறவன். நாளைய இந்தியாவுக்கு இப்படிப்பட்ட ஆண்மையாளர்கள்தான் தேவை. ஆணின்

தோற்றம் மட்டுமே ஆண்மையாகிவிடாது. ஆணின் இதய முள்ளவன்தான் ஆண்மையாளன். 'ரிஸ்க்' எடுத்துக் கொள்ளத் துணியாதவன் எப்படிப்பட்ட கொம்பனாயிருந்தாலும் இரண்டாம்பட்சமானவனே. அதுவும் பிறருடைய நலனைக் கருதி ரிஸ்க் எடுத்துக் கொள்கிறவனே ஆண் பிள்ளை' என்று எண்ணினாள் சுலட்சணா.

வீராசாமியின் வெட்டுண்டு வீழ்ந்த வலது கையில் ஐம்பது பைசா விலை கூடப் பெறாத ஒரு செப்பு மோதிரம் இருந்தது. அதில் சின்னஞ்சிறு பாரதியாரின் உருவத்தைச் செதுக்கியிருந்தார்கள். ஆஸ்பத்திரியில் வெட்டுண்ட பகுதிகளை இணைக்க முடியாதென்று முடிவானதும் அந்த ஆபரேஷன் தியேட்டரின் நர்ஸ் ஒருத்தி அந்த மோதிரத்தை மட்டும் கழற்றி உடனிருந்த சுலட்சணாவிடம் கொடுத்தாள். சொன்னாள்:

"நினைவு வந்து தேறி எழுந்தும் இந்த மோதிரத்தை அவரிடம் சேர்த்து விடுங்கள்..."

"கொடுப்பது சரி. ஆனால் இனிமேல் அவர் இதை எங்கே அணிவது சிஸ்டர்?"—கண்ணீர் மல்க கேட்டாள் சுலட்சணா. நர்ஸுக்கும் கண் கலங்கி விட்டது. போலீஸார் கைது செய்திருக்கும் பேட்டை ரவுடியை அவர்களும் சட்டமும் தண்டிக்கலாம். சில ஆண்டுகளுக்கு சிறையில் வைக்கலாம். ஆனால் அதனால் எல்லாம் வீராசாமிக்குப் போன கை வந்துவிடப் போவதில்லை.

மூன்றுநாள் கழித்து முதுகுளத்தூரிலிருந்து அவனது பெற்றோர் வந்து கதறிய கதறலைப் பார்த்தபோது சுலட்சணா இரத்தக் கண்ணீர் வடித்தாள். 'இவன் படித்து வந்து ஆளாகிக் குடும்பத்தைக் கரையேற்றப்போகிறான்'— என்று கனவு கண்டுகொண்டிருந்த இந்த ஏழைகளின் கதி இனி என்ன? கையில்லாதவன் படித்த பின்என்ன செய்ய முடியும்?"—என்று எண்ணிப்பார்த்தபோது துயரம் நெஞ்சைக் கப்பியது சுலட்சணாவுக்கு.

அந்த ரவுடியோடு சண்டை போடப்போன தனக்கு ஆதரவாகப் பரிந்துகொண்டு வரப்போய்த்தானே வீராசாமிக்கு இந்தக் கதி நேர்ந்தது? என்றெண்ணி எண்ணி வேதனையில் தவித்தாள் அவள். மாணவர்களுடைய ஒற்றுமைக்குப் பயந்து பல்கலைக்கழக நிர்வாகம் வீராசாமியைத் தொடர்ந்து உடல் ஊனமுற்ற மாணவனுகக் கல்வி பயில அநுமதிக்கும்படி நேர்ந்தது.

அங்கே துணைவேந்தர் இப்படி விஷயங்களில் கருணை காட்டி வழக்கமே இல்லை. டூகை இருக்கும் 'கையாடல்' வல்லான் பிள்ளையும் பெரிய குடும்பத்துப் பிள்ளைகள், பணக்கார மாணவர்களை விரும்பியே காலந்தள்ளியவர். விவசாயப் பட்டப்படிப்பில் தியரி தவிர வயலில் இறங்கி வேலை செய்யும் பிராக்டிகல் ஒர்க், ஃபீல்டு ஒர்க் எல்லாம் நிறைய இருப்பதால் ஆஸ்பத்திரிலிருந்து 'டிஸ்சார்ஜ்' ஆகி வந்ததும் வீராசாமிக்கு டி. சி. கொடுத்து அனுப்பிவிடுவது என்று முடிவு செய்து வைத்திருந்தார்கள்.

'இன்னும் ஒரே ஒரு வருஷப்படிப்புத்தான் மிச்சமிருந்தது. நடுவே இப்படி ஒரு விபத்து நேர்ந்ததற்காக அவன் படிப்பைத் தொடர விடாமல் செய்வது மனிதாபிமானம் ஆகாது! விதி விலக்கு அளிக்க வேண்டும்'— என்று மாணவர் கவுன்ஸில், உடல் ஊனமுற்ருேர் சங்கம் எல்லாம் வற்புறுத்தியதன் காரணமாக வி. சி. வழிக்கு வந்தார்.

வீராசாமி அதே பல்கலைக்கழகத்தில் படிப்பைத் தொடர்ந்தான். ஒரு மாதத்திற்குப் பின் ஒருநாள் தற்செயலாக ஒரு மாலை வேளையில் பல்கலைக் கழகப் பூங்காவில் அவனைச் சந்திக்க நேர்ந்தபோது பலவிஷயங்களைப் பேசிக் கொண்டிருந்து விட்டு முடிவில் விடைபெறும்போது, "பை தி வே...உங்க மோதிரம் ஒண்ணு எங்கிட்ட இருக்கு வீராசாமி! ஆஸ்பத்திரியிலே நீங்க அனெஸ்தீஸியாவிலே இருந்தப்போ நர்ஸ் கொடுத்தாங்க"—என்று சுலட்சணு அந்தச் செம்பு மோதிரத்தை எடுத்து அவனிடம் நீட்டினுள்.

அவன் அதை வாங்கிக் கொள்ளவில்லை. அவனுக்குக் கண்கள் கலங்கின.

"இடது கையிலே மோதிரம் போடப்படாதுன்னு எங்கப்பா சொல்வாரு..."

"......போட்டுக்காட்டி என்ன? சும்மா ஒரு ஞாபகமா வச்சுக்குங்களேன்."

"இந்த மோதிரமே ஒரு ஞாபகம்தான்! எட்டயாபுரம் பாரதி நூற்றாண்டு விழாப் பேச்சுப் போட்டிக்குப் போனப்ப அங்கே வாங்கினது இது! எனக்குப் பாரதியார் மேலே கொள்ளைப் பிரியம்."

"எனக்கும் கூடத்தான்..."

"அப்போ நான் ஒண்ணு சொன்னா தப்பா நெனைச்சுக்காம ஏத்துப்பீங்களா மிஸ் சுலட்சணா?"

"என்ன?...சொல்லுங்க வீராசாமி!"

"எனக்குத் தான் வலது கையே போயிடிச்சு. மோதிரம் போட விரலே இல்லே. நீங்க இதை என் அன்பளிப்பா உங்க வலது கையிலே போட்டுக்குங்க..."

—அவள் ஏதோ சொல்ல வாயைத் திறந்து—அப்புறம் இரண்டாவது எண்ணமாக அதைச் சொல்லவேண்டா மென்று எண்ணினாற்போல உதட்டைக் கடித்துக்கொண் டாள். அவன் கெஞ்சினான்.

"ப்ளீஸ்! மாட்டேன்னுடாதீங்க. இது என் அன்பு வேண்டுகோள்."

"ரொம்ப நாளைக்கு முன்னே இதே பூங்காவிலே இதே இடத்திலே இதுமாதிரி ஒரு நண்பன் ப்ரஸண்ட் பண்ணின வைரமோதிரத்தையே ஏலத்துக்கு விட்டு உடல் ஊன முற்றோர் நிதிக்குப் பணம் கொடுத்து உதவினேன்."

"இருக்கலாம்! ஆனால் இந்த அன்பளிப்பே உங்களுக்கு உடல் ஊனமுற்ற ஓர் இளைஞனிடமிருந்துதான் வருகிறது மிஸ் சுலட்சணு!"

"ஐயாம் சாரி! உங்க மனசைப் புண்படுத்திட்டேன் போல இருக்கு..."

"நோ...நெவர்...நீங்க இதை ஏத்துக்கணும், எனக்காக..."

"சரி..."

அவள் மௌனமாக அந்தச் செம்பு மோதிரத்தை தன் வலது கை விரலில் அணிந்து கொண்டாள். அது மோதிர விரலில் சேர்ந்தது.

"இதை நீங்க ஏலத்துக்கு விடமுடியாது... போகாது..."

"போனாலும் விடமாட்டேன்!"

"நன்றி...சுலட்சணு"

"நன்றி எல்லாம் நமக்குள் சொல்லிக்கொள்ளக் கூடாது."

"ஏன்?... நாம் ஒருவருக்கொருவர் விசுவாசமற்றவர்களா என்ன?"

"சில சமயங்களில் சில வார்த்தைகள் அந்நியமானவர்கள் ஒருவருக்கொருவர் உபசாரமாகச் சொல்லிக் கொள்ள மட்டுமே ஏற்பட்டுப் பயன்படுகின்றன. அவற்றை அந்நியமற்றவர்களும் பயன்படுத்தக் கூடாது"—

"வெட்டினதுதான் வெட்டினான். இடது கையில் பட்டிருக்கலாம். பாவி...வலது கையில் வெட்டி என் வாழ்வை நாசமாக்கி விட்டான்."

"நீங்கள் பாய்ந்து அவனைத் தடுத்தபோது வலது கையால் அந்த ரவுடியைத் தடுத்ததால் வந்த வினை இது.

மனிதர்கள் நாகரிகம் அடைந்துவிட்டதாகச் சொல்கிறார்கள். இன்னும் மரம் வெட்டுகிற அரிவாளால் மனிதர்களை வெட்டுவதையும், கல்லால் அடிப்பதையும், துச்சாதனன் சபையில் செய்ததைச் சந்தையிலும் கடைத்தெருவிலும் பெண்களுக்குச் செய்வதையும் யாரும் குறைத்துக் கொள்ளவில்லை. சமாதானம், சகவாழ்வு, மனிதனுக்கு மனிதன் விட்டுக் கொடுப்பது எல்லாவற்றையும் பற்றிப் பேசிக் கொண்டே பிலிஸ்டைன்களாக - காட்டுமிராண்டிகளாக - வாழ்கிறோம் நாம்.''

''சற்றுமுன் இந்த மோதிரத்தை என் கையால் உங்களிடம் எடுத்துக் கொடுக்கமுடியாதபோதுதான் எனக்கு வலது கை போய்விட்டது என்பதே நினைவு வந்தது சுலட்சணா!''

''எனக்காகத்தான் வலது கையை இழந்தீர்கள் என்பதால் நானே உங்களது வலது கையாக விளங்குவேன். கவலை வேண்டாம்.''—என்று தோல் சும்பிப்போய் மூளியாயிருந்த அவனது வலது கையைக் குனிந்து கண்களில் ஒற்றிக் கொண்டாள் சுலட்சணா. வீராசாமி முழுக்கைச் சட்டை அணிந்திருந்ததால் வலது பக்கக் கைப்பகுதியை மறைத்துக் கொண்டு சட்டையின் கீழ்ப்பகுதி தனியே தொங்கியது.

சுலட்சணா தனக்குள் நினைத்தாள். 'புற அழகு என்று வந்து விட்டால் இவனுக்கும் கனகராஜுக்கும் ஆயிரம் வித்தியாசங்கள். அவன் நல்ல ரோஜாப்பூ நிறம். இவன் கருப்பு. அவன் சிரித்த முகமாயிருப்பான். இவன் முகத்தில் ஒருவிதமான கடுமை இருக்கிறது. படிப்பில் அவன் புலி. இவன் படிக்கிற படிப்பே வேறு. அக்ரிகல்ச்சர் மாணவனின் படிப்பில் பொருளாதார மாணவனின் திறன்களையோ, நுணுக்கங்களையோ எதிர்பார்க்க முடியாது.''

ஆயிரம் வேறுபாடுகள் இருந்தாலும் வீராசாமியின் ஒரு

ப்ளஸ் பாயிண்டும் கனகராஜின் மைனஸ் பாயிண்டும் வெட்ட வெளிச்சமாகத் தெரிந்து பளீரென்று கண்களை உறுத்தின.

வீராசாமி ரோஷ உணர்ச்சி நிறைந்த ஆண்பிள்ளை. கனகராஜ் ரோஷ உணர்ச்சி கூட மழுங்கிப்போகிற அளவு எல்லையற்ற நாகரிக மெருகு ஏறித்தேய்ந்திருந்தான். பிரச்னைகளைக் கண்டு எதிர் கொள்வதற்குப் பதில் பயந்து விலகி ஓடுருன். பஜாரில் கலகம் மூண்டதும் அந்த இடத்தில் நிற்பதற்கே பயந்து ஓடிவிட்டவனுக்கும் - பாதை யோடு போய்விடாமல் தேடிவந்து பிரச்னையில் சிக்கிக் கொண்டு இரண்டு பெண்களுக்கு மரியாதை அளித்த வனுக்கும் என்ன வித்தியாசமோ அந்த வித்தியாசம்தான் அவர்களிடையேயும் இருந்தது. வீராசாமி முகம் மலராமல், சிரிக்காமல், மௌனமாக அவனை வென்று முடித்திருந்தான்.

# 8

மஞ்சள் பூசிக்கொள்ள மஞ்சளும் அணிந்துகொள்ள வளையல் களும் அனுப்பித் தன்னைக் கேவலப்படுத்திய நாளில் இருந்து கனகராஜ் அவளைச் சந்திக்க முயலவில்லை. விரக்தியும், வேதனையும் அவனை வாட்டின. ஆள் அரை ஆளாக வாட்டம் அடைந்திருந்தான். முகம் பேயறைந்த மாதிரிப் போயிருந் தது. சுலட்சணுவோ வீராசாமியை உற்சாகமாக வைத்துக் கொள்ளக் கருதி மாலை வேளைகளில் அவனோடு உலாவச் செல்வது, அவனைத் திரைப்படங்களுக்கு அழைத்துச் செல்வது, அவனோடு கடைத் தெருவுக்குப் போவது என்று முனைந்திருந்தாள். இந்த மாறுதலை அனைவருமே பார்த் தார்கள். புரிந்து கொண்டார்கள்.

கனகராஜைத் தவிர வேறு இரண்டு மூன்று சேலத்து மாணவர்களும் அங்கே உதயா பல்கலைக்கழகத்தில் படித்து வந்தார்கள்.

எல்லாருமே அவ்வப்போது விடுமுறைகளுக்குச் சேர்ந்து ஊருக்குப் போவது, திரும்புவது என்ற முறையில் பழகியிருந்தார்கள். அவர்களில் சுகவனம் என்று ஒரு மருத்துவ மேல்படிப்பான எம். டி. படிக்கும் மாணவன் கனகராஜுக்குத் தூரத்து உறவினனும்கூட. அவன் அடிக்கடி கனகராஜைச் சந்திக்க வருவது உண்டு.

கனகராஜ், சுகவனம் இருவருமே பல்கலைக்கழக டீன் டல்பிள்ளைக்கு உறவினர்கள். டல்பிள்ளைக்கும் சொந்த ஊர் சேலம்தான். டல்பிள்ளையைக் கலந்து பேசித்தான்—கனகராஜின் தந்தை அவனை இந்த ரெசிடென்ஷியல் பல்கலைக் கழகத்தில் சேர்ந்திருந்தார். அவ்வப்போது இவர்களைத் தம் அறைக்கோ, காம்பஸுக்குள்ளேயே இருந்த தமது வீட்டுக்கோ அழைத்துப் பேசுவார் டல்பிள்ளை. டீனுக்கும், துணைவேந்தருக்கும் பயந்துதான் கனகராஜ் பல்கலைக்கழக எல்லையில் எதிலுமே கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நின்றான். இயற்கையாகவே அவன் சுபாவமும் பயந்து கூசி ஒதுங்குவதாகவே இருந்தது. தொட்டாற்சுருங்கியாகவே வளர்ந்திருந்தான் அவன்.

சுலட்சணாவுக்கும் கனகராஜுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்ட பின் ஒரு மாலை வேளையில் மருத்துவ மாணவர் விடுதியிலிருந்து சுகவனம் கனகராஜைப் பார்க்கத் தேடி வந்தான். கனகராஜ் இருந்த நிலையைப் பார்த்து அதிர்ச்சியடைந்தான். இருவருமாகப் பூங்காவுக்குப் புறப்பட்டனர். சுகவனம் பூங்கா என்று ஆரம்பித்ததுமே, "அங்கே வேண்டாம். வேறு எங்கேயாவது போகலாமே"—என்று தட்டிக் கழிக்கப் பார்த்தான் அவன். சுகவனம் அவனை விடவில்லை.

"சும்மா வாப்பா! போகலாம். ரூமிலேயே அடைந்து கிடந்தால் இப்படித்தான் போரடிக்கும். வெளியே இருந்து மற்றவர்கள் தேடி வந்து இங்கே உட்கார விரும்புகிற அளவு பிரமாதமான பொடானிகல் கார்டன்ஸை வைத்துக்கொண்டு

நாம் ஏன் வெளியே போகவேண்டும் என்கிருய்? இங்கேயே உட்கார்ந்து பேசலாம் வா''—என்று வற்புறுத்தி அவனைப் பல்கலைக்கழகப் பூங்காவுக்கு அழைத்து வந்து விட்டான்.

அங்கே பூங்காவுக்குள் நுழைந்த பிறகும் கனகராஜ் யாருக்கோ கூசி ஒதுங்கி ஒளிகிருற்போல் 'அந்த மூலையில் உட்காரலாம், இந்த மூலைதான் மறைவாக இருக்கும்'—என்று ஒதுங்கலான இடங்களாகத் தேடியது சுகவனத்துக்கு வியப்பை அளித்தது.

'சரி! அவன் போக்கிலேயே விட்டுப் பிடித்து விஷயத்தை வரவழைக்கலாம்'— என்று ஒரு சவுக்குப் பச்சை வேலியை ஒட்டினுற்போல மறைவில் உட்கார்ந்திருந்தார்கள்.

அந்த வேலியின் மறுபுறமும் யாரோ இருவர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பது சுகவனத்துக்குத் தெரிந்தது. யாரென்று தலையை நீட்டி எட்டிப் பார்ப்பது அநாகரிமாக இருக்கும் என்று விட்டு விட்டான். பித்துப் பிடித்ததுபோல் விரக்தியாகத் தென்பட்ட கனகராஜிடம் சுகவனம்தான் முதலில் பேச்சைத் தொடங்கினுன்!

"ஏண்டா என்னமோ மாதிரி ஆயிட்டே? உடம்பு சரியில்லாம இருந்தியா? ஒருவாரத்துக்கு முன்னுடி பார்க்கறப்பக் கூட நல்லா இருந்தியே?''

"என்னமோ டல்லடிக்குது! மெடிகல் லீவு அப்ளை பண்ணி எழுதிக் குடுத்திட்டுப் பேசாம ஊருக்குப் போயிடலாமான்னு பார்க்கிறேன்.''

"படிப்பு என்ன ஆறது? உங்கப்பா கனவு கண்டுக்கிட்டிருக்கிற யூனிவர்சிடி ஃபர்ஸ்ட் ரேங்க் என்னஆகிறது?''

"இப்போ ஒண்ணுலியுமே இண்ட்டரஸ்ட் இல்லேப்பா...''

"ஏன், என்ன ஆச்சு? வாட் இஸ் ராங் வித் யூ கனகராஜ்?''

"மனசு சரியில்லே...எதிலியுமே நாட்டம் போகலே. இப்பிடியே இருந்தா ஒரு நா அறையிலேயே 'சூயிஸைட்' பண்ணிக் கிட்டுக் கிடந்தாலும் கிடப்பேன்..."

"........."

—இதைக் கேட்டு ஒரு நிமிஷம் தயங்கி யோசித்தபின் சிக்கலின் ஏதோ ஒரு நுனி தனக்குள் அகப்பட்டுவிட்டவனைப் போலச் சுகவனம் மெல்ல வினவினான்.

"நீயும் சுலட்சணாவும் இப்பல்லாம் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கிறதே இல்லையா கனகராஜ்?"

"இல்லை! அவளுக்கு என்னைப் பிடிக்காமப் போச்சோ என்னமோ...?."

"இஃப் ஐ யாம் நாட் இன்க்யுஸிட்டிவ்...ஏ ஸ்டெரயிட் க்வஸ்ச்சின்..."

"என்ன? கேளேன்..."

"சுலட்சுணாவும் நீயும் காதலிக்கிறீங்களா?"

"நான் காதலிக்கிறேன். அவள் என்னைக் காதலிக் கிறாளா இல்லையா என்பது சந்தேகமாயிருந்தது. இப்போது தீர்மானமாகத் தெரிந்து போயிற்று—"

"என்னவென்று...?"

"இல்லை என்று தெரிந்துவிட்டது..."

"ஏன்? உங்களுக்குள்ளே ஏதாவது மனஸ்தாபமா? எங் கிட்டச் சொல்லலாம்னாச் சொல்லு! என்னாலே சரிப்படுத்தி ராசி பண்ணி வைக்க முடியுமானாப் பண்றேன். பாவம்! உன்னைப் பார்க்கிறதுக்கே இப்போ பரிதாபமா இருக்கு கனகராஜ்!"

"இல்லேடா சுகவனம்! அது ரொம்பக் கஷ்டமான காரியம். அவ ஒரு சீரியஸ் டைப். இலட்சியம், பொதுத் தொண்டு, சமூகசேவை என்று தேடித் தேடி ரிஸ்க் எடுத்துக் கொண்டு அலைகிற ஒருத்தியால் எப்படி இன்னொருத்தரைக் காதலிக்க முடியும்? காதலிக்கப் போதுமான மென்மையான உள்ளமே அவளுக்கு இல்லேங்கிறது என் அபிப்ராயம்..."

"எதிலிருந்து நீ இந்த முடிவுக்கு வந்தாய்? என்ன நடந்தது உங்களுக்குள்?"

அவள் கோபமாகப் பூசிக்கொள்ள மஞ்சளும் புனைந்து கொள்ள வளையல்களும் அனுப்பித் தன்னை அவமானப் படுத்தி விட்டதை இன்னொருத்தரிடம் வெளியிடவே கனகராஜுக்குப் பிடிக்கவில்லை. கூச்சமாகவும் வெட்க மாகவும் அவமானமாகவும் இருந்தது.

வைர மோதிர விஷயத்தை மட்டும் சுகவனத்திடம் விவரித்தான். அந்த மோதிரத்தை உடல் ஊனமுற்றோர் நல்வாழ்வு நிதிக்காக ஏலம் விட்டுப் பணம் வசூலித்துக் கொடுத்ததையும் சொன்னான். சோஷல் செர்வீஸ் முகாமுக்கும் வீராசாமி சிகிச்சை நிதிக்கும் தான் பணம் நன்கொடை கொடுத்து அவள் அவற்றை மறுத்துத் திருப்பிக் கொடுத்துவிட்டதையும் சொன்னான்.

இவற்றைக் கேட்டுவிட்டு யோசிப்பது போல் மௌனமாக அமர்ந்திருந்தான் சுகவனம். பின்பு அவனிடம் மெல்லச் சொல்லத் தொடங்கினான்:

"இவ வேற 'மெட்ட'ல்லே உருவாயிருக்கிறவ. புகழ்ச்சி, அழகு, பணம், இதுலெ எல்லாம் சொக்கிப் போய் மயங்கிக் காதலிக்கிற டைப் இல்லே இவ. துணிச்சல், தைரியம், பிறருக்காக உதவ விரைகிற குணம், சமூக உணர்ச்சி, சிவிக் கரேஜ், மைனூட் சிவிக் ஸென்ஸ், டயனமிஸம், சிவிக் ஹானஸ்டி, ஹ்யூமனிஸம், ப்ராக்மேடிஸம், சோஷல் கமிட்மெண்ட், சோஷல் மைண்டெட்னெஸ், சோஷல்

கான்ஷியஸ்னெஸ் இதெல்லாம் உள்ள ஒருத்தன்தான் இவளுக்குப் பெரிதாகத் தோன்றுவான். அப்படிப்பட்ட ஒருத்தனைத்தான் இவளால் விரும்ப முடியும். நீயோ ஒரு நிச்சயமான ஃபண்டமெண்டலிஸ்ட்! இவள் உன்னை விரும்ப முடியாது''—

''நீ சொல்றதெல்லாம் சைக்காலஜி.''

''ஆமாம்! ஆனால் சுலட்சணாவைப் பொறுத்து இதுதான் நீ தெரிந்து கொள்ள வேண்டிய உண்மை. நடைமுறையிலிருந்துதான் சைக்காலஜி பிறந்தது. இப்போ நான் சைக்காலஜியிலிருந்து நடைமுறைக்கு வந்து அதைச் சுலட்சணாவோடு ஒப்பிட்டு உனக்கு ரிசல்ட் சொல்லுகிறேன்! அவ்வளவுதான்.''

''எது எப்படியோ? ஓர் ஆட்சேபணையும் சொல்லாமல் அவள் என்னோடு மிகவும் நெருங்கிப் பழகினாள் என்பது மட்டும் உண்மை''—

''இது நவீன யுகம்! நம்மிடம் கலகலப்பாகப் பழகுகிற பெண்கள் எல்லாம் நம்மைக் காதலிப்பதாக நாம் நினைப்பது தான் பேதைமை. அது நீடித்த உண்மையில்லை. தற்காலிகமான பிரமைதான்''—

உடனே இதற்குக் கனகராஜ் பதில் எதுவும் சொல்லவில்லை. மௌனமாகத் தலைகுனிந்து புல் தரையைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தான். ஏறக்குறைய நண்பன் தனக்கு வந்திருக்கும் நோயைச் சரியாக 'டயகனாஸ்' செய்து விட்டான் என்பது அவனுக்கே ஓரளவு புரியத்தான் செய்தது. ஆனாலும் அதை வெளிப்படையாக ஒப்புக் கொள்ளத்தான் விருப்பமில்லை. கனகராஜின் தளர்ச்சியும், விரக்தியும் சுகவனத்துக்குப் புரிந்தன. அவன் கனகராஜுக்கு ஆறுதல் கூறித் தேற்றினான்.

''டேக் இட் ஈஸி மை பாய்! இவ இல்லாட்டா இன்னொருத்தி''—

"அப்பிடி விட்டுட முடியலேப்பா! இத்தினி நாள் நெருங்கிப் பழகிட்டு இப்பத்திடீர்னு மோசம் பண்ணிட்டா..."

"நான் அப்பிடி நினைக்கலே. இத்தனை நாள் உன்னோட கணிப்புத்தான் தவறானது. இத்தனை நாளும் அவ உன்னைக் காதலிக்கிறதாக நீயே நினைக்கலேன்னு நீ சொன்னாலும் அப்பிடி உள்ளூற நினைச்சுக்கிட்டுத்தான் அவஸ்தைப் பட்டிருக்கிறே!"

இப்படி நண்பன் சொல்வது உண்மையாக இருந்தாலும் அவன் தன்னிடம் மிகவும் நிர்த்தாட்சண்யமாகப் பேசுவது போல் தோன்றியது கனகராஜுக்கு. நெடுநேரம் பேசியும் விவாதித்தும் சுகவனத்தினால் கனகராஜை முழுமையாக ஆறுதலடையச் செய்ய முடியவில்லை. அவன் விரக்தி யாகவே இருந்தான்.

நெடுநேரத்திற்குப்பின் கனகராஜும் அவனும் புறப் படலாம் என் எழுந்திருந்தபோது தற்செயலாகச் சவுக்கு வேலியின் மறுபுறம் அமர்ந்திருந்தவர்களும் கூட எழுந்திருந் தார்கள். அவர்களைப் பார்த்ததும் இவர்கள் இருவருக்கும் ஒரே அதிர்ச்சி.

அது வீராசாமியும், சுலட்சணுவும்தான். சுலட்சணுவும் இவர்களைப் பார்த்து விட்டாள். 'ஹலோ' என்று கூடச் சொன்னாள். ஆனால் கனகராஜுக்குத்தான் அவளிடம் பேச வாய் வரவில்லை. அதிர்ச்சியிலிருந்து மீளாமலே இருந்து விட்டான். விவசாயப் பட்டப்படிப்புப் படிக்கும் அழகில்லாத-கறுப்பு நிறமுள்ள இந்தப் பையனிடம் சுலட்சணுவுக்கு அப்படி என்னதான் கவர்ச்சி இருக்க முடியும் என்று குமுறிப் புழுங்கியது கனராஜின் உள்ளம்.

"வலதுகை விரல்கள் போய்க் கையே தெரியாமல் முழுக்கைச் சட்டை மட்டும் தொங்குகிற இந்தக் கருவாயன் மேல் அப்படி என்னதான் கவர்ச்சியோ இவளுக்கு?"

"யூ ஆர் டோட்டலி இன்கரெக்ட் கனகராஜ்! இட் இஸ் நாட் எ க்வஸ்ச்சின் ஆஃப் ப்யூட்டி அட்ராக்ஷன் ஆர் எனி சச் திங்...இட் இஸ் எ மேட்டர் ஆஃப் சிவிக்கரேஜ். ஹி ஹாஸ் ஆம்பிள் ஆஃப் தட் குவாலிட்டி."

பூங்காவிலிருந்து இவர்கள் வேறு திசையிலும் அவர்கள் வேறு திசையிலுமாகப் பிரிந்து போய் விட்டார்கள். கனகராஜை அவனுடைய விடுதி முகப்புவரை உடன் கொண்டுவந்து விட்டு ஆறுதலாக மேலும் சில வார்த்தைகள் சொல்லிவிட்டுத்தான் போனான் சுகவனம். கனகராஜ் தற்கொலை அது இது என்று பேசியிருந்ததால் எதற்கும் டீன் காதில் எச்சரிக்கையாக ஒரு வார்த்தை போட்டு வைக்க வேண்டுமென்று தோன்றியது சுகவனத்துக்கு. ஏனென்றால் சுகவனத்தின் உள்ளத்தில் வேறு பயம் இருந்தது. பைத்தியக்காரத்தனமாகக் கனகராஜ் ஏதாவது செய்து தொலைத்து விடக் கூடாதே என்பதுதான் அது.

டீனை அவர் வீட்டில் சந்தித்து ஜாடை மாடையாகக் கனகராஜ் பற்றித் தெரிவிக்க வேண்டியவற்றைத் தெரிவித்தான். டீனும் கனகராஜின் தந்தையும் நண்பர்கள்; உறவினர்கள் வேறு. டீன் விரும்பினால் கனகராஜின் தந்தையோடு ஃபோனிலேயே பேசி, 'உங்கள் பையன் ரொம்ப விரக்தியாயிருக்கிறான். அவன் மனநிலை சரியாயிருப்பதாகத் தெரியவில்லை. ஏதோ காதல் ஏமாற்றம் அது இது என்று மற்றப் பையன்கள் சொல்லுகிறார்கள். எதற்கும் ஒரு மாறுதலாக இருக்கட்டும். கொஞ்ச நாள் வேணுமானால் அவனை ஊருக்குத் திரும்ப அழைத்து உங்கள் பக்கத்திலேயே தங்க வைத்துக்கொண்டு பாருங்கள்"— என்று டீனே கனகராஜின் தந்தைக்கு அட்வைஸ் செய்ய விரும்பினாலும் செய்து கொள்ளட்டும் என்றுதான் டீன் டாக்டர் (கை)ஆடல் வல்லான் பிள்ளையைப் பார்த்துப் பேசியிருந்தான் சுகவனம். ஆனால் ஆடல் வல்லான் பிள்ளையின் ரியாக்ஷன் முற்றிலும் வேறு விதமாக இருந்தது.

# 9

"இவனுக்கு என்னப்பா குறை? மன்மதன் மாதிரி இருக்கான். படிப்பிலேயும் ஃபர்ஸ்ட் ரேங்க். இவனை விட்டு விட்டு யாரோ ஒரு கை நொண்டியாப்போன பயலுக்குப் பின்னாடி அந்தக் கழுதை சுத்தறான்னா அதுக்குப் போய் இவன் ஏன் உருகணும்? அவ குடுத்து வைக்கலே. அவ்வளவு தான்"—என்று சுகவனத்திடம் கூப்பாடு போட்டார் டீன்.

இதில் சுகவனம் அவரோடு இசையவில்லை. வெளிப் படையாகக் கருத்து வேறுபட்டான்.

"நீங்க எல்லோருமே தப்புக் கணக்குப் போடறீங்க சார்! ஒரு பெண்ணை ஆண் கவர்ந்து அவள் மனதில் இடம் பிடிக்கப் படிப்பு, முகவசீகரம், பணம் இதெல்லாமே மட்டும் போதாது சார். பொது இடத்திலே பொது விஷயத்திலே பலர் கொண்டாடும் வீரத்தை அவன் காட்டினால்தான் அவனால் அவள் அதிகம் கவரப்படுகிறாள்.

பேரழகனான இராமனே சீதையின் மனதில் இடம் பிடிக்கப் பலர் மெச்சும்படி ஒரு கனமான வில்லை எல்லார் முன்னிலையிலும் எடுத்து ஒடிக்க வேண்டியிருந்தது. முரட்டுக் காளை ஒன்றைப் பலர் முன்னிலையில் தனியாக ஓர் ஆண் மடக்கிப் பிடிக்கும் 'ஏறுதழுவுதல்' போன்ற திருமண நிபந்தனைகள் கூடப் பழையநாளில் இப்படித்தான் ஏற்பட்டி ருக்க வேண்டும் சார்! தன்னுடைய 'சிவிக் கரேஜி'னால் தான் ஓர் ஆண் ஒரு பெண்ணின் மனத்தில் இடம் பிடிக் கிறான் என்பது என்னுடைய அசைக்க முடியாத நம்பிக்கை. அந்த முதுகுளத்தூர்ப்பையன் அப்படி ஒரு 'சிவிக் கரேஜ்' மூலம்தான் சுலட்சணாவைக் கவர்ந்திருக்கிறான். காதலில் அந்தக் கவர்ச்சியைச் சாதாரணமானது என்று நீங்கள் சொல்லிவிட முடியாது சார்!"

"ஏதேது இந்த விஷயம்பற்றி என்னிடம் ஓரலாக ஒரு ரிஸர்ச் தீஸிஸே ஸப்மிட் செய்து விடுவாய் போலிருக்கிறதே...?"

சுகவனம் இதைக் கேட்டுச் சிரித்தான். டன் சேலத்திலிருக்கும் கனகராஜின் தந்தையோடு எஸ்.டி.டி. போட்டுப் பேசுவதற்காக உள்ளே சென்றார். சுகவனம் அவரிடம் விடை பெற்றுத் தன் அறைக்குத் திரும்பினான்.

சுலட்சணாவைப்போல ஓர் அழகிய பெண்ணை வீராசாமியோடு சேர்த்துப் பார்ப்பது அவனுக்கும்கூட என்னவோ போல்தான் இருந்தது. ஆனால் அது தவிர்க்க முடியாதது என்றும் கூடவே மனத்திற்குள் உறைத்தது. சற்றுமுன் பல்கலைக்கழகப் பூங்காவில் ஒருவரை ஒருவர் சந்திக்க நேர்ந்துவிட்ட எதிர்பாராத அதிர்ச்சியின்போதுகூட அவள் சகஜமாக 'ஹலோ' என்று கனகராஜைப் பார்த்து முகமலர்ந்து சமாளித்ததையும், கனகராஜ் அவளைப் பார்க்க விருப்பமின்றி முகத்தைத் திருப்பிக்கொண்டு விட்டதையும் சுகவனம் கவனித்திருந்தான்.

கனகராஜின் இந்தக் குணம் சுகவனத்துக்கே எரிச்சலூட்டியிருந்தது! 'பொதுவில் தனக்கு உவப்பில்லாத-சாதகமாகாத சூழ்நிலையை எதிர்கொள்ளவே பயந்து' கூசும் குணமுள்ள இவன் எதிர்காலத்தில் எப்படித் தன் தந்தை இன்று நிர்வகித்து வரும் தொழில் நிர்வாகங்களையும் நிறுவனங்களையும் தான் பொறுப்பு ஏற்று நடத்தப் போகிறான்? இந்தத் தொட்டால் சிணுங்கி மனப்பான்மை பொதுவாழ்க்கைக்கே பயன்படாத மைனஸ் பாயிண்ட் ஆயிற்றே? எதிர்பாராததை எதிர்கொள்ள நேர்ந்தாலே பயந்து கலவரப்பட்டு ஒதுங்கி ஓடிவிடும் இந்தக் குணத்தோடு இவன் எப்படி வாழ்வில் வெற்றிபெறப் போகிறான்?

'பெண்கள்—அதுவும் மிக மிக ஸ்மார்ட் ஆன இந்நாளைய இளம் பெண்கள் இப்படிப்பட்ட பயந்தாங்கொள்ளியை,

அவன் எவ்வளவுதான் நன்றாகப் படித்தாலும் எத்தனை அழகாயிருந்தாலும் என்னதான் ரேங்க் வாங்கினாலும் எப்படி விரும்புவார்கள்? பெண் விரும்பி ஆசைப்பட்டு வசியமாவதற்கு ஒருவன் நல்லவனாக மட்டும் இருந்தால் போதாது. வல்லவனாகவும் இருக்கவேண்டும்.

'கனகராஜ் நல்லவன். பயந்த சுபாவமுள்ளவன். தான் உண்டு தன் வேலை உண்டு என்று கச்சிதமாக இருப்பவன். ஊர் விவகாரங்களில் எல்லாம் தலையிட்டு வீணில் பெயரைக் கொடுத்துக்கொள்ளாதவன். இவை எல்லாம் பொதுவாகப் பார்த்தால் மிக மிக நல்ல குணங்களாயிருக்கலாம். ஆனால் சமூகப் பிரக்ஞை நிறைந்த சுலட்சணாவைப்போன்ற நவீன காலத்து இளம்பெண் ஒருத்தி ஒருவனை வெறும் 'அம்மாஞ்சித் தனமான'வனாக நினைப்பதற்கு இந்தக் குணங்களே போதுமானவை'—என்று யோசிக்கும் வேளையில் சுகவனத்துக்குத் தெளிவாகவே விளங்கியது.

கோழைகள் காதலிக்கவும் முடியாது. காதலிக்கப் படவும் முடியாது. கரையில் தயங்கி நிற்பவர்களை விடப் பயப்படாமல் நீரோட்டத்தில் குதித்து ஆழங்களில் அநாயாசமாக முக்குளித்து எதிர்நீச்சலடித்து மேலெழுபவர்களையே பெண்கள் முகமும் அகமும் மலரப் பார்க்கிறார்கள். நீரில் இறங்கப் பயந்து ஆழங்களில் மூழ்க அஞ்சி ஒதுங்கி நிற்பவர்களை அவர்கள் ஆண்களாகவே பொருட்படுத்துவது இல்லை.

கனகராஜைப் போல உடம்பில் அழுக்குப்படாமல் வாழ விரும்பும் 'சொகுசு இளைஞன் சுலட்சணாவைக் கவராமல் போனதில் எந்த வியப்புமில்லை. நெஞ்சில் உரமுமின்றி நேர்மைத் திறமுமின்றி நிற்கிற அப்பாவி இளைஞனை எந்தப் பெண்ணும் ஆசைப்படமாட்டாள்தான். சுயமரியாதையுள்ள ஆண்பிள்ளையைத்தான் தன்மானமுள்ள ஒவ்வொரு புதுமைப் பெண்ணும் காதலிக்கிறாள். காதலிப்பாள். காதலிக்கவும் முடியும்.

இன்றைய சமூக வாழ்வின் அடிப்படைத் தேவையான 'சமுதாயத் துணிச்சல்' என்கிற ஸிவிக் கரேஜ் இல்லாதவனை ஆண்கள், பெண்கள் யாருமே இலட்சியம் செய்வதில்லை என்று கனகராஜின் நிலையை வைத்துப் புரிந்துகொண்டான் சுகவனம்.

டீன் டெலிஃபோனில் பேசி ஒருவாறு நிலைமையைப் புரிய வைத்தபின் கனகராஜின் தந்தை, "அப்படியானால் நீங்கள் அவனைத் தனியே அனுப்ப வேண்டாம். நானே இங்கிருந்து டிரைவரைக் காரோடு அனுப்பிவைக்கிறேன். லீவு கொடுத்துப் பக்குவமாக எடுத்துச் சொல்லிச் சமாதானப் படுத்தி இங்கு அனுப்பி வைத்து விடுங்கள்"—என்று ஃபோனிலேயே பதில் சொன்னார்.

கேவலம் ஒரு பெண் விஷயம் தன் மகனை இத்தனை தூரம் பாதித்துவிட்டது என்பதை இரண்டாவது தடவை நினைக்கக்கூடக் கஷ்டமாயிருந்தது அவருக்கு. அதற்காகக் கவலையும் வருத்தமும் அடைந்தார் அந்தப் பணக்காரத் தந்தை.

# 10

இதற்கிடையில் கனகராஜின் தந்தையிடம் பேசி அவனைச் சேலத்துக்கு அனுப்ப ஏற்பாடு செய்தபின் டீன் தம்முடைய அதிகார வரம்பையும் மீறி இன்னொரு காரியம் செய்தார். இப்போது அவருக்கு மேலிருந்த துணை வேந்தரின் பதவிக் காலம் அடுத்த இரண்டாண்டுகளில் முடிகிறது. இரண்டு 'டேர்ம்' தொடர்ந்து இருந்து விட்டதால் இனி அவருக்கு அந்தப்பதவி மேலும் கிடைக்க முடியாது.

உதயா பல்கலைக்கழகத்தின் புரோ-சான்ஸ்லருக்கு மிகவும் வேண்டியவர் கனகராஜியின் தந்தை. கனகராஜ்

விஷயத்தில் தான் கொஞ்சம் அக்கறைகாட்டி உரிமை எடுத்துக்கொண்டு பாடுபட்டால் அவனுடைய தந்தையை 'இம்ப்ரெஸ்' செய்யலாம்; அதன் மூலம் அடுத்த துணை வேந்தர் பதவிக்காகச் சிபாரிசு செய்யப்படும் பெயர்களில் தன்னுடைய பெயர் முதலாவதாயிருக்க வழி செய்து கொள்ள முடியும். இது அவருடைய நீண்டநாள் பேராசையாக இருந்தது.

டாக்டர் (கை)யாடல் வல்லான்பிள்ளையின் மூளை குறுக்கு வழியில் யோசனை செய்தது. கனகராஜை அனுப்பிய பின், பல்கலைக்கழக நேரமாயில்லாமல் அகாலமாயிருந்தும் ஒரு பியூனை அனுப்பி சுலட்சணாவை உடனே லேடீஸ் ஹாஸ்டலிலிருந்து அழைத்து வரச் செய்தார்.

ரெஸிடென்ஷியல் பல்கலைக் கழகமாயிருந்தாலும் ஒரே காம்பஸுக்குள் டீனின் வீடு, லேடீஸ் ஹாஸ்டல், பேராசிரியர்கள் குடியிருப்பு, துணைவேந்தர் மாளிகை எல்லாம் இருந்ததாலும், இப்படி மாணவர்களைப் பொறுப்பிலுள்ளவர்கள் அழைத்துப் பேசுவதும், பொறுப்பிலுள்ளவர்களை மாணவர்கள் வந்து காண்பதும் அவ்வப்போது வழக்கம் தான், அதில் புதுமை ஒன்றுமில்லை.

பல்கலைக்கழகத் துணைவேந்தர் முக்கால்வாசி நாள் வெளி நாட்டுப் பயணங்களிலேயே இருந்ததனால் 'ஃபாரின் வைஸ்சான்ஸலர்'—என்றே பேராகி இருந்தது. மாணவர்கள் சம்பந்தப்பட்டவற்றை விசாரிப்பதும், நடவடிக்கைகள் எடுப்பதும் அவ்வப்போது ஆக்டிங் துணைவேந்தராயிருக்கும் 'டல் பிள்ளை'யின் வேலைதான். அதனால் ஆக்டிங் வி. சி. கூப்பிட்டனுப்புவது பற்றி மாணவர்கள் பயமோ பதற்றமோ அடைவது கிடையாது. எப்போது கூப்பிட்டாலும் உடனே போய்ப் பார்ப்பார்கள்.

இன்று சுலட்சணாவும் அப்படித்தான் அவர் கூப்பிட்டனுப்பியதும் மறுக்காமல் உடனே அவரைப் பார்க்க வந்தாள்.

அவள் தேடி வந்தபோது அவர் உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருந்ததனால் அரை மணி நேரம் காத்திருக்க வேண்டியதாயிற்று. கிராமந்தரத்து உயர் நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் மாதிரி அந்த டீன் மாணவ மாணவிகளிடம் பழகுவார் என்பது ஊரறிந்த உண்மைதான். யாரும் அது பற்றி அதிகம் பொருட்படுத்துவது கூடக் கிடையாது. அகால நேரத்தில் இப்படிக் கூப்பிட்டனுப்பிக் காக்கப்போடுகிறாரே என்ற வருத்தம் உள்ளூர சுலட்சணாவுக்கு இருந்தாலும் பொறுமையாகக் காத்திருந்தாள்.

ஒரு பெரிய ஏப்பத்தோடும் கையில் சாப்பாட்டுக்குப் பின் உட்கொள்ள வேண்டிய ஒரு கொத்து வண்ண வண்ண மாத்திரைகளுடனும் டீன் அவள் அமர்ந்திருந்த வீட்டு முன்பக்க வாரந்தாவுக்கு வந்தார். எந்தப் பேச்சுக்கோ நேரடியாக வரத் தயங்கி வேறு எதை எதையோ ஆரம்பித்தார் அவர்.

"என்னம்மா, உன்னைப்பத்தி இந்தக் காம்பஸ்லே ஏதாவது ந்யூஸ் கேள்விப்படாத நாளே இராது போல் தோன்றுகிறதே?"

"சொல்லுங்க சார்! இப்ப என்ன புது ந்யூஸ் கேள்விப் பட்டீங்க?"

"ஒண்ணு ரெண்டா சொல்லி முடிக்கிறதுக்கு? அடுத்தடுத்துக் கேள்விப்பட்டுக்கிட்டேயிருக்கேன்."

"என்னன்னு சொல்ல மாட்டேங்கறீங்களே?"

"அக்ரிகல்ச்சுரல் ஸ்டூடண்ட்ஸைக் கூப்பிட்டு 'செல்' மீட்டிங் மாதிரி அடிக்கடி ஏதோ ஆர்கனைஸ் பண்றியாமே?"

"அப்புறம்...? மேலே..."

"ஏதோ காம்பஸ் முழுக்க வேலை நிறுத்தத்துக்குக் கூட ஏற்பாடு பண்றியாமே?"

"இருக்கலாம்! ஸ்டுடெண்ட்ஸோட நியாயமான உரிமைகள் என்னென்னவோ, அதை அடைய என்ன மார்க்கமிருக்கோ அத்தனை மார்க்கத்திலும் போராடத்தான் போராடுவோம்! அதைத் தடுக்க ஒரே வழி எங்கள் குறைகளை நீங்களாக முன்வந்து நிவர்த்தி பண்ணுவதுதான் சார்."

"என்னமோ இந்த யூனிவர்ஸிடி அமைதியா நடக்கிறது உனக்குப் பிடிக்கலே போலிருக்கு."

"புயலுக்கு முந்திய புழுக்கமே அமைதியாகிவிடாது. இது அமைதியில்லை. புழுக்கம்."

"நீயும், 'அக்ரி'யில் படிக்கும் யாரோ ஒரு நொண்டிப் பையனும் சேர்ந்துதான் எல்லா ஏற்பாடுகளையும் செய்கிறீர்களாம்!"

"சார்! மன்னிக்கணும். உங்க மாணவர்களைப்பற்றி நீங்க இன்னும் கொஞ்சம் நாகரிகமாகப் பேசலாம்னு நினைக்கிறேன். "ஐ. நா. வின் சர்வதேச உடல் ஊனமுற்றோர் ஆண்டு--உடல் ஊனமுற்றோரு நம் மனிதர்களே! அவர்களை மனிதர்களாய்— மரியாதையாய் நடத்துங்கள்" — என்ற சுவரொட்டி இங்கு நம் வி. சி. அறையின் முகப்பில் இன்னும் ஒட்டப்பட்டிருக்கிறது. அதை இங்கே யாருக்காக சார் ஒட்டியிருக்கிறீர்கள்? மாணவர்களுக்காக மட்டும்தானா? ஆசிரியர்களுக்கு அந்த மரியாதை அநாவசியமா? அந்தக் 'கல்ச்சர்' வேண்டாமா?"

"சாரி...அந்த 'அக்ரி' பையன் மேல் உனக்கு இத்தனை 'இண்ட்ரெஸ்ட்' இருக்கும்னு எனக்குத் தெரியாமப் போச்சே?"

"யாரோ வெறும் பையன் இல்லே சார்! அவருக்குன்னு ஒரு பெயர் இருக்கு. வீராசாமி. அவரைத் தொடர்ந்து படிக்க அனுமதிக்கும்படி நாங்கள் போராடி வெற்றி பெற்றது உங்களுக்கும் யூனிவர்ஸிடி நிர்வாகத்துக்கும் அதுக்குள்ள மறந்திருக்காதுன்னு நினைக்கிறேன்."

"மறக்கலேம்மா! அத்தனை சுலபமா மறந்துட முடியுமா அதை எல்லாம்? ஒரு எகனாமிக்ஸ் ஸ்டூடண்டுக்கு அக்ரிக்ராஜுவேட் மேலே பிடிப்பு வந்ததுதான் ஆச்சரியம்!"

"...சார்! ஏன் சுற்றி வளைக்கிறீங்க? இப்போ என்னைக் கூப்பிடனுப்பின விஷயம் என்னன்னு சொல்லுங்க...எனக்கு நேரமாகுது. லேடீஸ் ஹாஸ்டல் 'கேட்'டை க்ளோஸ் பண்றத்துக்குள்ள போகணும்."

"நீ முன்னே கனகராஜோடப் பழகிக்கிட்டிருந்தே இல்லே..."

"ஏன்...? இப்பவும் பழகறேன். நாங்க கிளாஸ்மேட்ஸ். ஒரே சப்ஜக்ட் படிக்கிறோம். பழகாம இருக்க முடியாது."

"இப்போ அத்தனை நெருக்கம் இல்லேன்னு கேள்வி. ஏதோ மனஸ்தாபம்னு சொன்னாங்களே..."

"யார் சொன்னாங்க?... எதுக்காகச் சொன்னாங்க?..."

"வேற யாரு? கனகராஜேதான் சொன்னான். உன்னோட பழக்கம் குறைஞ்சதிலேருந்து அவன் அரை ஆளாப் போயிட்டான். உனக்குத் தெரியும்னு நெனைக்கிறேன். கனகராஜ் ரொம்பப் பெரிய ஃபேமிலியில வந்தவன். அவன் ஃபாதர் பெரிய கோடீசுவரர். நம்ம புரோ சான்ஸலருக்கு ரொம்ப வேண்டியவர்."

"சார்! இதெல்லாம் இப்ப எதுக்கு வீணா? என்ன விஷயம்னு மட்டும் சொல்லுங்க..."

—அவளை எப்படிக் 'கன்வின்ஸ்' செய்து கனகராஜுக்காகப் பரிந்து பேசுவதென்று தெரியாமல் திணறினார் டீன். அவளோ அவ்வப்போது அவரது பேச்சை இடை வெட்டினாள். தவிர்த்தாள்.

"கனகராஜ் ரொம்பத் தங்கமான பையன். படிப்பில் முதல் நம்பர். தானுண்டு தன் காரியம் உண்டு என்று

இருப்பான். அநாவசியமா ஒரு வம்பு தும்புக்குப் போக மாட்டான். நீ அவனைப் புரிஞ்சுக்கணும் அம்மா!''

''அந்த மாதிரி ஆனா இந்தக்காலத்திலே ஒரு மியூஸியம் கட்டி அதிலே உட்காரவச்சு 'ஒருத்தரோட வம்பு தும்புக்கும் போகாதவர்'னு ஒரு போர்டு எழுதி மாட்டினுக்கூட ஒருத்தரும் சீந்த மாட்டாங்க. நம்முடைய காலத்து மனிதன் என்பவன் நம் காலத்து வம்பு தும்புகளில் ஈடுபட வேண்டும். நம் காலத்து நல்லதை ஆதரிக்க வேண்டும். தீமையை எதிர்த்துப் போராட வேண்டும். ஒதுங்கி நின்றுகொண்டிருப்பவன் உயிருள்ளவனே அல்ல! நீச்சல் தெரிந்தவர்கள் கரையிலே நிற்கக் கூடாது.''

''உங்களுக்குள்ளே என்ன சண்டை? மனஸ்தாபமா? விரோதமா? நான் தெரிஞ்சுக்கலாமா அதை?''

''நீங்க இப்போ யாரைப்பற்றி, எந்தச் சண்டையைப் பற்றிக் கேட்கிறீங்க சார்?''

''உனக்கும் கனகராஜுக்கும் ஆகாமற் போனதைப் பற்றித்தான் கேட்கிறேன்.''

''அதுதான் கொஞ்ச நேரத்துக்கு முன்னால் நீங்களே சொன்னீங்களே சார், அவர் ஒருத்தரோட வம்பு தும்புக்கும் போகாதவர்னு. அப்படிப்பட்ட பரம சாத்வீக புருஷரோட எனக்கென்ன சார் சண்டை வரப்போகிறது?''

''நீ என்னிடம் மறைக்கப் பார்க்கிறாய்?''

''எதை மறைக்கப் பார்க்கிறேனாம்...?''

''உனக்குக் கனகராஜ் மேல் என்ன கோபம் என்பதற்கான காரணத்தை...?''

''ஒருவரை நாம் கோபித்துக்கொள்ள அவர்மேல் நமக்கு ஏதாவது உரிமை இருக்கவேண்டுமே? அப்படி எந்த உரிமையும் கனகராஜ் மேல் எனக்கு இருந்ததில்லையே சார்—''

"இரண்டு பேரும் நெருங்கிப் பழகினீர்கள் என்பது காம்பஸ் முழுவதுமறிந்த உண்மை..."

"பழக்கங்கள் எல்லாம் சிநேகிதங்கள் ஆகிவிட முடியாது."

"சிநேகிதங்கள் எல்லாம் காதலாகி விட முடியாது என்று கூட இன்னொரு வாக்கியத்தையும் சேர்த்து இப்போது நம் இஷ்டப்படி சொல்லி விடலாம் அம்மா! ஏதோ இந்த யூனிவர்ஸிடி டீன் என்கிற முறையிலே ரெண்டு ஸ்டூடண்ட்ஸ் நட்பு முறிஞ்சு மனசு வேதனைப் படறதை நான் விரும்பல்லே. கனகராஜ் ரொம்ப நொந்து போயிருக்கான். எங்கிட்டச் சொல்லவே செய்தான்."

"நான் அப்படி எதற்கும் நொந்து போகலே சார்! எப்பவும் போல உற்சாகமாகத்தான் இருக்கேன்னு அவரைப் பார்த்தா நீங்க தாராளமாகச் சொல்லலாம் சார்."

"டீன் கிற முறையிலே இப்போ அதிகாரத் தோரணையோட நான் பேசலேம்மா! கொஞ்சம் அவுட் ஆஃப் தி வேயாக உங்கிட்டச் சொல்றேன்னு வச்சுக்க...கனகராஜோட ஃப்ரண்ட்ஷிப்பை நீ விட்டுடப் படாது"—

"உங்க யோசனையைவிட இதிலே என்னோட 'சாய்ஸ்' தான் இன்னும் முக்கியம். நீங்க சொன்னீங்களே 'கனகராஜ் வம்புதும்புக்குப் போகாதவன்'னு, அது நூற்றுக்கு நூறு நிஜம். நடுத்தெருவிலே என்னை மாதிரி ஒரு பெண்ணை நாலுபேர் முரடர்கள் கையைப் புடிச்சு இழுத்தாக்கூட 'நமக்கேன் வம்பு?'ன்னு ஒதுங்கிப் போயிடற அளவுக்கு அத்தனை பெரிய சாது சார் அவர். அவ்வளவு பெரிய சாதுவை இந்தக் காலத்திலே எந்தப் பெண்ணுமே விரும்பமாட்டாள் சார்."

"நீ விரும்பினால் கனகராஜையே இப்போ இங்கே கூப்பிட்டனுப்பறேன். நேரேயே பரஸ்பரம் மனம்விட்டுப் பேசி நீங்க ஒருத்தருக்கொருத்தர் சமாதானப்படுத்திக்கலாம்."

"உங்களுக்கு அந்தச் சிரமம் எல்லாம் வேண்டாம் சார்! சற்றுமுன் அவரையும் அவர் நண்பர் சுகவனம் என்கிற மெடிக்கல் ஸ்டூடண்டையும் நானே பல்கலைக்கழகப் பூங்காவில் கூடப் பார்த்தேன். நான் ஹலோ சொல்லியும் கனகராஜ் என்கூடப் பேசவில்லை. கூச்சப்பட்டுக்கொண்டு ஒதுங்கிப் போய்விட்டார். என்னுடன் அக்ரி மாணவர் வீராசாமி இருந்ததுதான் காரணம் சார். மேலும் இதெல்லாம் எங்கள் சொந்த விவகாரம். ஒரு டீன் தலையிட்டு இதில் ஆகப் போவது எதுவுமில்லை சார்!"

"ஏமாற்றத்தில் கனகராஜுக்கு வாழ்க்கையே வெறுத்து விடுமோ என்று நான் பயப்படுகிறேன் அம்மா! அவன் ரொம்ப விரக்தியாயிருக்கிறான். ஒரு மாறுதலுக்காக நாளைக்குச் சேலம் போகிறான். நீ விரும்பினால் தடுத்து நிறுத்தலாம்."

"வேண்டாம்! தடுக்காதீர்கள். நான் அதை விரும்பவில்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்..."

"இந்த ஏமாற்றம் கனகராஜின் படிப்பு, எதிர்காலம், வாழ்வு எல்லாவற்றையுமே பாதிக்கப் போகிறது. அவனது குடும்பத்தில் அக்கறையுள்ளவன் என்ற முறையில்தான் நான் உன்னைக் கூப்பிட்டுப் பேசுகிறேன்."

"மன்னியுங்கள் சார்! கூச்சமும் பயமும் உள்ள ஒரு கோழைக்காக என்னிடம் மறுபரிசீலனை எதுவும் இல்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன். இதை நானே நாளைக் காலையில் மிஸ்டர் கனகராஜுக்கு ஒரு கடிதமாக எழுதியும் அனுப்பிவிடுகிறேன். அதில் நீங்கள் என்னைக் கூப்பிட்டுப் பேசியதைப்பற்றிச் சொல்ல மாட்டேன். அதேபோல் நீங்கள் ஒருவேளை அவரைக் கூப்பிட்டுப் பேசினாலும் என்னோடு பேசியது பற்றி அவரிடம் எதுவும் கூற வேண்டியதில்லை. மிஸ்டர் கனகராஜுக்காக நான் இரக்கப்படுகிறேன். இரக்கப்படுவது மட்டும் அவருக்குப்

போதாது. ஆனால் இரக்கத்தையும் அநுதாபத்தையும் தவிர நான் அவருக்குத் தர வேறு எதுவுமில்லை சார்!''

''உன் பதில் எனக்குப் பெரிய ஏமாற்றம்தான் அம்மா...''

''ஒரு டீன் என்ற முறையில் இது உங்களுக்கு ஓர் அநுபவம் மட்டும்தான். கனகராஜின் குடும்பத்துக்கு வேண்டியவர் என்ற முறையில் வேண்டுமானால் ஏமாற்றமா யிருக்கலாம். அதை நீங்கள் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும் சார்!''

—அவர் அவளுக்கு விடை கொடுக்கும்போது இரவு அதிக நேரமாகியிருந்தது. லேடீஸ் ஹாஸ்டல் கேட்டில் உள்ளே விடத் தகராறு செய்தால் தம்மைப் பார்க்க வந்த தாகச் சொல்லிக் கொள்ளும்படி அவளிடம் முகப்புவரை அவளை வழியனுப்ப வந்தபோது சொன்னார் அவர்.

அவள் டீன் குடியிருப்பிலிருந்து வெளியேறிச் சென்றாள். சுற்றி வளைத்து டீன் உரையாடலைத் தொடங்கிய விதமும் கடைசியிலே வேறு வழியின்றி நேரடியாகக் ''கனகராஜைக் கை விட்டு விடாதே! அவன் உடைந்து தூள் தூளாகி விடுவான்'' என்ற கோரிக்கையில் கொண்டு வந்து முடித்த விதமும் அவள் முற்றிலும் எதிர்பார்த்திராதவை. வேறு ஏதாவது அரட்டல் மிரட்டல் விவகாரத்திற்காகவே டீன் கூப்பிட்டனுப்பியிருப்பார் என்றுதான் கோபத்தோடு அவள் கிளம்பி வந்திருந்தாள். வந்தபின் கோபத்தை விடப் பரிதாபமே அவளுக்குள் அதிகமாகியிருந்தது.

கனகராஜின் தந்தை புரோ-சான்ஸலரின் நண்பர், கோடீசுவரர் என்பனபோல் டீன் மூலம் அப்போது தெரிந்து கொண்ட உண்மைகள் அவள் அபிப்ராயத்தில் எந்த மாறுதலை யும் உண்டாக்கவில்லை என்றாலும் டீன் எதற்காக மெனக்கெடு கிறார் என்பதை ஊகித்துக் கொள்ள முடிந்தது. டீனின் போக்கு அன்று மிகமிகச் சுபாவமாகவும் ஏறக்குறையக் கெஞ்சுவது போலவும் அமைந்திருந்தது. அறைக்குத்

திரும்பியதும் கனகராஜுக்கே ஒரு சுருக்கமான கடிதத்தை எழுதி மெஸ் பையன் மூலம் காலையில் கொடுத்தனுப்ப முடிவு செய்தாள் சுலட்சணா.

அந்தக் கடிதம் போன்றதொரு கோபமான அதிர்ச்சியைக் கனகராஜுக்குத் தர அவள் விரும்பவில்லை என்றாலும் மேலும் மேலும் அவன் யார் மூலமாவது தன்னிடம் சமரசப் பேச்சுக்கு முயலக்கூடாது என்று அதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்து விடவே அதை எழுதினாள்.

மாலையில் பூங்காவில் தான் மறுபுறம் வீராசாமியோடு அமர்ந்திருப்பது தெரியாமல் அவன் அந்தப் பக்கத்திலிருந்து கொண்டு சுகவனத்திடம் பேசிய பேச்சுக்களை எல்லாம் அவள் கேட்டிருந்தாள். அதனால் டீன் சொல்லிய எதிலும் அவள் சந்தேகப்படவே இல்லை. டீன் கூறிய பரிதாபகரமான விரக்தி நிலையில்தான் கனகராஜ் இருந்தான் என்பதை அவளே உணர்ந்திருந்தாள். ஆனாலும் அவனுக்கு அவள் எழுதிய கடிதத்தில் ஈரமோ ஈவு இரக்கமோ எதுவும் காண்பிக்கப்படவில்லை. தீர்மானமாக அவனுக்குப் புரியும்படி எல்லாம் எழுதிவிட்டாள்.

இரக்கத்துக்காகவோ, சிபாரிசுக்காகவோ ஒரு தொடை நடுங்கியை விரும்புவது என்பது அவளால் முடியாத காரியம். பணத்துக்காகவோ, பதவிகளுக்காகவோ, பாரம்பரியப் பெருமைக்காகவோ ஒருவரைக் காதலிப்பது என்பது அவளது கொள்கைக்கு ஒரு சிறிதும் ஒத்துவராத விஷயம். ஆனால் இவைகளை எல்லாம் விவரிக்காமல் சுருக்கமாகவே கனகராஜுக்கு எழுதியிருந்தாள் அவள்.

மறுநாள் காலையில் அவன் சேலம் புறப்படும் முன்பாக மெஸ் பையன் மூலம் தான் எழுதிய கடிதத்தைக் கனகராஜுக்குக் கொடுத்தனுப்புவதற்குத் தயாராக இரவே உறையில் போட்டு வைத்து விட்டுத்தான் படுத்தாள் சுலட்சணா.

நெடுநேரம் வரை அவளுக்கு உறக்கம் வரவில்லை. சுபாவத்தில் மிகவும் கோழையாகிய கனகராஜை இந்தக் கடிதம் என்ன பாடுபடுத்தும் என்று நினைத்தபோது அவளுக்கும் வருத்த மாகத்தான் இருந்தது. அவனால் ஏமாற்றத்தைத் தாங்கிக் கொள்ள முடியாதுதான்.

'டீன் சொல்லியது போல் இந்த ஏமாற்றத்தைத் தாங்காமல் கனகராஜ் தற்கொலை செய்து கொண்டால் என்ன செய்வது?' என்பதை எண்ணியபோது அவள் உடல் சிறு நடுக்கத்தால் அதிர்ந்து குலுங்கி ஓய்ந்தது.

'என் தற்கொலைக்குச் சுலட்சணாவே காரணம் என்று அசட்டுத் தனமாக எழுதி வைத்துவிட்டு இறந்து தொலைத் தால் அதில் நம் தலை அநாவசியமாக உருளுமே'—என்றுகூட நினைத்தாள்.

அடுத்த கணமே நினைப்பை வீராசாமியின் பக்கம் திருப்பினாள். வலது கையை இழந்து மூளியாகியும் தற் கொலையைப் பற்றியே எண்ணாமல் நம்பிக்கையோடு வாழ்க் காத்திருக்கும் அந்த ஏழைத் துணிச்சல்காரனை நினைத்துக் கொண்டபடி கனகராஜை நினைவிலிருந்து மெதுவாகவும், நிச்சயமாகவும் அகற்றி வெளியேற்றினாள்.

# 11

மூந்திய இரவு இது நடந்த பின் மறுநாள் காலை டீன் கனகராஜைக் கூப்பிட்டு அனுப்பினார். கனகராஜ் அவரை அதிகாலையில் அவரே கூப்பிட்டனுப்பியபடி வீட்டில் போய்ப் பார்த்தான்.

"உங்கப்பா கார் அனுப்பிவைக்கிறதாகப் போன் பண்ணி னாரு. ஊர்ல போய்க் கொஞ்ச நாள் ரெஸ்ட் எடுத்துக்கிட்டு அப்புறம் வா..."

"அட்டெண்டன்ஸ் போயிடுமே சார்!"

"பரவாயில்லே! சுகவனம் எல்லா விவரமும் வந்து சொன்னான். கொஞ்சநாள் நீ இங்கே தனியா ஹாஸ்டல்லே இருக்க வேண்டாம். உன் நன்மைக்குத்தான் சொல்றேன். ஒரு மாறுதலா இருக்கட்டும். ஊர்ப்பக்கம் போயிட்டு வா..."

"சரி சார்..."

"ஆறு ஊர்ல போயும் இதையே நினைச்சுக் கஷ்டப் படாதே. உனக்கென்ன குறை? நல்ல குடும்பம். பண வசதி-படிப்பு எல்லாம் இருக்கு. இவளை மறந்துடு. ரதியா ஆயிரம் பொண்கள் போட்டி போட்டுக்கிட்டு உனக்குக் கழுத்தை நீட்டுவாங்க. நல்ல அழகியாகவே கிடைப்பாள். கவலைப்படாதே. இவ வெறும் அன்னக்காவடி. யாரோ டிரேட் யூனியன் லீடரோட பொண்ணு. நீ இங்கே திரும்பி வரணும்னு மறுபடி இந்தச் சுலட்சணாவே மனசு மாறி உங்கிட்டப் பல்லை இளிச்சுக்கிட்டு வந்துநின்னுக்கூட, 'போடீ! உன்னை எவன் கண்டான்?'னு கேட்கிற திமிரோட வரணும்."

அவன் அவரது அந்த வார்த்தைகளுக்கு அஞ்சி மிரண்டு ஓர் ஒப்புக்காகக் கிளிப்பிள்ளை போலத் தலையை ஆட்டினான்.

"போன் போட்டுத் தரட்டுமா? உங்க அப்பாவோடப் பேசறியா?"

"வேண்டாம் சார்! நீங்க பேசினதே போறும். கார் வந்ததும் நான் ஊருக்குக் கிளம்பத் தயாராகணுமே...?"

"ஆமாம், நேத்து இராத்திரியே சுகவனம் வந்து சொன்னதும் உங்கப்பாவுக்கு ஃபோன் பண்ணியாச்சு. கார் இப்ப இன்னும் கொஞ்ச நேரத்திலே வந்துடும்."

கனகராஜ் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினான். அவன் விடுதிக்குத் திரும்பிப் பிரயாண ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தபோது லேடீஸ் ஹாஸ்டல் மெஸ் பையன் அவனைத் தேடிக் கொண்டு ஒரு கடிதத்தோடு வந்தான்.

உறையிலிருந்த எழுத்திலிருந்து, கடிதம் சுலட்சணாவிட மிருந்து என்று தெரிந்தது.

"கொஞ்சம் இருப்பா! நான் சொன்னப்புறம் நீ போக லாம்"—

பையன் அறைக்கு வெளியே போய்க் காத்திருந்தான். வேகமாக அடித்துக் கொண்டு பதறும் நெஞ்சுடன் கடிதத் தைப் பிரித்துப் படிக்கலானான் கனகராஜ். கடிதம் ரொம்ப ரொம்பச் சுருக்கமாக இருந்தது.

"அன்புள்ள கனகராஜ்! நேற்றுப் பல்கலைக்கழகப் பூங்காவில் சவுக்கு வேலிக்கு இப்பால் நானும் வீராசாமியும் உட்கார்ந்திருப்பது தெரியாமல் நீங்கள் உங்களுடைய ஊர்க் கார நண்பர், எம்.டி. படிக்கும் சுகவனத்திடம் பேசிக் கொண்டிருந்ததை முழுவதும் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் நான் ஒட்டுக்கேட்க நேர்ந்தது. 'நான் காதலிக் கிறேன். சுலட்சணாதான் காதலிக்கிறாளா இல்லையா என்று தெரியவில்லை' என்பதாக உங்கள் நண்பரிடம் நீங்கள் அழமாட்டாக் குறையாக முறையிட்டதை நானும் கேட்டேன். இன்னமும் இதற்குப் பதில் சொல்லாமலிருப்பது என் தரப்பில் நியாயமில்லை. இதோ என் பதில்:

சுலட்சணாவும் காதலித்தாள். காதலிக்கிறாள். காதலிப் பாள். ஆனால் அவள் ஒன்றும் வாயில் விரலை வைத்தால் கடிக்கத்தெரியாத பேதைப் பருவத்துப் பெண் குழந்தை இல்லை. அழகிய பொம்மைகளைக் காதலித்து அவற்றோடு விளையாடும் பருவம் கடந்துவிட்டது. தான் காதலிக்கிற

வனின் குணங்களைப் பற்றிய அக்கறையோடும் பிரக்ஞையுடனுமே இனி அவளால் காதலிக்க முடியும். உங்களிடம் அந்தக் குணங்கள் இல்லை. அறவே இல்லை.

நண்பரே! சுலட்சணா இன்னும் காதலிக்கிறாள். ஆண்மையை, சமூகப்ரக்ஞையை, எதிர் நீச்சலிட முடிகிற வீரத்தை, அவளால் இன்னும் காதலிக்க முடியும். இவைகளைக் குணமாகக் கொண்ட ஒரு வீரனை, அவன் அழகனாக இல்லாவிட்டாலும் அவளால் காதலிக்க முடியும். அவனுக்குக் கையோ காலோ இல்லாவிட்டாலும்கூட அவள் அவனைக் காதலிக்க முடியும். கையும், காலும் மூக்கும் முழியுமாக இருந்து ஆண்மையில்லாதவனாயிருந்தால் அவனை அவளால் சாதாரணமாக நேசிக்கக்கூட முடியாது.

'காதலிக்கப் போதுமான மென்மையான உள்ளமே எனக்கு இல்லை'—என்று நீங்கள் உங்களது நண்பரிடம் குறைப்பட்டுக்கொண்டிருந்ததை நானே என் செவிகளால் கேட்டேன். ஆம்! உண்மைதான்!

கோழையைக் கண்டு சகித்துக்கொள்கிற மென்மை என்னிடம் இல்லை. தீமையைக் கண்டு சகித்துக்கொள்கிற மென்மை என்னிடம் இல்லை. கோழையை-பயந்தாங் கொள்ளியை-அடிதடிக்குப் பயந்து தன் கூட வந்த பெண் பிள்ளையைத் தனியே விட்டுவிட்டு ஓடுகிற அற்பத்தனத்தைச் சகித்துக்கொள்கிற மென்மை என்னிடம் இல்லை. நிச்சயமாக இல்லை. இனிமேலும் அப்படி மென்மை என்னிடம் ஏற்படவே ஏற்படாது என்பதும் சர்வ நிச்சயம்.

என்னிடம் காதலிருக்கிறது. அதை 'சிவிக் கரேஜ்' உள்ள ஒருவருக்கு—அதாவது உங்களது நண்பரே உங்களிடம் கூறினது போல் 'சிவிக் ஹானஸ்டி' உள்ள ஒருத்தருக்கே சமர்ப்பிக்க நான் விரும்புகிறேன். விரும்புவேன்.

அன்று பஜாரில் நீங்கள் என்னைத் தனியே விட்டுவிட்டு ஓடி ஒளிந்த போது அதிர்ஷ்டவசமாக வேறொருவர் எனக்குக்

கிடைத்து விட்டார் என்பதையும் இந்தச் சமயத்தில் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். எனது காதலை அந்தத் தீரனுக்கு வழங்கிவிட்டேன். உங்களுக்கு என் அநுதாபங்கள். இதற்கு உங்களிடமிருந்து பதில் எதுவும் நான் எதிர்பார்க்கவில்லை. தயவு செய்து பதில் அனுப்ப வேண்டாம். அது தேவையும் இல்லை.

இப்படிக்கு,
உங்கள் சிநேகிதியாக இருந்த
சுலட்சணா."

"நீ போகலாம்ப்பா"—கனகராஜ் தளர்ந்த குரலில் அறைக்கு வெளியே காத்திருந்த பையனிடம் கூறினான். மெஸ் பையன் தலையைச் சொரிந்தான். கனகராஜ் மணி பர்ஸைத் திறந்து ஓர் இரண்டு ரூபாய் நோட்டை எடுத்து அவனிடம் நீட்டினான். பையன் அதை வாங்கிக்கொண்டு தாராளமாக ஒரு சலாம் வைத்துவிட்டுப் போய்ச் சேர்ந்தான்.

ஏற்கெனவே மறுபடி திரும்பி அங்கே வருகிற நோக்கோடு அரைகுறையாக ஒழித்திருந்த விடுதி அறையை இப்போது முழுமையாக ஒழிக்கத் தொடங்கினான் கனகராஜ். மறுபடி பதினைந்து நாட்களில் திரும்பி அங்கே வருகிற நோக்கம் இனி அவனுக்கு இல்லை.

"என்ன ரெடியாகிக்கிட்டிருக்கியா? கீழே கார் வந்து நிக்கிது"—என்று சொல்லிக்கொண்டே சுகவனம் வந்தான். சேலத்தில் அவனது வீட்டில் பெற்றோருக்கு ஒரு கடிதம் கொடுத்தனுப்ப வேண்டியிருந்தது. அதைக் கனகராஜ் மூலமே கொடுத்தனுப்பிவிட எண்ணிக் கடிதத்தை எழுதி எடுத்துக்கொண்டு வந்திருந்தான் சுகவனம்.

ஒன்றும் பேசாமல் சுகவனம் தந்த கடிதத்தை வாங்கிக் கொண்டான் கனகராஜ்.

"மறுபடி எப்போடா திரும்பி வரே...?"

"..........."

"உன்னைத்தாண்டா கேட்கிறேன்! மறுபடி எப்போ இங்கே திரும்புவே?"

"எனக்கே தெரியாது! வருவேனோ இல்லையோ?" கனகராஜின் குரல் நைந்து உடைந்திருந்தது. கண்களில் நீர் முட்டிக் கொண்டு தளும்பி நின்றது. இன்னும் கொஞ்சம் பேசினால்கூட அழுதுவிடுவான் போலிருந்தது. சுகவனம் ஆறுதலாக அவனருகே சென்று,

"அசடே! இதுக்காகவா இப்படி மனசு உடைஞ்சு போறே? இவள் இல்லாட்டா இன்னொரு விலட்சணாடா, சுலட்சணாவை விட்டா உலகத்திலே வேற அழகான பொம்பளையே இல்லையாடா?"

—அவனால் அப்படி நினைக்க முடியவில்லை. உள்ளுக்குள் ரொம்ப உறுத்தியது.

"டேக் இட் ஈஸி கனகராஜ்! சுலட்சணா இல்லாட்டா இன்னொரு விலட்சணா." மறுபடியும் சுகவனம் அருகே வந்து கனகராஜின் தோளைத் தட்டிக்கொடுத்துச் சொன்னான். நண்பனுக்கு விடைகொடுத்தான்.

கார் பல்கலைக்கழகக் காம்பஸில் வளைந்து வளைந்து சென்று வெளியே போகும் மெயின் ரோடை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது- அங்கங்கே 'ஸ்பீட் பிரேக்கர்கள்' இருந்ததால் நின்று நின்று போக வேண்டியிருந்தது.

உள் சாலையில் 'வசந்த மண்டபம்' என்று அவர்கள் செல்லமாக அழைக்கும் போஸ்ட் கிராஜுவேட்ஸ் நூல் நிலையத்தின் அருகில் கார் திரும்பியபோது அதன் படிகளில் வீராசாமியைக் கைதழுவியபடி சுலட்சணா மேலேறிப் போய்க்கொண்டிருந்தாள். வெட்டுண்ட வலது கைக்குப்

பதில் அவன் சட்டை பொய்யாய்த் தொங்குவதைக் காரி லிருந்தே பார்த்தான் கனகராஜ்.

'இவளைப்போல ஒரு பேரழகி இப்படிக் கூட நடந்து வருவதாயிருந்தால், கைகளை மட்டுமென்ன, கால்களைக் கூடத் துணிந்து இழக்கலாமே?'—என்று மனத்தில் தோன்றியது.

இன்று நினைப்பிலே தோன்றும் இந்தக் கழிவிரக்கமான, துணிவு அன்று பஜாரில் அந்தச் சம்பவத்தின்போது நிஜமாகவே தோன்றியிருந்தால் சுலட்சணாவே தன்னைக் கைவிட்டிருக்க மாட்டாள் என்றும் சேர்ந்தே தோன்றியது. எல்லாம் கழிவிரக்கமான, இப்போது பயன்படாத வெறும் நினைவு மட்டுமே. இனி இந்த நினைவுகளால் யாருக்கு என்ன பயன்?

கார் காம்பவுண்டை விட்டு வெளியேறி ஜி. எஸ். டி. நேஷனல் ஹைவேய்ஸுக்கு வந்தபோது பல்கலைக் கழகக் கட்டிடங்களும் மரக்கூட்டங்களும் அவை சார்ந்த காட்சிகளும் பார்வையிலிருந்து விலகி மறைந்தன. அவனுள் ஏதோ பாறையாக உறுத்தி அழுத்தியது. நெஞ்சில் ஒரே வலி. வேதனைக் கனம்.

கனகராஜ் சட்டைப் பையிலிருந்து கர்சீப்பை எடுத்து முகத்தை மூடிக்கொண்டு டிரைவருக்குத் தெரியாமல் மெல்ல மெல்ல மௌனமாக அழுதான். கர்சீப் நனைந்தது. கோழைகள் வேறென்ன செய்ய முடியும்? இப்படி அழத்தான் முடியும்! பாவம்!

# 12

கனகராஜ் சேலத்துக்கு வந்து சில மாதங்கள் கழிந்தன. நாட்கள் முடமாகி நொண்டி மெதுவாக நகர்ந்தன நடந்தன. அவன் மனநிலை தேறவேண்டும் என்று அவனுடைய தந்தை தம்மால் முடிந்த விதங்களில் எல்லாம் முயன்று செலவழித்து என்னென்னவோ உற்சாகப்படுத்திப் பார்த்தார். உதயா பல்கலைக் கழகத்திலிருந்து டாக்டர் சுகவனம் எழுதி

யிருந்த ஓர் இரகசியக் கடிதம் கனகராஜின் தந்தையை எச்சரித்திருந்தது. ஓரளவு பயமுறுத்தவும் செய்திருந்தது.

'எக்காரணம் கொண்டும் அவனைக் கவனிக்காமல் தனியே விட்டு விடாதீர்கள்! சுலட்சணா விஷயத்தில் அவன் கடுமையாக ஏமாந்து போயிருக்கிறான். என்னிடம் அவன் வாயாலேயே 'தற்கொலை அது இது' என்று இரண்டு மூன்று முறை விரக்தியாக உளறியிருக்கிறான். இங்கிருந்து புறப் படுகிற சமயத்தில் டீனிடம் அவன் பேசியதிலிருந்தும், என்னிடம் நடந்து கொண்டதிலிருந்தும் மிக மிகச் சோர்ந்து தளர்ந்த நிலையிலிருந்தான் அவன். இங்கிருந்தோ, வேறு எங்கிருந்தோ சேலம் முகவரிக்குக் கனகராஜ் பெயருக்கு எந்தத் தபால் வந்தாலும் நேரே அவனிடம் கொடுத்து விட வேண்டாம். நீங்கள் பார்த்து சென்ஸார் செய்து அவசிய மானால் மட்டும் கொடுக்கவும். ஏர்க்காடு, பெங்களூர், என்று கனகராஜை எங்கும் தனியாக அனுப்ப வேண்டாம்— மிக மிக ஜாக்கிரதை யாயிருக்கவும்! தனிமை அவனைத் தற்கொலைக்குத் தூண்டக் கூடும்.'

பல்கலைக் கழகத்திலிருந்து கனகராஜ் சேலத்திற்கு வந்து சேர்ந்த இரண்டு நாளைக்குள் அவன் தந்தை பெயருக்கு 'ஸ்டிரிக்ட்லி பிரைவேட் அண்ட் கான்ஃபிடென்ஷியல்'— என்ற குறிப்புடன் சுகவனத்திடம் இருந்து இந்தக் கடிதம் வந்து சேர்ந்திருந்தது. டீன் கூடத் தனியாக இதே எச்சரிக்கையைச் செய்து டெலிஃபோனில் கனகராஜின் தந்தையோடு பேசியிருந்தார். கடுமையாக எச்சரித்தும் இருந்தார்.

கனகராஜின் தந்தை தர்மராஜ் தமது பணத்திற்கும் செல்வாக்கிற்கும் புகழுக்கும் இது ஒரு சவால் என்று நினைத் தார். 'அப்படி இவனைப் பைத்தியமாக அடித்த பெண் யார் தான்' என்று பார்த்துவிட விரும்பினார் அவர். டீன் பிள்ளை யுடனும்' சுகவனத்துடனும் ஃபோனிலேயே தமது வியப்பைத் தெரிவித்தார்:

"பையனோட படிப்பு, மூளை எதிர்காலம் எல்லாத்தையுமே இப்போ இப்பிடிப் பாழாக்கிட்டாளேப்பா. அப்படி என்னப்பா ரம்பையா திலோத்தமையா? நம்ம பையனைப் போல ராஜாவாட்டம் ஒரு பையனைக் கசக்குதா அவளுக்கு? அவனுக்கென்ன குறை? அழகில்லையா? பணமில்லையா? படிப்பில்லையா?"

"எல்லாம் இருக்கலாம்! ஆனா அதெல்லாம் அந்த சுலட்சணாவுக்குப் போதுமானதா இல்லியே? அதை எல்லாம் அவ பொருட்படுத்தலியே?"

"அப்பிடி அவளென்ன பெரிய கொம்பனுக்குப் பிறந்தவளா? யாருப்பா அந்தப் பொண்ணு?"

"சுலட்சணா; மெட்ராஸ்லே சின்னச்சாமின்னு ஒரு பெரிய டிரேட் யூனியன் லீடரோட மகள்"—

"அவனைப் பத்திக் கேள்விப்பட்டிருக்கேன். அப்பிடி ஒண்ணும் காசு பணமுள்ள ஆள் இல்லியே அவன்? ரொம்ப முரண்டுக்காரன். இன்னும் தொழிலாளிகளோட தொழிலாளியாக் குடிசையிலியே தானே இருக்கான் அந்த ஆளு? அவனோட மகள்தானா இந்த முரண்டு பிடிச்ச பொண்ணு?"

"அவ அப்பனைப் போலவே மகளும் முரண்டு பிடிச்சவ. ஆனால் நல்ல அழகி. கொள்கையிலே பிடிவாதக்காரி—'

"கனகராஜ் தாயில்லாப் பிள்ளை. அவனுக்கு ஏதாவது ஆச்சுன்னா எனக்கு வாரிசே இல்லேங்கிறது உனக்குத் தெரியாததில்லே சுகவனம்! அவனோட நன்மைக்காக வாவது நான் அந்த பெண்ணை வசப்படுத்திச் சம்மதிக்க வச்சு இந்தக் குடும்பம்கிற வண்டியிலே கொண்டாந்து பூட்டியாகணும்ப்பா..."

"அதிலே எனக்கு நம்பிக்கையில்லே. நேரே மெட்ராஸ் போயி இவ அப்பன்காரன் கிட்ட வேணும்னுப் பேசிப் பாருங்க. இவ கிட்டப் பேசிப் பிரயோசனமில்லே. இவ உங்க பேச்சுக்கு இணங்கி வசப்படறது கஷ்டம்."

"சடார்னு அப்பிடிச் சொல்லி முடிச்சுடாதே சுகவனம். ஒவ்வொருத்தருக்கும் ஒரு விலை இருக்கும். அதைத் தெரிஞ்சுக்கிட்டா அந்த விலையைக் குடுத்து அவங்களை வாங்கிடலாம்—"

"சுலட்சணுவுக்கு வேண்டிய விலை ரொம்பப் பெரிசு. அது உங்க ஸன் கிட்ட இல்லேன்னு அவளே முடிவு பண்ணியாச்சு."

"அதென்னப்பா அப்பிடி அபூர்வமான விலை? நான் கொஞ்சம் தெரிஞ்சுக்கலாமா?"

"தெரிஞ்சுக்கலாம். ஆனு உங்களுக்குப் புரியறது சிரமம். கொஞ்சம் நுணுக்கமான விலை அது."

"உலகத்திலே உள்ள விலைதானே?"

"உள்ளதுதான்! ஆனுக் கனகராஜாலே மட்டுமே குடுக்க முடிஞ்ச விலை. துரதிஷ்டவசமா அவன்கிட்ட அது இல்லே. அவனுக்காக நீங்க தர முடியாதது அது..."

"என்னப்பா புதிர் போடறே?"

"புதிர் இல்லே. இது உண்மை. 'சிவிக் கரேஜ்'னு ஒரு இங்கிலீஷ் வார்த்தை இருக்கே...?"

"ஆமாம்! அதுக்கென்ன வந்தது இப்போ?"

"அதாவது சமூகத் துணிச்சல்—பொதுக்காரியங்களிலே தைரியம்..."

"சரிதான் மேலே சொல்லு."

"அது உள்ள ஓர் ஆம்பிளையைத்தான் எனக்குப் பிடிக்கும்கிரு அவ..."

"அப்போ எவனுவது விட்டேத்தியாத் தெருவிலே அலையிற காலிப்பயல்தான் கிடைப்பான் அவளுக்கு"—

"நீங்க கோபமாப் பேசறீங்க! பொறுமையா மெட்ருஸ்லே அவ அப்பாவைப் போய்ப் பார்த்துக் கலந்து பேசுங்களேன். அதுலே என்ன தப்பு?"

"யூனிவர்ஸிடியிலிருந்து சேலம் வந்த நாளிலேயிருந்து இங்கே இவன் என்னமோ பறிகுடுத்தவன் மாதிரியிருக்கானே சுகவனம்?"

"அதுவும் எனக்குப் பிடிக்கலே? விட்டுப் பிடடா. 'இந்த சுலட்சணு இல்லாட்டா இன்னொரு விலட்சணு'—என்று எவ்வளவோ அவன கிட்டச் சொல்லிப்பார்த்தாச்சு. இருந்தும் அவன் மனசைத் தேத்திக்கலே. இன்னும் அவளுக்காகத்தான் உருகருன்! அவளை நினைச்சுத் தான் உயிரைவிடருன்."

"சரி! இந்த மேட்டரை இனிமேல் எங்கிட்ட விட்டுடு! ஐ வில் டாக் டு ஹெர் ஃபாதர். இன்னிக்கே மெட்ராஸ் போறேன்"—என்று டெலிபோன் உரையாடலை முடித்தார் கனகராஜின் தந்தை தர்மராஜன். எப்படியும் ஒரு கை பார்த்துவிடுவதென்ற உறுதி வந்திருந்தது அவருக்கு.

அவர் உடனே சொன்னபடியே செய்தார். சென்னைக்குச் சென்ருர். தேடி அலைந்து சுலட்சணுவின் தந்தையைக் கண்டு பிடித்துச் சந்தித்தார். தன்னைத் தானே அறிமுகப் படுத்திக் கொண்டு எல்லா விவரமும் சொல்லி நிலைமையை விளக்கினூர். பொறுமையாகச் சகலத்தையும் கேட்டுக் கொண்ட சுலட்சணுவின் தந்தை தோழர் சின்னச்சாமி சுருக்கமாக ஆனல் தீர்மானமான தன் பதிலைக் கூறினூர்:

"சின்ன வயசிலிருந்தே நான் அவளை 'இதை இப்படிச் செய்; அதை அப்படிச் செய்யாதே'-என்றெல்லாம் உத்தரவு போட்டோ, அதட்டியோ வளர்க்கலே. அவள் என் இஷ்டப்படி வளர்ந்தாள் என்பதை விடத் தன் இஷ்டப்படி வளர்ந்தாள் என்பதே சரி! பெண்ணுரிமை, பெண் விடுதலைன்னு பேசறதோட விட்டுவிடாமல் அவளுக்கு இந்தச் சுதந்திரத்தை எல்லாம் நான் உண்மையிலேயே கொடுத்தேன்"—

"ஆனலும் இப்போ அவள் நீங்க சொல்றதைக் கேட்பாள்னே எனக்குத் தோன்றுகிறது"—

"இந்த விஷயத்தில் அவள் சொல்வதை நான் கேட்கத் தயாராயிருக்கிறேன். உங்கள் மகனை அவளுக்குப் பிடித்து அவள் சரி என்ருல் தாராளமாகத் திருமணம் செய்து கொள்ளலாம். உங்கள் மகனும் அவளைக் காதலித்து அவளும் உங்கள் மகனைக் காதலித்தால் எனக்கு ஆட்சேபணையே யில்லை. இது அவள் வாழ்க்கை. அவள் தீர்மானப்படி நடக்கும். என் விருப்பம்னு எதையும் அவள் மேல் நான் திணிக்கமாட்டேன். நீங்கள் உதயா பல்கலைக்கழகத்திற்குப் போய்ச் சுலட்சணுவையே பார்த்துப் பேசுங்களேன்"—

அவருடைய திட்டவட்டமான இந்தப் பதிலைக் கேட்டு வேறு வழியின்றி அவரிடம் சொல்லி விடைபெற்றுக்கொண்டு உதயா பல்கலைக்கழகத்துக்குப் புறப்பட்டார் தர்மராஜ்.

தனக்கு வேண்டியவரும், உறவினருமான டீன் வீட்டில் இருந்து கொண்டு டீன் மூலமே சுலட்சணுவைக் கூப்பிட் டனுப்பினுர் அவர். டீனிடம் தர்மராஜன் ஆதங்கப்பட்டார்:

"இந்த விஷயம் இவ்வளவு பெரிசாக ஆகும்னே நான் நினைக்கலே. இந்தப் பொண்ணைச் சம்மதிக்க வைக்கலேன்ஞ என் 'ஸன்' ஞேட ஃப்யூச்சரே போயிடும் போலிருக்கு"—

"கொஞ்சம் ஹார்டு நட். இவ வழிக்கு வர மாட்டாள்னு நினைக்கிறேன். 'உன் பணத்துக்கும் குணத்துக்கும் அழகுக் கும் ஆயிரம் பொண்கள் போட்டி போட்டுக்கிட்டு வருவாங்கடா. இவளை மறந்து தொலை'ன்னு நானே கனகராஜுக்கு இங்கே அட்வைஸ் பண்ணினேன். அவன் கேட்கலே"—

"இதில் அவன் ஏறக்குறைய 'மெண்டல்' ஆயிட் டான்னே சொல்லலாம்."

வீராசாமியோடு சுலட்சணு டீன் வீட்டுக்கு வந்தாள். அவர்கள் இருவரும் இப்படித் தன்னைக் கூப்பிட் டனுப்பியது அவளுக்கு அறவே பிடிக்கவில்லை என்று அவள்

வந்த தோரணையிலேயே தெரிந்தது. டீனின் மிரட்டலான பாணியை அவள் வெறுத்தாள்.

பல்கலைக்கழக டீன் தர்மராஜைக் 'கனகராஜின் தந்தை' என்று அவளுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

"என் குடும்பத்தின் எதிர்காலம் உன் கையிலேதான் இருக்கும்மா...நீ கொஞ்சம் பெரிய மனசு பண்ணி...?"

"ரொம்ப ஸெண்டிமெண்டலாப் பேசறீங்க. விஷயத்தை அறிவு பூர்வமாக் காரண காரியத்தோட நீங்க சிந்திக்கணும். வெறும் உணர்ச்சி பயன்படாது."

"மெட்ராஸ் போய் உங்கப்பாவைக்கூடப் பார்த்தேன். அவர்தான் உன்னைப் பார்த்துப் பேசச் சொன்னார்."

"அவரை எதுக்காகப் போய்ப் பார்த்தீங்க...?"—

முடிந்தவரை விவரமாகத் தர்மராஜூம், டீனும் அவளுக்கு விவரித்தார்கள். அவளால் கைவிடப் பட்ட கனகராஜின் பரிதாப நிலைமையையும் எடுத்துச் சொன்னார்கள். அவள் எந்த உணர்ச்சியையும் காண்பிக்காமல் அதை எல்லாம் பொறுமையாகக் கேட்டாள்.

சுலட்சணா அதுவரை வெளியே உட்கார்த்திவிட்டு வந்திருந்த வீராசாமியைப் போய் அழைத்து வந்தாள். அவர்களுக்கு அவனை அறிமுகப்படுத்தினாள். தன் வலது கையை உயர்த்திக் காட்டி, "இவர் என்னைக் காதலிப்பதற்கும் நான் இவரைக் காதலிப்பதற்கும் அடையாளமாக 'எங்கேஜ்மெண்ட்' ரிங் கூடப் போட்டுக் கொண்டிருக்கேன். செப்பு மோதிரம்தான். இதே விரலில் அணிய உங்க ஸன் ஒரு வைர மோதிரமே கொண்டு வந்து தந்தார். அதை நான் விரல்லே போட்டுக்கலே. உடல் ஊனமுற்றோர் நிதிக்காக ஏலம்விட்டுப் பணம் திரட்டிக் குடுத்துட்டேன். ஐ'ம்பீல் வெரி ஸாரி...நீங்க

என்னை மன்னிக்கணும். நான் உங்க ஸன்னைக் காதலிக்கலே. காதலிக்கிறது—உடம்பின் அழகு, பண வசதி, இதை எல்லாம் பொறுத்தது என்று நான் நம்பவும் இல்லே. நான் எதிர்பார்க்கிற சில குணங்கள் யாரிட்ட இருக்கோ அவங்களிலே ஒருத்தரைத்தான் என் மனசு விரும்பும். அந்தக் குணங்கள் இவரிட்ட இருக்கு. இவரை நான் காதலிக்கிறேன்'' என்றாள்.

''இதிலே மறுபரிசீலனை எதாவது உண்டாம்மா?''

''இல்லே. நிச்சயமாக இல்லே. இப்படி விஷயங்கள் மறுபரிசீலனைக்கு உரியவை அல்ல''—என்று தீர்மானமான பதிலைச் சொல்லிவிட்டுப் புறப்பட்டாள் அவள். ஒரு கை—அதாவது வலதுகை நுனிக்குப் பதில் சட்டைத் துணிமட்டுமே தொங்கும் முகமலர்ச்சியற்ற அந்தக் கறுப்பு இளைஞனைப் பொறாமையும் அருவையும் பொங்கும் பார்வையால் பார்த்தார் தர்மராஜ், நினைத்ததை அடையும் வாய்ப்பைத் தாம் இழந்தாயிற்று என்ற நஷ்டம் அவருள் உறைத்துப் புரியத் தொடங்கியது. வெறும் முக அழகை—பணத்தை—பதவிகளை—அவற்றால் வரும் பவிஷுகள்—செல்வாக்குகள் இவற்றைத் தவிர வேறு எதையுமே பெரிதாக மதித்திராத அந்தப் பரம்பரைப் பணக்காரர் தம் வாழ்வில் முதல் முதலாகக் 'கொள்கைகளும் வீரமுமே அவற்றை எல்லாம் விடப் பெரியவை—மதிக்கத் தக்கவை' என்று பிடிவாதமாகக் கூறிக் கொள்கைகளையும் சமூகத் துணிச்சலையுமே காதலிக்கும் அதிரூபவதியான இளம் பெண் ஒருத்தியைக் கண்ணெதிரே கண்டு அயர்ந்து போனார். இப்போது சுலட்சணா அவர் பார்வையில் இரட்டை மடங்கு அழகியாய்த் தோன்றினாள். அவள் உடம்பை விட உள்ளம் அதிக அழகாகவும் ஆரோக்கியமாகவும் இருப்பது மறுபடியும் அவருக்கு உறுதியாகத் தெரிந்தது.

— முற்றும் —

